
உள்ளே...

# தேடினாலும் கிடைக்காது



## 1

ரிச்சி ரிசார்ட்ஸ்.

நீலகிரியின் ஐ.எஸ்.ஐ முத்திரை குத்தப்பட்ட குளிர், சுற்றுப்புறத்தை பனிப்புகையால் நிரப்பியிருந்தது. மலைச் சரிவின் அடர்த்தியான சிப்ரஸ் மரங்களுக்கு இடையில் ஆங்காங்கே காட்டேஜ்கள் மறைந்திருந்தன. சமவெளியில் நிர்மாணிக்கப்பட்டிருந்த செயற்கை நீச்சல் குளத்தின் வெதுவெதுப்பான வெந்நீரில் சிலர் திளைத்துக்

கொண்டிருந்தார்கள். தூ..ர..த்..தி..ல் கோல்ஃப் ஆடுகிற கும்பல் ஒன்று தெரிந்தது. புற்களின் தலைகளில் பனிக் கிரிஸ்டல்கள் - அபூர்வமாய் வெய்யில் அடிக்கும் போதெல்லாம் மின்னியது.

காட்டேஜ் எஃப் 5-ல் யோகேஷ் - நீரஜா. ஃபோம் கட்டிலில் பக்கம் பக்கமாய் உட்கார்ந்திருந்தார்கள். எதிரில் ஒரு ராட்சஸ சைஸ் லைட் வெயிட் சூட்கேஸ் - வாய் பிரித்து உட்கார்ந்திருக்க - உள்ளே லாண்ட்ரி ட்ரைவாஷ்க்கு போய்விட்டு பெட்ரோல் மணத்தோடு வந்திருந்த ட்ரஸ்களை ஒழுங்காய் அடுக்கிக் கொண் டிருந்தாள் நீரஜா.

நீரஜாவுக்கு இருபத்தியோரு வயது பார்க்கிற இந்த நிமிஷம் வழவழப்பான கார்டன் சிலக் சாரியை உடம்புக்குக் கொடுத்து அதன் முந்தானைப் பகுதியை - இடுப்பின் பால்வண்ண சதைக்குள் சொருகியிருந் தாள். கேஷுவலாக அவள் போட்டிருந்த கோடாலிக் கொண்டைக்கு டிமிக்கி கொடுத்து விட்டு சில முடிக் கற்றைகள் பக்கவாட்டு நெற்றியைத் திருட்டுத்தனமாய் தழுவியிருந்தன. பெரிய கண்களில் மின்சாரம். உதடு களில் பாதரச ஈரம். எங்கே தொட்டாலும் இனிக்கிற ரக உடம்பு.

யோகேஷை வர்ணித்தால் காது கொடுத்துக் கேட்க மாட்டீர்கள். சுருக்கமாய் ஒரு வரி மட்டும். 27 வயது. மாநிறம். மீசையை வழித்து விட்டால் ஹிந்திப்பட ஹீரோ மாதிரியான தோற்றம் காட்டுவான்.

இந்த நிமிஷம் பார்க்கிற போது - டீபாயின் மேல் இருந்த லாவண்டர் நிற டெலிபோனின் பட்டன்களைத்

தட்டி - யாரையோ பிடிக்க முயற்சி செய்து கொண்டிருந்தான்.

''சே! எங்கேஜ்ட் டோன்தான் வருது...''

சூட்கேஸ் ஜிப்பை இழுத்து மூடும் முயற்சியில் இருந்த நீரஜா அவனைப் பார்த்து புன்னகைத்தாள்.

''பிசினஸ் ஹவர்ஸ் அப்பாவோட போன் லைன் கிடைக்கிறது கஷ்டம்தான்.''

''ஏழு நெம்பர் இருக்கு. ஒரு நெம்பர் கூட கிடைக்க மாட்டேங்குதே...''

''வீட்டுக்கு ட்ரை பண்ணிப் பாருங்க...''

''இந்த நேரத்துல... வீட்ல சர்வண்ட்ஸ் மட்டும்தான் இருப்பாங்க.''

''நான் டயல் பண்ணிப் பார்க்கட்டுமா?''

''நீ டயல் பண்ணினா லைன் கிடைச்சுடுமாக்கும்?''

''ஒவ்வொருத்தர்க்கும்... ஒவ்வொரு கைராசி இருக்கே?''

''சரி! பண்ணு பார்க்கலாம்...''

நீரஜா யோகேஷிடமிருந்து ரிஸீவரை வாங்கிக் கொண்டு கோட் பட்டன்களைத் தட்டினாள். தட்டி முடித்ததும் உடனே மலர்ந்தாள்.

''ஓ.. காட்.. இட். ரிங்டோன் போகுது...''

''எங்கே..?''

ரிஸீவரைப் பறித்து காதுக்குக் கொடுத்த யோகேஷ், பற்களைக் காட்டி கண் சிமிட்டினான்.

"நிஜமாவே உனக்கு மச்சம்தான்..."

"பின்னே... அம்மா எது தொட்டாலும் துலங்கும்."

அவள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மறு முனையில் கெட்டியான குரலில் "ஹலோ" சொல்லி கேசவ் வந்தார்.

"மாமா.. நான் யோகேஷ்..."

"யோகேஷா...? உன் போனைத்தான் எதிர்பார்த்துட்டு இருந்தேன். எங்கிருந்து பேசறே...?"

"ரிசார்ட்டிலிருந்துதான்..."

"வெதர் எப்படி...?"

"ஃபைன்..."

"எப்ப அங்கிருந்து கிளம்பறீங்க...?"

"கிளம்பிட்டிருக்கோம்..."

"என்னது... கிளம்பி வர்றீங்களா..? இன்னும் ஒரு வாரம் இருந்துட்டு வரலாமே..?"

"இன்னும் ஒரு வாரமா...? சரியாப் போச்சு. எனக்கு கம்பெனி ஞாபகம் வந்தாச்சு மாமா. பெல் சாம்பிள் என்னாச்சு? மெட்டலர்ஜிகல் டெஸ்ட் ரிப்போர்ட் என்ன சொல்லுது...?"

கேசவ் சிரித்தார். "யோகேஷ்! யூ.. ஆர் எ வொர்க்க ஹாலிக். கம்பெனி; பிஸினஸ் பரபரப்பையெல்லாம் மறந்து பொண்டாட்டியோடு நாலைஞ்சு நாள் பிக்னிக் அனுப்பி வெச்சா... அங்கே போயும் பெல் சாம்பிளா..."

"போதும் மாமா...! ரிச்சி ரிசார்ட்ஸ் ரெண்டு நாளி லேயே அலுத்துப் போச்சு... ட்ரஸ்ஸெல்லாம் பேக்

பண்ணியாச்சு. இன்னும் அரை மணி நேரத்துல பெக்-அவுட் ஆயிடுவோம். ராத்திரி ஒன்பது மணிக்கெல்லாம் வீட்ல இருப்போம்.''

''கார்ல எந்த ப்ராப்ளமும் இல்லையே...?''

''ஒரு ப்ராப்ளமும் இல்லை மாமா... ஆரோக்கியமா இருக்கு.''

''ட்ரைவ் கேர்ஃபுலி... இந்த சீஸன்ல மிஸ்ட் அதிகமாயிருக்கிறதா பேப்பர்ல பார்த்தேன்.''

''கார்லதான் ஹைலோஜன் லாம்ப் இருக்கே.''

''நீரஜா ட்ரைவ் பண்ண ஆசைப்பட்டா, வண்டியைக் குடுத்துட வேண்டாம்.''

''ரிஸீவரை... உங்க... பொண்ணுகிட்ட தர்றேன். நீங்களே சொல்லிடுங்க மாமா'' அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே - நீரஜா யோகேஷிடமிருந்து ரிசீவரை வாங்கி காதுக்குக் கொடுத்தாள்.

''அப்பா...''

''என்னம்மா... பிக்னிக் ஸ்பாட் பிடிச்சுதா?''

''ஃபைன் டாடி...! ஆனா, உங்க மாப்பிள்ளை தான் அப்பப்ப கம்பெனியைப் பத்தியும், பிசினஸ் பத்தியும் பேசி போரடிச்சார்.''

''மாப்பிள்ளையோட ட்யூட்டி கான்ஸியஸைப் பத்தித்தான் நமக்கு தெரியுமே... சரி எத்தனை மணிக்கு கிளம்பறீங்க..?''

''நாலு மணிக்கு...''

''காரை மாப்பிள்ளையே ஓட்டட்டும். நீ ஸ்டியரிங்கைத் தொடக் கூடாது.''

''அப்பா... ப்ளீஸ் கொஞ்ச தூரம் மட்டும்...''

''நோ.. நோ... காட் ரோடு - ட்ரைவிங் எப்பவுமே ரிஸ்க். மாப்பிள்ளை காரை ஓட்டுவார். நீ வேடிக்கை பார்த்துட்டு வந்தா போதும்.''

''அப்பா... ப்ளீஸ்...''

''நத்திங் டூயிங்...''

மறுமுனையில் கேசவ் ரிஸீவரை வைத்து விட்டார்.

யோகேஷ் சிரித்தான்.

''என்ன சொன்னார் உங்கப்பா...? ஸ்டியரிங்கைத் தொடக் கூடாதுன்னு சொன்னாரா..?''

''ஆமா...''

''கவலைப்படாதே...! கோத்தகிரி தாண்டினதும் நீ காரை ஓட்டலாம்.''

''நிஜமா...?''

''நிஜம்மா...!''

''தாங்க்யூ....''

''காப்பி சாப்பிட்டுக் கிளம்பலாமா..?''

''ம்...''

இண்டர்காம் பண்ண காப்பி வந்தது. நீரஜா காப்பியைக் குடித்து விட்டு மிதமாய் மேக்கப் போட்டுக் கொண்டாள். யோகேஷ் உல்லன் கோட்டை மாட்டிக் கொண்டான். ரிசப்ஷன் ஹாலில் இருபது நிமிஷங்கள் பெக்-அவுட் சம்பிரதாயங்களை முடித்துக் கொண்டு - வெளியே நின்றிருந்த காருக்கு வந்தார்கள். காரின்

உச்சந்ததலையில் இருந்த காரியரில் காட்டேஜ் பையன், சூட்கேஸ்களை ஒழுங்காக அடுக்கிக் கட்டியிருந்தான். காரின் உடம்பை சாக்லேட் வண்ணம் போர்த்தியிருந்தது. 'மாருதி 1000!'

யோகேஷ் காரை நகர்த்தினான்.

ஐஸ் காற்று ஓடி வந்து முகத்தில் மோதியது.

''நீரஜா...!''

''ம்...''

''ஸ்கார்ப்பை நல்லா கட்டிக்க... இல்லேன்னா பனிக் காத்துக்கு காது அடைக்கும்.''

''நல்லாத்தான் கட்டியிருக்கேன்.''

கார் ரிசார்ட்டின் சாலைகளை விழுங்கி விட்டு - காட் ரோட்டு வளைவுகளில் இறங்க ஆரம்பித்தது.

ஸ்டீரியோவை ஆன் செய்தாள் நீரஜா. ரஹ்மானின் மேற்கத்திய இசையை ஸ்பீக்கர்கள் சன்னமான டெஸிபலில் கொட்டின. மனங்கள் இசையில் விழித்துக் கொள்ள - பார்வை வெளிப்பச்சையில் நிலைத்துக் கொண்டது.

இமையில் நிமிஷங்கள் கரைந்தன.

'எவ்வளவு நேரம்?'

'தெரியவில்லை!'

சட்டென்று காரின் வேகம் குறைந்த போது தான் 'திடும்' என்று நிமிர்ந்தாள் நீரஜா.

'ஏன் காரை ஸ்லோ பண்றீங்க...?' - கேட்க வாயெடுத்தவள் - ரோட்டைப் பார்த்ததும் கேள்வியைத் தொண்டைக்குள்ளேயே நிறுத்திக் கொண்டாள்.

ரோட்டின் நடுவில் -

பனி மூட்டத்தில் நின்றபடி - காரை நிறுத்தச் சொல்லி இரண்டு கைகளையும் அசைத்துக் கொண்டிருந்தான் ஒரு இளைஞன்.



# 2

மலைப் பாதையின் வளைவிலிருந்து, அந்த 'மாருதி 1000' கார் உற்பத்தியானதும் ரோட்டின் குறுக்கே ஓடிப் போய் - பனிப்புகையில் நின்று கைகளை அசைத்தான் சேதுபதி.

சேதுபதிக்கு வயது இருபத்தைந்திலிருந்து முப்ப துக்குள் இருக்கலாம். லேசாய் முடி கொட்டிய மண்டை, பழுப்பு வெள்ளையில் பேண்ட்டும் அடர்த்தியான நீல நிறத்தில் சர்ட்டும் அணிந்து டை கட்டியிருந்தான். இடது கையில் ஒரு ப்ரீஃப் கேஸ். ப்ரீஃப் கேஸில் ஒட்டப் பட்டிருந்த ஸ்டிக்கர் வாசகம் 'ஹில் அண்ட் ஃபுட் ப்ராடக்ட்ஸ்' என்று சொன்னது.

மாருதியின் வேகம் குறைந்தது. சேதுபதிக்குப் பக் கத்தில் வந்து நின்றது. ட்ரைவிங் சீட் ஜன்னலில் குனிந்தான் சேதுபதி.

''எக்ஸ்யூஸ்... மீ.. வில் யூ.. ட்ராப் மீ... ஸார்...?''

ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிய யோகேஷ் சேதுபதியைப் பார்வையில் வாங்கியதும் நெற்றியில் வியப்பு காட்டினான்.

''டே... டேய்... நீ... சேதுபதி இல்லை...?''

''ஆமா... நீ..?''

''சொல்லு பார்க்கலாம்'' யோகேஷ் தன் கண்களைக் கவ்வியிருந்த குளிர் கண்ணாடியையும் தலைக்கு வைத்திருந்த பனிக்குல்லாவையும் கழற்ற - ஆச்சர்யம் சேதுபதியை தொற்றிக் கொண்டது.

''நீ... நீ... யோகே ''

''யோகேஷ்தான்...''

''என்னடா இப்படிப் பெருத்துட்டே...? மூஞ்சி பூரா 'கன்னா பின்னா'ன்னு சதை போட்டிருக்கு.''

''கல்யாணமாயிடுச்சுல்ல... ஆமா நீ எங்கே போகணும்?''

''கோயமுத்தூர்...''

பின்புறக் கதவின் உட்பக்க லாக்கை விடுவித்தான் யோகேஷ். சேதுபதி உள்ளே ஏறி உட்கார்ந்ததும் - கார் நகர்ந்தது.

''நீரஜா...! இவன் என்னோட காலேஜ்மேட் சேதுபதி.''

''ஹலோ...''

''ப்ளீஸ் டு... மீட்... யூ...''

யோகேஷ் ஒரு வளைவைக் கையாண்டு கொண்டே கேட்டான். ''இந்த அத்துவான இடத்துல எப்படிடா வந்து மாட்டிக்கிட்டே...?''

''அதையேன் கேட்கிற போ...! இந்த 'ஹில் அண்ட் ஃபுட்' கம்பெனியில் ரெப்ரஸன்டேட்டிவா சேர்ந்தாலும் சேர்ந்தேன். நாய் படாத பாடு தான்...''

'''ஹில் அண்ட் ஃபுட் ப்ராடக்ட் கம்பெனியிலா வேலை பார்க்கறே...? நல்ல கம்பெனியாச்சே...?''

''ரெப்யூட்டட் கம்பெனிதான். நல்ல ஸேலரி தர்றான். எல்லாம் ஒ...கே தான்.. ஆனா... போக்குவரத்து வசதியே இல்லாத இடங்களுக்கெல்லாம் போக வேண்டியிருக்கே. இன்னிக்கு என்ன நடந்தது தெரியுமா? இங்கிருந்து ஒரு கிலோ மீட்டர் தூரம் உள்ளே தள்ளிப் போனா... க்ரீன் ப்ளேம் எஸ்டேட்டுன்னு ஒரு இடம் இருக்கு. அந்த எஸ்டேட் ஓனர் என்னோட கஸ்டமர். வழக்கமா நான் இங்கே டாக்ஸியில் வருவேன். திரும்பிப் போறப்ப எஸ்டேட் ஜீப்ல என்னைக் குன்னூர்ல ட்ராப் பண்ணு வாங்க. இன்னிக்குன்னு பார்த்து அந்த ஜீப்ல ஏதோ ப்ராப்ளம். 'நாலரை மணிக்கு ஒரு பஸ் வரும். போனீங்கன்னா பிடிச்சுடலாம்'ன்னு சொன்னாங்க. நான் இங்கே வந்து ஒரு மணி நேரமா காத்துட்டிருக்கேன். பஸ்ஸே வரலை... நேரமாக நேரமாக மனசுக்குள்ளே ஒரு கலக்கம் - பஸ் வருமோ.. வராதோன்னு..! ஏதாவது வண்டி வந்தா நிறுத்தி லிஃப்ட் கேட்க நினைச்சப்ப தெய்வம் மாதிரி நீ வந்தே...!''

யோகேஷ் சிரித்தான்.

''நாம சந்திச்சு.. நாலு வருஷம் இருக்குமா...?''

''அதுக்கு மேலேயே இருக்கும்...!''

''கல்யாணம் ஆயிடுச்சா...?''

''இனிமேத்தான்...''

''ஏதாவது காதல் விவகாரம் உண்டா...?''

''சேச்சே...! இந்த மூஞ்சியை... எவ காதலிப்பா...? மண்டையில் வேற முடி கொட்டுது... அடுத்த வருஷம் என்னை நீ பார்க்கும் போது 'ஆப்பத் தலையா'ன்னு கூப்பிடப் போறே...!''

நீரஜா சிரித்தாள்.

''ஆணுக்கு அழகு வழுக்கைதான்...! மேல்நாட்டுப் பெண்கள்ல பாதிப்பேர் வழுக்கை விழுந்த ஆண்களைத் தான் காதலிக்கறாங்களாம்...!''

''அந்த மோகம்... இந்தியாவுக்கு வரும் போது... எனக்குப் பேரன் பொறந்திருப்பான்.''

காருக்குள் மறுபடியும் சிரிப்பு.

யோகேஷ் கேட்டான்.

''சேது! ஏதாவது சாப்பிட்டியா...?''

''கொலைப் பட்டினி...''

''பிஸ்கெட், ஆப்பிள் இருக்கு. கொறிக்கிறியா?''

''எதைக் கொடுத்தாலும் சரி...''

''பின் சீட்டுக்கு கீழே - ஒரு ப்ளாஸ்டிக் ரெட் பேக் இருக்கும். அதை எடு...''

சேதுபதி எடுத்தான்.

பேக் நிறைய - சிப்ஸ் பொட்டலம், ஆப்பிள், பிஸ் கெட் பாக்கெட் என்று நிரம்பி வழிந்தது.

''ஆஹா..!''

''சாப்பிடு...''

சேதுபதி ஒரு சிப்ஸ் பாக்கெட்டைப் பிரித்தான். வாய்க்குள் அள்ளிப்போட்டு அரைக்க ஆரம்பித்தான்.

''யோகேஷ்...!''

''ம்...''

''நீ மட்டும் சரியான நேரத்துக்கு வராமே இருந்திருந்தா நொந்து நூலாயிருப்பேன். நீ தெய்வம் இல்லை. தெய்வத்தின் தெய்வம்.''

''புலம்பாமே சாப்பிட்றா...''

கார் வளைவுகளில் இறங்க ஆரம்பித்தது. பதினைந்து நிமிஷத்திற்குள் - இரண்டு ஆப்பிள், ஒரு பிஸ்கெட் பொட்டலம், ஒரு சிப்ஸ் பாக்கெட் வயிற்றுக்கு காண்பித்த சேதுபதி - சின்னதாய் ஏப்பம் விட்டு பின் சீட்டுக்கு சாய்ந்தான்.

அதற்குள் நாரைக் கொம்பு பஞ்சாயத்து - சொற்ப குடிசைகளோடு வர - சேதுபதி யோகேஷின் தோளைத் தொட்டான்.

''இங்கே டீ... நல்லாயிருக்கும். சாப்பிட்டுப் போலாமா?''

''சாப்பிட்டாப் போச்சு...''

காரை ஓரமாய் ஒதுக்கி நிறுத்தினான் யோகேஷ். மூன்று பேரும் இறங்கினார்கள்.



# 3

பத்து நிமிஷத்திற்குள் - டீ குடித்து விட்டுப் புறப் பட்டார்கள்.

''சேது! நீ சொன்ன மாதிரி டீ... நல்லாயிருந்தது. இது மாதிரியான டீயை நான் சாப்பிட்டதில்லை.''

சேதுபதி சிரித்தான்.

''இந்த ஏரியாவில் இருக்கிற ஒவ்வொரு டீக் கடையைப் பத்தியும் எனக்குத் தெரியும். கோத்தகிரிக்கு கீழே ஜக்கனாரைன்னு ஒரு இடம். அங்கே ஒரு நாயர் பொண்ணு... வயசு பதினைஞ்சுக்குள்ளேதான். என்னமா டீ போடும் தெரியுமா..?''

கார் மறுபடியும் வளைவுகளில் நீந்தியபடி இறங்க ஆரம்பித்தது. நீரஜா ஜன்னலில் முகம் பதித்துக் கொண்டாள். வளைவுகள் வரும் போது காட்சி பூராவும் அதல பாதாளம். தூரத்து செவ்வகங்களாய் - செங்காவி வீட்டுக் கூரைகள். சுதந்திரப் பறவைகள். அசையும் பனிப்புகை. கரும்பச்சை மரங்கள்.

வெளிச்சம் வீரியம் இழந்து - சுற்றுப்புறம் சரசர வென்று இருட்டிக் கொண்டிருந்த போது -

மாருதி ஒரு மாதிரியாய் முனகியது. ஒரு பக்கமாய் இழுத்த மாதிரி ஓடியது.

யோகேஷ் சுதாரிப்புக்கு வந்து - உடனே பிரேக்கை அழுத்த, கார் ரோட்டைத் தேய்த்துக் கொண்டு ஓரமாய் ஒதுங்கியது, நின்றது .

சேதுபதி கத்தினான்.

''யோகேஷ்! காருக்கு என்ன...?''

''தெரியலை...''

கதவைத் திறந்து கொண்டு இறங்கினான். சுற்றிப் போய் காரின் பின்பக்க வீலைக் குனிந்து பார்த்தான்.

நீரஜா ஜன்னல் வழியாய் தலையை நீட்டி ''என்னாச்சுங்க?'' என்று கவலை ஈஷின முகத்தோடு கேட்க -

யோகேஷ் நிமிர்ந்து ''பங்க்ச்சர்'' என்றான்.

இருட்டு சுற்றுப்புறத்தை விழுங்கிக் கொண்டிருக்க - பனி, சூரியன் மறைந்து விட்ட தைரியத்தில் உற்சாகமாய் கொட்டியது.

சேதுபதி கேட்டான்.

''ஸ்டெப்னி இருக்குல்ல...?''

''இல்ல...''

''என்னது... இல்லையா..? ஸ்டெப்னி இல்லாமே காரை வெளியூர் ட்ரிப்புக்கு எடுக்கக் கூடாது.''

''இருந்த ஒரு ஸ்டெப்னி... ஒர்க்ஷாப்ல வெச்சு திருடு போயிடுச்சு... வேற வாங்கி வைக்கவும் மறந்துட்டேன்.''

கீழே இறங்கி வந்த நீரஜா கையைப் பிசைந்தாள்.

''இப்ப... என்ன பண்றதுங்க...?''

சேதுபதி பங்க்சரான டயரைப் பார்த்துவிட்டு நிமிர்ந் தான்.

''ஒரு வழிதான் இருக்கு... இங்கிருந்து கீழே ரெண்டு கிலோ மீட்டர் தூரம் போனா... 'கன்ரேசி'ன்னு ஒரு ஊர் இருக்கு. அங்கே போய் ஒரு மெக்கானிக்கை கூட்டிட்டு வரணும்.''

யோகேஷ் கேட்டான்.

''யார் போறது...?''

''நீயும் சிஸ்டரும் கார்லயே இருங்க! அந்த வழியா போற ஏதாவது ஒரு வண்டியில் லிஃப்ட் வாங்கிட்டு நான் போய் மெக்கானிக்கை கூட்டிட்டு வர்றேன்.''

யோகேஷ் யோசித்து விட்டு தலையாட்டினான்.

''அதுதான் சரி சேது... அப்படியே இன்னொரு காரி யமும் செய்யணும் நீ...!''

''என்ன...?''

''மெக்கானிக்கை நீ கூட்டிட்டு வந்தாலும் டயரை வல்கனைஸ் பண்ணி மறுபடியும் மாட்றதுக்குள்ளே, ரெண்டு மணி நேரமாவது ஆயிடும். இப்பவே மணி ஏழு. கார் ரெடியாகி நாம புறப்பட பத்து மணியாயிடும். அதுக்கப்புறம் நாம ட்ராவல் பண்ணிப் போகிறது ரிஸ்க். எங்கேயாவது லாட்ஜ்ல தங்கிட்டு காலையில் புறப்பட்டுப் போயிடலாம்.''

''இந்தச் சின்ன ஊர்ல லாட்ஜ் இல்லைன்னு நினைக் கிறேன்.''

''காட்டேஜ் மாதிரி ஏதாவது இருக்கும் பாரு...! அப்படியே இன்னொரு முக்கியமான காரியம்.''

''என்ன...?''

''நீரஜாவோட அப்பாவுக்கு போன் பண்ணி 'ஹெல்ப் அப்' ஆயிட்ட விஷயத்தைச் சொல்லணும். 'ராத்திரி ஊர் வந்து சேரமாட்டோம். காலையில தான் புறப்பட்டு வர்றோம்'ன்னு சொல்லிடணும்.''

''போன் நெம்பர்...?''

''சொல்றேன்... நோட் பண்ணிக்க...''

யோகேஷ் டெலிபோன் எண்ணைச் சொல்ல, கார்க் குள்ளிருந்த சன்னமான வெளிச்சத்தில் நெம்பரைக் குறித்துக் கொண்டான் சேதுபதி.

சாலையோரம் நின்று - ஏதாவது ஒரு வாகனத்துக் காக காத்துக்கிடந்து, அரை மணி நேரத்துக்குப் பிறகு கிடைத்த - ஒரு பைக் ஆசாமி மூலம் புறப்பட்டான்.

சேதுபதியும் அந்த ஆசாமியும் இருட்டில் மறைந்து போக - பைக்கின் சிவப்பு விளக்கு மட்டும் தெரிந்தது. வளைவைக் கடந்ததும் அந்த சிவப்பு விளக்கும் மறைந்தது.

பரவிக் கொண்டிருந்த இருட்டுக்குள் - யோகேஷும், நீரஜாவும் நின்றபடி கவலையோடு ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.



# 4

குளிரில் பத்து நிமிஷ பயணம் மினுக்கும் விளக்கொளியில் - அந்தச் சிறிய கிராமம் வர - இறங்கிக் கொண்டு - பைக் பேர்வழிக்கு ஒரு தேங்க்ஸ் சொல்லி அனுப்பி விட்டு மெல்ல நகர்ந்தான் சேதுபதி.

கடைவீதி சின்ன கலகலப்போடு இருந்தது. ஒரு மளிகைக் கடையில் பெண்கள் கூட்டம். ரிக்கார்டிங் சென்டரில் - பாட்டுச் சத்தம் கேட்டது. ரோட்டோரமாய் தீ மூட்டி சிலர் வட்டமாய் உட்கார்ந்து குளிர் காய்ந்து கொண்டிருந்தார்கள். காற்றில் பேக்கரி மணம்.

சேதுபதியின் கண்கள் ஒரு ஆட்டோமொபைல்ஸ் வொர்க் ஷாப்பைத் தேடியது. பார்வைக்கு எதுவும் தட்டுப்படாமல் போகவே -

எதிரே வந்த ஒரு நபரிடம் விசாரித்தான்.

போர்வைக்குள் கதகதப்பாய் இருந்த அந்த ஆசாமி ''ஆட்டோமொபைல் வொர்க்ஷாப்பா...?'' என்று வாக்கியத்தை இழுத்து யோசித்து விட்டு பின் வாயைத் திறந்தார்.

''இன்னும் கீழே இறங்கிப் போகணும். அடுத்த பெண்டில் திரும்பினா வலது பக்கம் சின்னதா ஒரு சந்து வரும். அந்த சந்துக்குள்ளே ஒரு ஒர்க்ஷாப் இருக்கு.''

''தாங்க்ஸ்...''

சேதுபதி அவர் சொன்ன வழியில் நடந்தான். இன்னும் கொஞ்ச நேரம் போனால் பனியின் அடர்த்தி அதிகமாகி விடலாம் போல் தோன்றியது. ரோட்டோரக் கடைகள் சாத்தப்பட்டுக் கொண்டிருந்தன.

நடையை எட்டிப் போட்டான்.

கீழே இருந்த வளைவைத் தொடுவதற்குள் ஐந்து நிமிஷம் கரைந்து போயிருந்தது.

'சந்து எங்கே...?'

தேடினான்.

ஒளிந்து கொண்டு தெரிந்தது அது. குடியிருப்பு பகுதி போல் தோன்றியது. நெருக்கமாய் வீடுகள், மின்சாரம் தவறியிருந்ததால் அரிக்கேன் விளக்குகள் வெளிச்சப் புள்ளிகளாய் தெரிந்தன.

சந்துக்குள் நுழைந்தான்.

திண்ணையில் - கம்பளி போர்த்திய ஒரு பெரியவர் சுருட்டு வாசனையோடு தெரிந்தார்.

''அய்யா... இங்கே வொர்க் ஷாப்..?''

அவர் உள்ளே கையைக் காட்ட -

சேதுபதி இருட்டில் ஜாக்கிரதையாய் நடந்தான்.

ஒரு நிமிஷ நடை.

மெல்லிய வெளிச்சத்தில் அந்த போர்டு தெரிந்தது.

'பஷீர் ஆட்டோ கேரேஜ்.'

பக்கத்து மரக்கிளையில் டயர்கள் தொங்க -

ஒரு காக்கி சட்டைப் பையன் - வொர்க் ஷாப்பின் பெரிய தகரக் கதவை கெட்ட வார்த்தை ஒன்றைச் சொல்லி இழுத்து சாத்த எத்தனித்துக் கொண்டிருந்தான்.

இன்னும் ஓரிரு நிமிஷம் தாமதமாக வந்திருந்தால், சேதுபதியைப் பெரிய பூட்டுத்தான் வரவேற்றிருக்கும்.

சேதுபதி நடையை வேகமாக எட்டிப் போட்டுக் குரல் கொடுத்தான்.

''தம்பி... ஒரு நிமிஷம்...''

முக்கால்வாசிக் கதவைச் சாத்திய நிலையில் பையன் திரும்பிப் பார்த்தான்.

''என்ன ஸார் வேணும்...?''

''மெக்கானிக் யாருமில்லையா?''

''அண்ணன் அப்பவே போய் விட்டார் ஸார். எல் லாத்தையும் உள்ளே வெச்சுட்டுப் பூட்டிட்டிருக்கேன். வண்டி கொண்டாந்திருக்கீங்களா?''

''கார் பாதி வழியில் பங்ச்சராகி நிக்குது. மெக்கானிக் கைக் கூட்டிட்டுப் போகணும். பக்கத்தில் வேற வொர்க் ஷாப் இருக்கா?''

''இங்க இது ஒண்ணுதான். மத்ததெல்லாம் டூ வீலர் வொர்க் ஷாப்...'' என்றவன் சில விநாடிகள் கழித்து -

''சாவி குடுக்க அண்ணன் வீட்டுக்குத்தான் போய்ட் டிருக்கேன். நீங்க வந்து அவரைக் கேட்டுப் பாருங்க.''

சொல்லிக் கொண்டே கதவை இழுத்துச் சாத்தி ஒரு பெரிய பூட்டை மாட்டிப் பூட்டினான். பூட்டில் தொங்காத குறையாக இழுத்துப் பார்த்தான்.

''என்கூட வாங்க ஸார்...''

சேதுபதி அவனைப் பின்தொடர்ந்தான்.

பையன் சரிவான பாதையில் வேகமாய் நடந்தான். சேதுபதி மூச்சு வாங்க பின்னால் போனான். குடியிருப்புப் பகுதியை ஊடுருவிக் கொண்டு போய் - குறுகலான தெரு ஒன்றில் நுழைந்து - பச்சை பெயிண்ட் அடித்த கதவைத் தட்டினான்.

தட்.. தட்... தட்...

தட்டிக் கொண்டே குரல் கொடுத்தான்.

''அண்ணே... அண்ணே!''

சில விநாடிகளுக்குப் பின் - கதவு விலகியது.

உயரமாய் - திரட்சியாய் இருந்த அந்த அமாவாசை நிற மெக்கானிக்.

''ஏன்டா இத்தினி லேட்டு...?'' என்று கேட்டுக் கொண்டே வெளிப்பட்டார்.

சேதுபதியைப் பார்த்ததும் மீண்டும் பையனிடம் திரும்பினான்.

''ஸார் யாரு...?''

''கார்ல வேலைன்னு உங்களைப் பார்க்க வந்தார்.''

''காலைல வாங்க.''

அவன் அலட்சியமாய் சொல்ல - பையன் இடைமறித் தான்.

''அண்ணே! கார் பாதி வழில நிக்குது. உங்களைக் கூட்டிட்டுப் போக வந்து இருக்கார்.''

''என்ன ஃபால்ட்டு ஸார்?''

''ரியர் வீல் பங்ச்சர். என் ஃப்ரெண்டும் அவனது ஒய்ஃபும் பாதி வழில கார்ல உக்காந்திருக்காங்க.''

''எந்த இடத்தில்?''

''இங்கிருந்து ரெண்டு கிலோ மீட்டர் இருக்கும்.''

''ஸ்டெப்னி இல்லே..?'' மெக்கானிக் கேட்க - சேது பதி தலையசைத்தான்.

''பெரிய வேலையாச்சே... அங்க போய் வீலைக் கழட் டிட்டு வந்து பங்ச்சர் ஒட்டிட்டு மறுபடி கொண்டு போய் மாட்டணும்.''

''இங்கே உன்னை விட்டா ஃபோர் வீலர் மெக்கானிக் யாரும் இல்லைன்னு சொல்றாங்க. உன்கிட்ட இருந் தாலும் எடுத்துட்டு வந்து மாட்டு. அதுக்குரிய காசை வாங்கிக்கோ. சர்வீஸ் சார்ஜ் எவ்வளவு வேணுமோ கேட்டு வாங்கிக்கோ. சார்ஜைப் பத்திக் கவலைப் படாதே.''

மெக்கானிக் தாடையைத் தேய்த்தான். பின் உள்ளே பார்த்து குரல் கொடுத்தான்.

''மல்லிகா! கதவைத் தாப்பா போட்டுக்க... ரெண்டு மணி நேரத்தில் வந்துடறேன்.''

உள்ளே அந்த மல்லிகா பதிலுக்கு பாத்திரங்களை தபதபவென்று உருட்டினாள்.

மெக்கானிக், பையனின் தோளைத் தட்டி அனுப்பி விட்டு வீட்டுப் பின்பக்கம் போய் ஜாவாவைத் தள்ளிக் கொண்டு வந்தான்.

''வண்டி ரிசர்வ்ல இருக்கு ஸார். நாப்பது ரூபா குடுங்க. பெட்ரோல் போட்டுக்கிட்டு போயிடலாம்.''

''போடலாம். பக்கத்தில் எஸ்.டி.டி. பூத் எங்கிருக்கு?''

''பங்க்லயே எஸ்.டி.டி. பூத் வெச்சிருக்கான். வாங்க.''

மெக்கானிக் கிக்கரை உதைத்தான். நீளமாய்ப் புகையைக் கக்கியது பைக். சேதுபதி பில்லியனில் உட்கார்ந்து கொண்டான்.

இரண்டரை நிமிஷத்துக்குள் ஒரு பெட்ரோல் பங்க்கைத் தொட்டது பைக். சோகையாய் ஒன்றிரண்டு ட்யூப் லைட்டுகள் எரிந்தன. பங்க் கவுண்ட்டரை அடுத்தாற்போல கண்ணாடிக் கூண்டு - 'வெளியூர் தொலை பேசி' என்று சன் கண்ட்ரோல் பிலிமில் பேசியது.

சேதுபதி மெக்கானிக்கிடம் பணத்தைக் கொடுத்து, ''பெட்ரோல் போடு. அதுக்குள்ளே நான் போன் பண்ணிடறேன்'' என்று சொல்லி கவுண்ட்டரை நோக்கிப் போனான்.

பங்க் கவுண்ட்டரில் ஒரே ஒரு ஆசாமி மட்டும் இருந்தான். அவனேதான் பில் எழுதினான். அவனே தான் பெட்ரோல் அடித்தான். நடுவே, சேதுபதியிடம் ''போன் பேசறீங்களா?'' என்று கேட்டு விட்டு - கம்ப்யூட்டர் பில்லிங் சிஸ்டத்தை ஆன் செய்தான்.

சேதுபதி கண்ணாடிக் கூண்டுக்குள் நுழைந்து ரிசீவரைக் கையில் எடுத்தான். யோகேஷ் எழுதிக் கொடுத்த போன் நெம்பர் குறித்து அவன் கொஞ்சமும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை.

வேறொரு எண்ணுக்கு டயலைச் சுற்றி விட்டுக் காத்திருந்தான்.

ர்ரிங்...

ர்ரிங்...

மறுபக்கம் இரண்டொரு ரிங் போய் ரிசீவர் எடுக்கப் பட்டது.

''கதிரேஷா?''

சேதுபதி கேட்டதும் -

''நான்தான்..! என்னாச்சு சேதுபதி...?''

சேதுபதி கிசுகிசுப்பாய்ச் சொன்னான்.

''திட்டப்படி காரை பங்க்சர் பண்ணிட்டேன். யோகேஷும் அவனோட பெண்டாட்டியும் நடுவழியில கையைப் பிசைஞ்சுட்டு நிக்கறாங்க. அடுத்த கட்ட நடவடிக்கைகளை நீ தொடங்கலாம்.''

''இதோ ஆரம்பிச்சிடுறேன். உன்னோட போனுக்காகத் தான் வெயிட் பண்ணிட்டிருந்தேன்.''

''பி... கேர்ஃபுல்! திட்டம் துல்லியமா பிசிறில்லாமே இருக்கணும்.''



# 5

அந்த சாம்பல் நிற அம்பாஸிடர் கார் கூர்க்காவின் சல்யூட்டை வாங்கிக் கொண்டே பங்களா காம்பவுண்ட்

டுக்குள் பிரவேசித்தது. புல்வெளியில் எரியும் மெர்க்குரி விளக்கைத் தவிர போர்டிகோவில் மஞ்சளாய் ஒரு ஃபேன்சி லைட் வெளிச்சத்தை உமிழ்ந்து கொண் டிருந்தது.

போர்டிகோ படியோரமாய்க் கார் ஒதுங்கி நிற்க - கதவை விரித்துக் கொண்டு கேசவ் கீழிறங்கினார்.

''டிரைவர்! காரை ஷெட்ல பார்க் பண்ணிட்டு நீ போகலாம்.''

''சரி ஸார்.''

உள்ளே நுழைந்தார்.

ஹாலைக் கடக்கும் போது வேலைக்காரன் பொன் னையா எதிர்ப்பட்டான்.

''பொன்னையா.. மாப்பிள்ளையும் நீரஜாவும் வந்துட் டாங்களா..?''

''இல்லைங்கய்யா... சின்னம்மாவும், மாப்பிள்ளையும் இன்னும் வரலை....''

''வரலையா?'' நெற்றி வரிகளோடு யோசித்துக் கொண்டே அவருடைய அறையை நோக்கி சற்றே கவலையாய் நடந்தார்.

'இன்னுமா வரவில்லை?'

டையைத் தளர்த்தினார். உடைகளை ஹேங்கரில் மாட்டியவர் பாத்ரூமில் நுழைந்து கெய்சரிலிருந்த வெந் நீரில் குளித்து - புத்துணர்ச்சியை ஏற்றிக் கொண்டு டைனிங் டேபிளுக்கு வந்தார்.

பொன்னையா டிபன் எடுத்து வைத்திருந்தான்.

கையைக் கட்டி நின்றிருந்த பொன்னையாவைப் பார்த்து, "பால் எடுத்து வெச்சிட்டு நீ கிளம்பு..." என்றார்.

"சரிங்கய்யா."

தலையசைத்து விட்டு - நகர்ந்தான் பொன்னையா. கேசவ் யோசித்துக் கொண்டே சாப்பிட்டார். 'அவர்கள் புறப்பட்ட நேரத்துக்கு இந்நேரம் வந்து சேர்ந்திருக்க வேண்டுமே!' இரண்டு வாய் சாப்பிட்டவர் பின் சாப்பிடப் பிடிக்காமல் வாஷ்பேசினில் கை கழுவி -

டவலால் உதட்டை ஒற்றிக் கொண்டே ஹாலுக்குள் வந்த போது -

டெலிபோன் பசித்த குழந்தையாய் வீறிட ஆரம் பித்தது.

ரிசீவரை எடுத்துக் காதில் வைத்தார் கேசவ்.

"ஹலோ.."

"வணக்கம் மிஸ்டர் கேசவ்."

அவருக்குப் பரிச்சயமில்லாத ஒரு குரல் ரிசீவரில் வழிந்தது.

"வணக்கம். யாரு நீங்க?"

"உங்க மகளையும், மருமகனையும் பத்தி ஒரு தகவல் சொல்ல வேண்டி இருந்தது. அதான் ஃபோன் பண்ணி னேன்."

கேசவ் நிமிர்ந்தார்.

"யாரு நீங்க...? என்ன தகவல்?"

"நீங்க மொதல்ல கேட்ட கேள்விக்கு என்னால பதில் சொல்ல முடியாது. ரெண்டாவது கேட்ட கேள்விக்கு மட்டும் பதில் சொல்றேன்."

கேசவ் குழப்பத்தோடு ரிசீவரைப் பார்த்தார். எதிர் முனைக்காரன் பேச்சு இயல்பாய் இல்லை.

''சொல்ல வந்த விஷயத்தை சுத்தி வளைக்காம சொல்றீங்களா..?''

அவன் சிரித்தான்.

''அதில் எனக்கு ஒண்ணும் ஆட்சேபனை இல்லை. ஆனா அதிர்ச்சியான விஷயங்களை எடுத்த எடுப்பில் பட்டுன்னு போட்டு உடைக்கக் கூடாதுன்னு சொல்லுவாங்க. அதனாலதான் பீடிகை போட்டு பேசறேன்.''

லேசாக மனதில் பதட்டம் அரும்ப - ''அதிர்ச்சியான விஷயமா?''

அவன் தொடர்ந்தான்.

''இன்னிக்கு ராத்திரி வீடு திரும்பறதா இருந்தாங்களே உங்க மகளும், மருமகனும்...! அவங்க வந்து சேர மாட்டாங்க.''

கேசவ் திடுக்கிட்டு நிமிர்ந்தார்.

''ஏன், ஏன்?''

''ஏன்னா அவங்க இப்ப என்னோட கஸ்டடியில இருக்காங்க...''

''ஏய்.. யார் நீ..? எதுக்கு... அ... அவங்களை..?''

அவன் சிரித்தான். ''மூணரை மணிக்கு காட்டேஜை விட்டுக் கிளம்பினாங்க...! வழியிலேயே மடக்கி அவங்களை நாங்க கடத்திட்டோம்.''

கேசவ் பதறினார்.

''அவங்க.. அவங்க... எங்கிருக்காங்க..? எப்படி இருக்காங்க..?''

''இந்த நிமிஷம் வரைக்கும் பத்திரமாத்தான் இருக்காங்க. மேற்கொண்டு அவங்க பத்திரமா இருக்கிறது உங்க கையில தான் இருக்கு.''

''எ... என்ன சொல்ற.. நீ...''

''சொல்லலை... கேக்கறேன்! இன்னும் ரெண்டு மணி நேரத்தில் அஞ்சு லட்ச ரூபாய் பணம் என் கைக்கு வரணும். அப்படி வரலைன்னா உங்க மகளும், மருமகனும் உயிரோட திரும்பி வரமாட்டாங்க.''

பதட்டமாய் அவர் குரல் கொடுத்தார்.

''இந்த ராத்திரி நேரத்துல திடீர்னு அஞ்சு லட்ச ரூபாய்க்கு நான் எங்கே போவேன்?''

எதிர்முனையில் பேசுபவன் வாய்விட்டுச் சிரித்தான்.

''தகுதியில்லாத ஆட்கள்கிட்டே நான் எந்த பேரமும் வெச்சுக்க மாட்டேன். எனக்குத் தெரியும்.''

''திடீர்னு இவ்வளவு பெரிய தொகையைக் கேட்டா... எப்படிப் புரட்ட முடியும்? கொஞ்சம் அவகாசம் குடு...''

''அவகாசம் எதுக்கு? போலீசுக்குப் போறதுக்கா? அவங்க என்னை ட்ரேஸ் பண்றதுக்கா? இந்த மாதிரி எண்ணமெல்லாம் உங்க மனசுல வந்ததுன்னா அது உங்க மகளோட, மருமகனோட உயிர்களுக்கு விபரீதமா முடியும்!''

''நாளைக்கு காலையில்... பாங்க்ல இருந்து... பணம் எடுத்துத் தர்றேன்.''

"ஊஹும்! இன்னும் ரெண்டு மணி நேரத்தில் அஞ்சு லட்சம் எனக்கு வேணும். எனக்குத் தெரியும் - உங்களால தர முடியும்! அப்படி முடியலைன்னா அவங்களை நீங்க உயிரோடு பார்க்க முடியாது."

அவன் ரிசீவரை சாத்தினான்.

பதட்டமும், அதிர்ச்சியும் கேசவ்வின் இதயப் பரப்பை ஆக்ரமித்தது.



# 6

மெக்கானிக் காட்டன் வேஸ்ட்டினால் டயர் கறையைத் துடைத்துக் கொண்டவன், ஸ்பானர்களை 'டூல் கிட்'டில் போட்டு பைக்கில் மாட்டினான்.

நீரஜா குளிர் தாங்காமல் இன்னொரு சால்வையை மேலே போர்த்திக் கொண்டாள்.

சேதுபதி, மெக்கானிக்குடன் பேசிக் கொண்டே பானெட்டில் சாய்ந்து சாதுவாய் நின்றிருந்தான். யோகேஷ் பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

அதைப் பாக்கெட்டில் சொருகிக் கொண்டே "ஸ்டெப்னி தயாரா வெச்சுக்காம லாங்கா... கிளம்பாதீங்க ஸார்" என்று சொல்லிவிட்டு பைக்கின் கிக்கரை உதைத்தான்.

பைக் ஸ்டார்ட் ஆகி தடதடத்து வளைவில் மறைந்தது.

''மணி எத்தனை?'' சேதுபதி யோகேஷிடம் கேட்டான்.

''பதினொன்றரை...''

''இந்நேரத்துக்கு மேல் நாம ட்ராவலை கன்ட்டினியூ பண்றது சிரமந்தான் இல்லையா...?''

''அதனாலதான் நான் மாமாவுக்கு போன் பண்ணி மெஸேஜ் பண்ணச் சொன்னேன்...! போன் யார் எடுத்தது...?''

''உன்னோட மாமாதான்.''

''என்ன சொன்னார்...''

''கார் ரிப்பேர் ஆயிடுச்சு. அவங்க இன்னிக்கு ராத்திரி வரமாட்டாங்கன்னு சொன்னேன். எங்கே, என்னன்னு விசாரிச்சார். மெக்கானிக் இருக்கான். நோ ப்ராப்ளம். ஆனா ரொம்ப லேட் ஆயிடுங்கறதாலே நைட் ஸ்டே பண்ணிட்டு காலையில கிளம்பப் போறாங்கன்னு சொன்னேன்! அவரும் நைட் ட்ராவல் வேண்டாம். தங்கியிருந்துட்டு காலைல வாங்கன்னு சொன்னார்.''

''மொதல்ல ஒரு லாட்ஜ் பிடிக்கணும்.''

யோகேஷ் சொல்லிக் கொண்டே - காரில் அமர்ந்து ஸ்டியரிங் பிடித்தான்.

பின் சீட்டில் அமர்ந்த நீரஜா, சேதுபதியை ஏறிட்டாள். ''நீங்க போய் மெக்கானிக்கை கூட்டிட்டு வந்தீங்களே.. அந்த ஊரில் நல்ல லாட்ஜ் இருக்குமா?''

''அங்க டீசன்டான லாட்ஜ் கிடைக்கிறது சந்தேகம்தான். இன்னும் அரை மணி நேரம் ட்ராவல் பண்ணினா கோத்தகிரி வந்துடும். அங்க தங்கறது பெட்டர்.''

''சேதுபதி சொல்றதுதான் கரெக்ட்.''

சொல்லிக் கொண்டே - யோகேஷ் இக்னீஷியனை உசுப்பி ஹெட்லைட்டை ஆன் செய்ய - வெளிச்சம் கத்தி வீச்சாய் பாய்ந்து இருட்டைத் துரத்தியது.

'லைப் பாதையில் இறங்கு முகமாக விரைய ஆரம்பித்தது கார். ஏற்றிவிட்ட கண்ணாடி ஜன்னல் களின இடுக்குகளைக் கீறிக் கொண்டு பிரவேசித்த குளிர்காற்று உடம்பெங்கும் குத்தூசிகளைப் பதித்தது.

முப்பத்தைந்து நிமிஷ பயணத்துக்குப் பிறகு மெலிதாய் - முணுமுணுக்கிற மாதிரி மினுக்கும் சின்னச் சின்ன வெளிச்சப் புள்ளிகள் தெரிய ஆரம்பித்தன. ''கோத்தகிரி வந்தாச்சு'' என்று சோம்பல் முறித்த சேதுபதி, லாட்ஜுக்கு வழி சொன்னான். கார் போயிற்று.

அந்த உயரமான ஹோட்டலின் அண்டர் கிரவுண்ட் பார்க்கிங்கில் கார் போய் நின்றதும் இறங்கிக் கொண்டார்கள்.

ரிசப்ஷனிஸ்ட் இளைஞன் - கனமான ஸ்வெட்டரில் இருந்தான். சேதுபதியைப் பார்த்துப் பரிச்சயமாகப் புன்னகைத்தான்.

யோகேஷும், நீரஜாவும் பாலிமர் நாற்காலியில் காத்திருக்க - சேதுபதி லெட்ஜர்களில் கையெழுத்தைப் போட்டு, சாவியை வாங்கிக் கொண்டு வந்தான்.

நாலைந்து முறை பஸ்ஸரை அழுத்திய பிறகு தூக்கக் கலக்கத்துடன் ஒரு லாட்ஜ் பாய் வந்தான்.

க்ரௌண்ட் ஃப்ளோரில் கடைசியிலிருந்த இரண்டு அறைகளை ஆக்ரமித்தார்கள். நீரஜா உடம்பை முறுக்கி அழகாய் கொட்டாவி விட்டாள்.

''தூக்கம் தூக்கமா வருது.''

சேதுபதி புன்னகைத்தான்.

''நல்லா ரெஸ்ட் எடுங்க சிஸ்டர். காலைல பார்க்கலாம். குட்நைட் போத் ஆஃப் யூ...''

''குட் நைட்...''

யோகேஷ் கதவைத் தாளிட்டுக் கொண்டதும் - அடுத்த அறைக்கு வந்தான். பைஜாமாவுக்கு வேகமாய் மாறி, அறையிலிருந்து வெளிப்பட்டு - யோகேஷ், நீரஜா தங்கியிருந்த பக்கத்து அறையை ஒரு தடவை பார்த்து விட்டு -

வராந்தாவில் வேகமாய் நடக்க ஆரம்பித்தான்.



# 7

கதிரேஷ் கழுத்தில் மப்ளரும், உடம்பில் சால்வையுமாய் டெலிபோனுக்குப் பக்கத்தில் காத்திருந்தான்.

நிமிஷங்கள் நழுவிக் கொண்டேயிருக்க இடையில் எலக்ட்ரிக் ஸ்டவ்வில் டீயைக் கொதிக்க வைத்து - கொஞ்ச கொஞ்சமாய் உறிஞ்சிக் கொண்டு தூக்கத்தை விரட்டினான்.

சரியாய் 12.10க்கு டெலிபோன் வாயைத் திறந்தது.

ரிஸீவரை அள்ளினான்.

"ஹலோ..."

"நான் சேதுபதி!"

"சொல்லு."

"அங்க என்னாச்சு...?"

"திட்டப்படி முதல்கட்டம் முடிஞ்சது. அந்த ஆள் கேசவ்வை மிரட்டி வெச்சுட்டேன். அஞ்சு லட்ச ரூபாய் டிமாண்ட் பண்ணியிருக்கேன். அங்க என்ன நில வரம்..?"

"ரெண்டு பேரையும் ஹோட்டல்ல ரூம் எடுத்து தங்க வெச்சிருக்கேன். இனி காலைல எட்டு மணிக்குத்தான் இங்கிருந்து கிளம்புவாங்க."

"ஸோ, திட்டத்தோட அடுத்த கட்டத்தைத் துவக் கலாம்?"

"ம்... தாராளமா.."

"கேசவ் போலீசுக்குப் போயிட மாட்டாரே...?"

"கண்டிப்பா மாட்டார்."

"பணத்தை வாங்கறப்ப குழறுபடி ஆயிடக் கூடா தேன்னு பயப்படறேன்."

''ரிஸ்க்கைப் பார்த்தா சம்பாதிக்க முடியாது. திட்டப்படி நடத்து.. ரிசீவரை வெச்சுடறேன்.''

சேதுபதி ரிசீவரைச் சாத்தினான்.

ஒரு நிமிடம் கழித்து - கதிரேஷ் கேசவின் நம்பரைச் சுழற்ற ஆரம்பித்தான். மறுமுனையில் ரிங் போக ஆரம்பித்தது.

இரண்டாவது ரிங்கிலேயே ரிசீவரை வாரியெடுத்து -

''நா.. நான் கேசவ் பேசறேன்...'' என்று பதட்டப் பட்டார் கேசவ்.

கதிரேஷ் மெலிதாய்ச் சிரித்தான். ''பணத்தை ரெடி பண்ணிட்டீங்களா?''

அவர் பதில் சொல்ல லேசாய்த் தயக்கம் காட்டுவதை உணர்ந்ததும் சட்டென்று இறுக்கமான குரலுக்கு மாறினான் கதிரேஷ்.

''நோ ப்ராப்ளம்... மகளோட, மருமகனோட உயிரை விட உங்களுக்குப் பணம்தான் பெரிசு போலிருக்கு.''

''நோ... ஓ..!''

''அப்புறம்...?''

''பணத்தை ரெடி பண்ணிட்டேன்.''

''இது புத்திசாலித்தனம்.''

''பணத்தை... எங்க கொண்டு வந்து தரணும்னு சொல்லு.''

''சொல்றேன்...''

''அதுக்கு முன்னால என்னோட மகளையோ... மரு மகனையோ பேசச் சொல்லு.''

கதிரேஷ் சிரித்தான்.

''எதுக்கு?''

''அவங்க உன் கஸ்டடிலதான் இருக்காங்கன்னு நான் எப்படி...''

''நம்பறதுன்னு கேக்கறீங்களா...? ஸாரி... அவங்களை நான் பேசச் சொல்ல மாட்டேன். அ[illegible] ரிச்சி ரிசார்ட்ஸ் போனதை நம்பறீங்களா...? [illegible] ருந்து மத்தியானம் மூணரை மணிக்கு மேல கிள[illegible]னதை நம்பறீங்களா? அதே மாதிரி இதையும் நீங்க நம்பித்தான் ஆகணும். உங்க ஜென்ம ராசி என்னன்னு எனக்குத் தெரியலை. ஆனா இன்னிக்கு உங்களுக்கு தினப்பலன் என்னன்னு என்னால சொல்ல முடியும். இழப்பு! நான் சொல்றபடி கேட்டீங்கன்னா பணத்தை மட்டும் தான் இழப்பீங்க. நீங்களாகக் கன்னாபின்னான்னு யோசிக்க ஆரம்பிச்சா. உங்க மகளோட, மருமகனோட உயிரை இழப்பீங்க.''

''நோ... மறுபடி மறுபடி அதைச் சொல்லாதே... பணத்தை எங்கே கொண்டு வரணும்ன்னு சொல்லு.''

''பணத்தை ப்ரீஃப்கேசில் போட்டுக்கங்க. உங்க காரை எடுத்துக்கிட்டு நேரா தடாகம் ரோட்டுக்கு வாங்க. கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸையும் பெட்ரோல் பங்க்கையும் தாண்டி வந்தீங்கன்னா ஒரு சாலை பிரியும். அந்த சாலையில் ஐம்பதடி தூரம் உள்ளே வந்தீங்கன்னா வலது பக்கமா மரத்தடியில் ஒரு பைக் நிற்கும். அந்த பைக்கின் பாக்ஸ் கேரியர்ல ப்ரீஃப்கேசை வெச்சிட்டுத் திரும்பிப் போக ஒரே ஒரு நிமிஷம்தான் உங்களுக்கு டயம் தருவேன். அதுக்கு மேல நீங்க பராக்கு பார்த்தீங்கன்னா நான் அந்தப் பணத்தைத் தொட மாட்டேன். நாளைக்கு

அவங்க பொணத்தைத்தான் அனுப்புவேன். போலீசோட உதவியையோ அல்லது ப்ரைவேட் டிடெக்டிவ்ஸோட உதவியையோ நீங்க நாடினாலும் அவங்களுக்கு அதே கதிதான்.''

''இல்ல... நீ சொன்னபடியே அங்க கொண்டு வந்து பணத்தை வைச்[illegible]றேன். நீரஜாவையும், யோகேஷை யும் எதுவும் பண்[illegible]தே.''

''புறப்பட்டு வாங்க.[illegible]ங்களுக்காக அங்க பைக் காத் திட்டிருக்கு.''

ரிசீவரைச் சாத்தினான் கதிரேஷ்.

கழற்றி வைத்த - பைக்கின் ஒரிஜினல் நம்பர் ப்ளேட் மேஜையில், டெலிபோனுக்கு பக்கத்தில் கிடந்தது.

ரூமைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்தான்.

போகஸ் நம்பர் பிளேட்டை பதித்துக் கொண்டு - பைக் விசுவாசமாய்க் காத்துக் கொண்டிருந்தது.

பைக்கில் பரவி ஜெர்கின் ஜிப்பை முழுசாக மேலே ஏற்றி விட்டுக் கொண்டவன் அடர்த்தியாய்க் கறுப் படிக்கும் கூலிங் கிளாசை நாசியின் மேல் முனையில் உட்கார வைத்தான். கிக்கரை உதைக்க - தடதடவென்று கதறியது பைக்.

ஹெட்லைட்டை 'டிம்' மோடில் போட்டுக் கொண்டு வெளியே வந்தான். பைக் வேகம் பிடித்தது.

ஐந்து நிமிஷங்கள் முடிவதற்குள் தடாகம் ரோட்டை எட்டிப் பிடித்தான்.

கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸும் பெட்ரோல் பங்க்கும் நொடியில் பின்னால் கரைய - இடது பக்கப் பாதையில்

திரும்பி - சற்று தொலைவில் இருந்த அந்த மரத்தின் ஓரமாய்க் கொண்டு போய் பைக்கை அணைத்தான்.

ஸ்டாண்ட் போட்டான்.

வீதி, இருட்டைத் தின்றிருந்தது. அருகாமை ட்யூப் லைட்கள் உயிர் இழந்திருக்க வெகு தொலைவில் ஒன்றிரண்டு விளக்குகள் சோகையாய் மினுக்கின.

ஆள் நடமாட்டம் மைனஸ்.

கதிரேஷ் பைக்கை விட்டு விலகி வந்தான்.

மணிக்கட்டை உயர்த்திப் பார்க்க -

'1.05'

- என்று ரேடியம் பச்சையாய்ப் பேசியது.

எதிர்சாரியில் இருந்த ஆஞ்சநேயர் கோயிலின் தூண் ஒன்றின் ஓரமாய்ப் போய் ஒதுங்கி நின்று கொண்டான்.

கேசவ்வின் காரை எதிர்பார்த்து தெருவின் முனையிலேயே கண்கள் நிலைத்திருந்தான்.

விநாடிகள் கூட்டம் கூட்டமாய்க் கரைந்து நிமிஷங்களாயின.

1.06...

1.07...

1.08...

1.09 - ஆன போது தெருமுனையில் ஒரு கொத்து மஞ்சள் வெளிச்சம் விழுந்தது. கதிரேஷ் உஷாரானான்.

ஆனால் -

அந்த வெளிச்சம் காரின் ஹெட்லைட் போலத் தோன்றவில்லை. கார் சத்தமும் கேட்கவில்லை.

வெளிச்சத்தின் அடர்த்தி அதிகரித்து, தெருமுனையில் மொத்தமாய்க் குவிந்த போது -

கதிரேஷ் லேசாய்த் திடுக்கிட்டான்.

டார்ச் லைட்களுடன் இரண்டு போலீஸ் யூனி ஃபார்ம்கள்.

நேராய் அவன் இருந்த திசையை நோக்கி நெருங்கி வர ஆரம்பித்தது.



# 8

பக்கத்தில் வந்த போது - அவர்கள் பீட் கான்ஸ் டபிள்கள் என்று தெரிந்தது. கதிரேஷுக்குள் திக்திக் கென்று பரபரப்பு துவங்கிக் கொண்டது. வியர்த்தான்.

'இந்தச் சமயம் பார்த்துக் கார் வந்து விட்டால் என்ன செய்வது...?'

'சேதுபதி நாலைந்து நாட்கள் தொடர்ந்து கண காணித்து விட்டுத்தானே சொன்னான் - பனிரெண்டரை மணிக்கெல்லாம் பீட் கான்ஸ்டபிள்கள் இந்த ஏரியாவைக் கடந்து விடுவார்கள் என்று' -

கதிரேஷுக்கு லேசாய் எரிச்சல் அரும்பியது.

'இன்றைக்குப் பார்த்து ஒரு மணிக்கு மேல் ரோந்து வருகிறார்கள்!'

'என்ன செய்ய...?'

தவிப்புடன் அவர்களைப் பார்த்தான்.

'அவர்கள் போகிற வரைக்கும் கேசவ் வராமல் இருந் தால் பரவாயில்லை.'

கையிலிருந்த டார்ச் வெளிச்சம் - கான்ஸ்டபிள்கள் கைவீசி நடப்பதற்கேற்ப தாறுமாறாய் அலைந்தது.

கான்ஸ்டபிள்கள் இன்னமும் சமீபித்த போது -

வெளிச்சச் சிதறல் மரத்தடியில் நின்றிருந்த பைக்கின் மேல் விழுந்தது. பைக்கின் சில்வர் பாகங்கள் பளீரென்று மின்னி - இருக்கும் இடத்தைக் காட்டியது.

''சாம்ராஜ்! என்ன தன்னந்தனியா இங்க ஒரு பைக் நிக்குது...?''

இருவரும் பைக்கை நெருங்கினார்கள். ஒருத்தர் கையிலிருந்த லத்தியால் ஹாண்டில் பாரை 'டொக் டொக்' என்று தட்டியபடி பக்கத்து வீட்டைப் பார்த்தார்.

''இந்த வீட்டுக்காரங்களோட பைக்கோ என் னவோ...?''

''காம்பவுண்டுக்குத் தள்ளியா நிறுத்துவாங்க...?''

கதிரேஷ் தவிப்புடன் அவர்களைப் பார்த்தான்.

அவர்கள் சுலபத்தில் அங்கிருந்து நகர மாட்டார்கள் போலிருந்தது. வலியப் போய் அவர்களை அனுப்பி விடுவது நல்லது என்று நினைத்தான்.

மெல்ல அந்தத் தூணை விட்டு வெளியே வந்தான்.

''ஹலோ ஸார்...! அது என்னோட பைக்தான்...''

கான்ஸ்டபிள்கள் இரண்டு பேரும் திரும்பிப் பார்த் தார்கள். கதிரேஷை மேலிருந்து கீழேவரை பார்வையால் தடவிய பின் - கான்ஸ்டபிள் ஒருவர் கேட்டார்.

''இந்த ராத்திரி வேளைல.. பைக்கை இங்க நிறுத் திட்டு அங்கே என்ன பண்றே...?''

கதிரேஷ் தான் யோசனை பண்ணி வைத்திருந்த 'இன்ஸ்டன்ட்' கதையை அவிழ்த்து விட்டான்.

''ஸார்.. நானும் என் ஃப்ரெண்டும் செக்கண்ட் ஷோ விட்டுத் திரும்பி வந்துட்டிருந்தோம். மோட்டார் சைக்கிள் ஸ்டாண்டில் யாரோ பெட்ரோல் திருடியிருக் காங்க. இங்க வந்து பைக் என்ஜின் ஆஃப் ஆயிடுச்சு. பெட்ரோல் ட்ரையா இருக்கு...! என் ஃப்ரெண்ட் பெட்ரோலுக்காகப் போயிருக்கான். இப்ப வந்துருவான்.''

''சிட்டியில திருட்டும், வழிப்பறியும் ஜாஸ்தியா யிடுச்சு. இப்படி வேளை கெட்ட வேளைல கண்ட இடத்தில் நிக்காதீங்க. அம்பது ரூபாய்க்காக ஆளைக் கொல்றாங்க.''

''ஃப்ரெண்ட் பெட்ரோலோட வந்துருவான். வந்த துமே வீட்டுக்குப் போயிடுவோம் ஸார்.''

''வீடு எங்கே..?''

''வடவள்ளி ஸார்...''

''உங்க பேரு...?''

''தேவராஜன் ஸார்.''

''எங்க வேலை பார்க்கறீங்க..?''

''எல்.ஐ.சி. சார்... ஐடென்டிஃபிகேஷன் கார்டு கூட...'' ஜெர்கின் பாக்கெட்டில் துழாவுவது போலத் தடவிப் பார்த்தான். ''எங்க வெச்சேன்...?''

''ப்ரியா ஒயின் ஷாப் சாத்திருவான் சாம்ராஜ்...'' என்று இன்னொரு கான்ஸ்டபிள் ஞாபகப்படுத்தினார்.

''சரி சரி. காலா காலத்தில் வீடு போய்ச் சேருங்க.'' சொல்லிக் கொண்டே ஒயின் ஷாப்பில் மாமூல் வாங்கும் அவசரத்துடன் அவர்கள் நகர்ந்தார்கள்.

கான்ஸ்டபிள்கள் அடுத்த சந்துக்குள் திரும்பி மறையவும் - கதிரேஷ் தூணோரம் மீண்டும் ஒதுங்கவும் - வீதி முனையில் கேசவ் கார் ஹெட்லைட் வெளிச்சம் சிந்தி - கார் சத்தம் கேட்கவும் சரியாக இருந்தது.

கதிரேஷ் மறைவில் நன்றாகப் பதுங்கிக் கொண்டான்.

கார் வேகத்துடன் நெருங்கி வந்து பைக்கைப் பார்த்ததும் ஸ்லோ ஆகி - பைக்கை உரசிக் கொண்டு நின்றது.

காருக்குள்ளிருந்து கேசவ் ஒரு ப்ரீஃப்கேசோடு இறங்கினார். சுற்றும் முற்றும் பார்த்தபடியே பைக்கின் பாக்ஸ் கேரியரில் ப்ஃரீப்கேசை வைத்தார். ஒரு தடவை வாட்சைப் பார்த்தவர் மீண்டும் காரில் ஏறிக் கொண்டு பறந்தார்.

கதிரேஷ் நிம்மதியுடன் பைக்கை நெருங்கினான்.

ஐந்து லட்சம்!

திட்டம் வெற்றியடைந்ததில் அவன் இருதயத்தில் 'சந்தோஷப் புயல்' மையம் கொண்டது.

'ஃப்ரீப்கேசைத் திறந்து பார்க்கலாமா?'

'வேண்டாம்! முதலில் இங்கிருந்து கிளம்ப வேண்டும்.'

அவன் யோசித்துக் கொண்டிருக்கும் போதே -

அந்த சத்தம் கேட்டது.

பூட்ஸ் சத்தங்கள்.

''த்தட்...த்தட்...''

அந்த சந்துக்குள்ளிருந்து கான்ஸ்டபிள்கள் இரண்டு பேரும் தடதடவென்று வேகமாய் அவனை நோக்கி ஓடி வந்தார்கள்.



# 9

**கா**லை எட்டு மணி வெய்யில் இளஞ்சூட்டோடு கதிர்களை வீசிக் கொண்டு இருக்க - 'மாருதி 1000' பங்களாவுக்குள் பிரவேசித்து போர்டிகோவுக்குள் அடங்கி நின்றது.

கதவைத் திறந்து தரைக்கு வந்த நீரஜா உள்ளே பார்த்துக் குரல் கொடுத்தாள்.

''பொன்னைய்யா!''

யோகேஷ் இக்னீஷியனை அணைத்து விட்டு கீழே இறங்கினான்.

வேலைக்காரன் ஓடி வந்தான்.

''லக்கேஜெல்லாம் எடுத்து வை...''

''சரிங்கம்மா...''

தலையாட்டி விட்டு லக்கேஜ் காரியரிலிருந்து சூட்கேஸ்களைக் கீழே இறக்கி வைக்க ஆரம்பித்தான்.

நீரஜாவும், யோகேஷும் போர்டிகோ படிகளில் உயர்ந்து உள்ளே போக - ஹாலிலிருந்து வெளிப்பட்ட கேசவ் - இருவரையும் பதட்டம் அணிந்த முகத்துடன் வேக வேகமாய் எதிர்கொண்டார்.

''உங்க ரெண்டு பேருக்கும் எதுவும் ஆகலையே...?''

இருவரும் ஆச்சரியம் அப்பிய முகத்தோடு அவரை ஏறிட்டார்கள்.

''என்னப்பா... என்ன கேக்கறிங்க...?''

''நேத்து ரிசார்டிலிருந்து திரும்பி வர்றப்ப... உங்களை யாரோ கடத்தி...''

யோகேஷ் வியப்பைப் பூசிக் கொண்ட முகத்தோடு கேசவ்வை ஏறிட்டான்.

''என்ன மாமா சொல்றீங்க...? கடத்தறதா? எங்களையா?''

''இல்லையே! ராத்திரி கனவு ஏதாவது கண்டீங்களா? நேத்திக்கு மத்தியானம் நீங்க போன் பண்ணி... ராத்திரி இங்கே வந்து சேர்ந்துடறதா சொன்னீங்க இல்ல?''

''ஆமா சொன்னோம்...''

''ராத்திரி உங்களைக் காணோமே...?''

''வர்ற வழியில் எங்க கார் பங்க்சர் ஆயிடுச்சு மாமா... அதை சரி பண்ணி முடிக்கவே பதினொரு மணிக்கு மேல

ஆயிடுச்சு... நைட் டிராவல் வேண்டாம்னு முடிவு பண்ணி கோத்தகிரியில் ஒரு லாட்ஜ்ல தங்கிட்டோம்.''

''மை குட்னெஸ்...''

கவலையோடு நெற்றியைத் தேய்த்தார் கேசவ். நீரஜா அவருடைய தோளைப் பற்றினாள். ''ஏம்ப்பா... என்ன ஆச்சு...? ரொம்ப அப்செட் ஆன மாதிரி தெரியறீங்க...? எனி ப்ராப்ளம்...?''

''இங்க ஒருத்தன் என்னை ஏமாத்திட்டான்! ஷிட்! ஐந்து லட்சம்...! எவ்வளவு சுலபமா தூக்கிக் கொடுத் துட்டேன்...''

புரியாத முகங்களோடு அவரைப் பார்த்தார்கள் இருவரும்.

''பணம் குடுத்தீங்களா...? கொஞ்சம் புரியற மாதிரி சொல்லுங்கப்பா.''

''நேத்து ராத்திரி ரொம்ப நேரமாகியும் உங்களைக் காணோமேன்னு நான் யோசிச்சுட்டிருந்தப்பத்தான்... ஒருத்தன் போன் பண்ணினான். உங்க ரெண்டு பேரை யும் கிட்நாப் பண்ணி அவங்க கஸ்டடியில் வெச்சிருக் கிறதாகவும்... உடனடியா அஞ்சு லட்ச ரூபாய் தந்தால் தான் உங்க உயிருக்கு உத்தரவாதம் தர முடியும்னும் சொன்னான்.''

''மை காட்! பதட்டத்தில் நீங்க தூக்கிக் குடுத்திட் டிங்களா?''

''அவன் நம்பற மாதிரி சொன்னான். ரிச்சி ரிசார்ட் டுக்கு போன் பண்ணி விசாரிச்சுப் பார்த்தேன். நீங்க கிளம்பிட்டதாத்தான் சொன்னாங்க. நீங்க செக் அவுட்

ஆன டயத்துக்கு அந்நேரம் வீடு வந்து சேர்ந்திருக்கணும். நீங்க அப்படி வராத போது என்ன நினைக்கத் தோணும்...? அட்லீஸ்ட் நீங்க ஒரு போனாவது பண்ணி விஷயத்தை சொல்லியிருக்கலாம்.''

யோகேஷ் திகைப்பாய் நிமிர்ந்தான்.

''சேதுபதியை போன் பண்ணச் சொன்னோமே?''

''அது யாரு சேதுபதி...?''

''என்னோட ஃப்ரண்ட். அவன் ஒரு ஃபுட் ப்ராடக்ட் கம்பெனியோட ரெப்ரஸன்டேட்டீவ். கோயமுத்தூர் போக பஸ் கிடைக்காததினாலே.. நம்ம கார்ல வந்தான். மெக்கானிக்கை கூட்டிட்டு வர புறப்பட்ட அவன்கிட்டே உங்களுக்குப் போன் பண்ணச் சொன்னேன். அவனும் உங்களுக்குப் போன் பண்ணித் தகவல் கொடுத்து விட்டதாய் சொன்னான்.''

''இல்லையே... அப்படியொரு போன் எனக்கு வரவே யில்லை.''

''பொன்னைய்யாவை கேட்டுப் பார்த்தீங்களா...? ஒரு வேளை நீங்கன்னு நினைச்சு என் ஃப்ரண்ட் சேதுபதி, பொன்னையாகிட்டே விபரத்தை சொன்னானோ என் னவோ...?''

''உங்க ஃப்ரண்ட் எத்தனை மணிக்குப் போன் பண் ணினார்?''

''ஏழரை மணியிலிருந்து எட்டு மணிக்குள்ளே இருக் கலாம்.''

''அப்ப நான் வீட்ல தான் இருந்தேன்.''

''ஆச்சர்யமா இருக்கே...''

''யாரோ திட்டம் போட்டு இந்தக் காரியத்தைப் பண்ணியிருக்காங்க. சேதுபதி போன் பண்ணிப் பேசினது யார்கிட்டேன்னு தெரிஞ்சா உண்மை வெளியே வந்துடும்.''

''மாமா..! நாங்க ரெண்டு பேரும் கடத்தப்பட்டதா ஒருத்தர் போன் பண்ணிச் சொன்னா உடனே நம்பிடறதா..? போலீஸுக்கு நீங்க போயிருக்கணும்.''

''நான் போலீஸுக்குப் போனா.. நீங்க ரெண்டு பேரும் உயிரோடு திரும்ப மாட்டீங்கன்னு அவன் மிரட்டினான். எனக்கு இருந்த பதட்டமான சூழ்நிலையில் அவன் சொல்றதையெல்லாம் நம்ப வேண்டியதாயிடுச்சு... தடாகம் ரோட்டுக்குப் பக்கத்துல ஒரு இடத்தைச் சொல்லி பணத்தை அங்கே கொண்டு வரச் சொன்னான். ராத்திரி ஒரு மணிக்கு மேல - நான் அவன் சொன்ன மாதிரி பணத்தைக் கொண்டு போனேன். அப்புறமா வீட்டுக்குப் போன் வந்தது.. காலையில் நீங்க ரெண்டு பேரும் வீட்டுக்குப் பத்திரமா வந்து சேருவீங்கன்னு அவன் சொன்னான். உங்களைக் கண்ல பார்த்த பின்னாடிதான் விஷயத்தை போலீஸுக்குக் கொண்டு போகணும்னு நினைச்சிட்டிருந்தேன்.''

''எவனோ திட்டம் போட்டு பணத்தை தட்டிட்டான். உங்க ஃப்ரண்ட் இன்ஸ்பெக்டர் தனபாலுக்குப் போன் பண்ணுங்க மாமா.''

கேசவ் பக்கத்தில் இருந்த டெலிபோன் ரிஸீவரை எடுத்தார். டயலில் எண்களைத் தட்டினார்.



# 10

போர்டிகோ படியோரமாய் பைக்கை நிறுத்தி விட்டு - ஷூ சப்திக்க உள்ளே வந்தார் இன்ஸ்பெக்டர் தனபால். தேவாரம் மீசை, மொடமொடப்பான காக்கி யூனிபார்ம்.

ஹால் சோபாவில் கேசவ், யோகேஷ், நீரஜா மூன்று பேரும் கவலை முகங்களோடு தெரிய, தனபால் அவர்களை நெருங்கினார். கேசவ் வரவேற்றார்.

''வாங்க தனபால்...''

எதிரில் இருந்த சோபாவைக் காட்ட அவர் உட்கார்ந்து கொண்டே கேட்டார்.

''ஏதோ முக்கியமான விஷயம்னு சொன்னீங்க...? எனிதிங் சீரியஸ்...?''

கேசவ் பெருமூச்சு விட்டார்.

''நேத்து ராத்திரி யாரோ ஒருத்தன் என்னை ஏமாத்தி அஞ்சு லட்ச ரூபாய் பணத்தை.. அடிச்சுக்கிட்டுப் போயிட்டான்.''

தனபால் தன் தொப்பியை அதிர்ச்சியாய்க் கழற்றினார்.

''ஏமாத்தி அடிச்சுட்டானா... எப்படி...?''

யோகேஷ் குறுக்கிட்டு நடந்ததைச் சொன்னான்.

ஒரு பத்து நிமிஷ நேரம் அவன் சொன்னதை செவி மடுத்த தனபால், தன் பெரிய மீசையை சுண்டு விரலால் நிரடிக் கொண்டு கேட்டார்.

''உங்க ஃப்ரண்ட் பேர் என்னான்னு சொன்னீங்க?''

''சேதுபதி...''

''அவர் உங்க மாமாவுக்கு போன பண்ணி... கார் பஞ்சர் ஆயிட்ட விஷயத்தை சொல்லிட்டதா உங்க கிட்ட சொன்னாரா?''

''ஆமா...''

''உங்க மாமா அப்படியொரு போனை ரிஸீவ் பண் ணவேயில்லைன்னு சொல்றாரே?''

''அதான் ஸார்... எனக்கும் ஆச்சர்யமாயிருக்கு..! சேதுபதி... பொய் சொல்லக் கூடியவன் இல்லை.''

''அப்படீன்னா... உங்க ஃப்ரண்ட் போன் பண்ணிப் பேசியது யார்கிட்டே?''

''போன் வந்தப்ப இந்த வீட்ல வேற யாராவது இருந்து மேட்டரை ரிஸீவ் பண்ணியிருக்கலாம்.''

''நோ... இன்ஸ்பெக்டர். வேற யாரும் இங்கே இருந் திருக்க முடியாது. பியூன் பையன்கிட்டே விசாரிச்சுப் பார்த்தோம். அப்படியொரு போனை அட்டெண்ட் பண்ணவேயில்லைன்னு சொல்றான்.''

''யோகேஷ்! உங்க ஃப்ரண்ட் சேதுபதி இப்போ எங்கே இருப்பார்?''

''காந்திபுரத்துல... ஏதோ ஒரு லாட்ஜ்ல மாத வாட கைக்கு ரூம் எடுத்துத் தங்கியிருக்கிறதாய் சொன்னான்.''

''எந்த லாட்ஜ்...?''

''கேட்கலை ஸார்.... அவனே ஏதோ ஒரு லாட்ஜ் பேரைச் சொன்ன மாதிரி இருந்தது.''

''எந்த கம்பெனிக்கு அவர் ரெப்...?''

''ஹில் அண்ட் ஃபுட் ப்ராடக்ட் கம்பெனி...''

''அந்தக் கம்பெனி எங்கே இருக்கு...?''

''ரேஸ்கோர்ஸ் ரோட்ல...''

''அட்ரஸ்...?''

''கேட்கலை...''

தனபால் சோபாவினின்றும் முன்னுக்கு சாய்ந்து டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண் டார். டைரக்டரியில் கம்பெனி எண்ணைத் தேடிக் கண்டுபிடித்து என்கொய்ரி எண்களைத் தொடர்பு கொண்டு கேட்டார்.

''ஹில் அண்ட் ப்ராடக்ட் கம்பெனியின் போன் நெம்பர் ப்ளீஸ்..''

சில விநாடி மௌனத்துக்குப் பின் - பெண் குரல் சொன்னது.

''த்ரீ... சிக்ஸ்.. ஸெவன்... டபுள் த்ரீ...''

சொல்லிக் கொண்டே போனாள்.

''தேங்க் யூ..''

அந்த எண்களை மனதில் வாங்கிக் கொண்டு டயலைத் தட்ட, ஹில் அண்ட் ஃபுட் ப்ராடக்ட் கம் பெனியின் ரிசப்ஷனிஷ்ட் கிடைத்தாள்.

''எஸ்... திஸ் ஈஸ் ரிசப்ஷன்... ஹில் அண்ட் ப்ராடக்ட் கம்பெனி...''

''அங்கே மிஸ்டர் சேதுபதி இருக்காரா...?''

''யூ.. மீன்... ரெப்ரஸன்டேட்டீவ் சேதுபதி..?''

''எஸ்..''

''அவர் இப்போ வேலையில் இல்லையே...?''

''இல்லையா...?''

''எஸ்... அவர் வேலையை ரிசைன் பண்ணி மூணு மாசமாச்சு...''

''அவருக்கு எங்கே ஜாகை...?''

''ப்ளீஸ் பி ஆன்.. த.. லைன்..''

தனபால் காத்திருக்க - சில விநாடிகளுக்குப் பிறகு அவளுடைய குரல் கேட்டது.

''ஏதோ ஒரு லாட்ஜ்ல தங்கியிருந்தாராம் ஸார்.''

''லாட்ஜ் நேம்..?''

''ஸாரி... தெரியலை...'' மறுமுனையில் ரிஸீவர் வைக்கப்பட்டு விட - தனபால் யோகேஷை ஏறிட்டார்.

''உங்க ஃப்ரண்ட் சேதுபதியை நல்ல டைப்னு சொன்னீங்க. ஆனா அவர் வேலை பார்த்த கம்பெனியிலிருந்து ரிசைன் பண்ணின விஷயத்தையே உங்க கிட்ட சொல்லலையே...?''

யோகேஷ் நெற்றியைத் தேய்த்தான்.

''ஒரே குழப்பமா இருக்கு ஸார்... சேதுபதி காலேஜ் டேஸ்ல வெரி நைஸ் ப்ரண்ட்.. எந்த விதமான கெட்ட

பழக்கமும் கிடையாது. அவனை நாங்க 'பேபி'ன்னுதான் கூப்பிடுவோம்.''

''காலேஜ் டேஸ்ல இருந்ததை வெச்சு அவரை நாம எடை போட முடியாது. சில விநாடி இடைவெளிகளில் கூட ஒவ்வொருத்தரோட டைப் மாறும். பணத்தை எப்படியும் சம்பாதிக்கணும்ங்கிற ஆசையில் சில பேர் நல்ல பாதையிலிருந்து விலகிப் போறதும் உண்டு. காலேஜ் டேஸுக்குப் பிறகு அந்த சேதுபதியை நேத்துத்தான் பார்த்திருக்கீங்க. அவர் உங்களை சந்தித்த விதத்தையும், அதுக்கப்புறம் நடந்த சம்பவங்களையும் பார்க்கிறப்போ அவர் ஏதேச்சையா உங்க கார்ல ஏறலைன்னு தோணுது. உங்க மாமாவை மிரட்டிப் பணம் பறிக்கிற திட்டத்தோடுதான் செயல்பட்டிருக்காங்க.''

''அப்படீன்னா... கார் பஞ்சர் ஆனது கூட திட்டமிட்ட செயல்தானா?''

''எஸ்... வழியில் ஒரு டீக்கடையில் காரை நிறுத்தி டீ சாப்பிடும் போது... சேதுபதி காரை பஞ்சர் பண்ணி யிருக்கலாம்.''

''சேதுபதியை இப்படிப்பட்ட ஆளா என்னால கற்பனை பண்ணிப் பார்க்க முடியலை... இன்ஸ்பெக் டர்.''

''அதுதான் ஹ்யூமன் நேச்சர்! பணத்தாசை வந் துட்டா... யார் எப்படி மாறுவாங்கன்னு கணிக்க முடியாது. குறைந்தபட்சம் ரெண்டு பேராவது இந்தப் பண மோசடி யில் சம்பந்தப்பட்டு இருக்கலாம். அதுல ஒருத்தன் சேதுபதிங்கிறதுல எந்த சந்தேகமும் கிடையாது. இன் னொருத்தன் யார்ங்கிறது சேதுபதியை மடக்கி விசா ரிச்சா.. வெளியே வந்துடும்.''

தனபால் கேசவ்வை ஏறிட்டார்.

''போன்ல பேசினவன் உங்களை எந்த இடத்துக்கு பணம் கொண்டு வரச் சொன்னான்...?''

''தடாகம் ரோட்டிலிருந்து இடது கைப் பக்கமா பிரிஞ்சு போகிற ரோட்டில் பைக்கை நிறுத்தி வெச் சிருந்தான். பைக்கோட பாக்ஸ் கேரியரில் பணத்தைப் போட்டுட்டுப் போகும்படியா டெலிபோன்ல சொல்லி யிருந்தான். அதுமாதிரியே பண்ணினேன்.''

''ஆளைப் பார்த்தீங்களா..?''

''இல்லை...''

''பைக் நெம்பர்..?''

''சரியாத் தெரியலை. டி.என்.37 - பளிச்சின்னு தெரிஞ்சுது. அதுக்கப்புறம் கீழே 18..ன்னு ரெண்டே நெம்பர் மட்டும் பார்க்க முடிஞ்சது.''

இன்ஸ்பெக்டர் தனபால் புருவ மத்தியை கீறிக் கொண்டார். ''மிஸ்டர் கேசவ்! நீங்க ஒரு காரியம் பண்ணியிருக்கணும்.''

''என்ன..?''

''அவன் அஞ்சு லட்ச ரூபாய் கேட்டதுமே... கொண்டு போய்க் கொடுக்காமே.. அவ்வளவு பணம் என்கிட்ட ஏதுன்னு 'டாட்ஜ்' பண்ணியிருக்கணும்.''

''நான் அப்படித்தான் சொன்னேன். ஆனா அவன் கேட்கலை. ரெண்டு மணி நேரத்துல பணம் வந்தாக ணும்ன்னு சொல்லிட்டான். நல்லவேளை... நாளைக்கு காலையில் போட வேண்டிய ஒரு காண்ட்ராக்ட்டுக்காக ஆறு லட்ச ரூபாயை ட்ரா பண்ணி வெச்சிருந்தேன்.''

யோகேஷ் குறுக்கிட்டு சொன்னான். ''ஒரு விஷயத்தை நோட் பண்ணீங்களா இன்ஸ்பெக்டர்... பணத்தை டிமாண்ட் பண்ணினவனுக்கு இவங்ககிட்ட பணம் இருக்கிறது தெரிஞ்சிருக்கு. அதனால்தான் 'அடுத்த ரெண்டு மணி நேரத்துக்குள்ள எனக்குப் பணம் வேணும்'னு அவன் மிரட்டியிருக்கான்.''

தனபால் மலர்ந்தார்.

''குட் பாயிண்ட்..! மிஸ்டர் கேசவ்..! இன்னிக்கு காலையில நீங்க போடறதாயிருந்த காண்ட்ராக்ட் பத்தி... யார் யார்க்கெல்லாம் தெரியும்? ஐ.. மீன்.. இந்தப் பணம் இந்த ராத்திரி... உங்க கைவசம் இருக்கும்னு யார் யார்க்குத் தெரியும்...?''

கேசவ் தன் தாடையைத் தடவினார்.

''கம்பெனி ஜி.எம்., ப்ராஜெக்ட் மானேஜர், காஷியர், கார் டிரைவர், என்னோட ஸ்டெனோ...''

''இவங்கள்ல யார் மேலயாவது உங்களுக்கு சந்தேகம் இருக்கா?''

''நோ.. இப்ப நான் சொன்ன இவங்க எல்லாருமே என்கிட்ட விசுவாசமா இருக்கிறவங்க...''

''இருந்தாலும்... அவங்களைப் பத்தின விவரங்கள் எனக்கு வேணும்.. இந்தக் காலத்துல யாரையும் நம்ப முடியாது.''

''மிஸ்டர் இன்ஸ்பெக்டர்! இந்தக் கேஸை முடிவுக்கு கொண்டு வர சுலபமான வழி சேதுபதியைக் கண்டு பிடிக்கிறதுதான்... அவன் கைக்குக் கிடைச்சா... எல்லா உண்மைகளும் வெளியே வந்துடும்'' - யோகேஷ் சொல்ல தனபால் தலையசைத்தார்.

''என்னோட முதல் வேலை.. அதுதான்...'' தொப்பியை தலைக்கு கொடுத்து புறப்பட்டார். பைக் தட தடத்து வெளியேறிய சில விநாடிகளில் -

டெலிபோன் கூப்பிட்டது.

கேசவ் ரிஸீவரை எடுத்து - செவிமடுத்தார்.

''ஹலோ...''

மறுமுனையில் குரல் கரகரக்க ஆரம்பித்ததும் கேசவின் முகம் மாறியது.



## 11

கேசவ் - தன் சாக்லேட் நிற கன்ட்டெஸ்ஸாவைப் புழுதி பறக்க - கம்பெனி காம்பவுண்டுக்குள் நுழைத்தார். முகத்தில் எக்கச்சக்க ரத்தம் பாய்ந்து கோபம் கொதித்தது. போர்டிகோவில் நுழைந்து 'க்றீச்' சென்று பிரேக்கை மிதித்தார்.

கிரானைட் பதித்த வராந்தாவில் அவர் ஷூக்கள் வேகமாய் பதிந்து எழுந்தன. தரைக்குக் கீழே ஒரு கேசவ் - நிழலாய் நடந்தார்.

CHAIRMAN

பித்தளை எழுத்துக்கள் மின்னும் அந்த அறைக் கதவைப் படீரென்று திறந்து கொண்டு உள்ளே போனார். எக்ஸிக்யூடிவ் நாற்காலியில் உட்கார்ந்தார்.

அவர் உட்கார்ந்த வேகத்தில் சுழல் நாற்காலி எல்லாத் திசைகளிலும் தத்தளித்தது.

இண்ட்டர்காமைத் தட்டினார்.

''ஜி.எம். இருக்காரா...? ம்... வரச் சொல்லுங்க. உடனே வரச் சொல்லுங்க.''

'லொட்'டென்று ரிசீவரை அதனிடத்தில் வீசினார்.

அறை புழுக்கம் வியர்வை முத்துக்களைப் பிரசவிக்க - சேரில் பின்னுக்கு சாய்ந்து ஏ.சி. பொத்தானை அழுத்தினார்.

'ர்ர்ர்'ரென்ற உறுமலும் இதமான குளிரும் அறையை ஊடுருவத் துவங்கியது.

சரியாய் இரண்டு நிமிஷம் கரைந்த பின் -

''மே ஐ கமின் ஸார்...?''

- என்றபடியே ஜி.எம். உள்ளே நுழைந்தார்.

''பத்மநாபன் வீட்டுக்குப் போன் பண்ணிக் கேட்டீங் களா...?''

''கேட்டேன் ஸார்... ஆனா... அவங்க வீட்டில் சரியா பதில் சொல்லமாட்டேங்கறாங்க.''

''அவரையே பேசச் சொல்ல வேண்டியது தானே...?''

''அவர் அவுட் ஆஃப் ஸ்டேஷன்னு சொன்னாங்க ஸார்...''

''மேனேஜ்மெண்ட் கிரேடில் உள்ளவங்களே இப்படி நடந்துக்கிட்டா கீழே உள்ளவங்க எப்படி நடந்துப்பாங்க? கம்பெனில எப்படி டிசிப்ளின் வரும்? உங்களை எல்லாம் நம்பி எப்படி ப்ராஜெக்ட் நடத்தறது? பத்மநாபன் யார் கிட்டே பேசினார்?''

''அவர் பேசலை ஸார். இந்த லெட்டரை மட்டும் யாரோ ஒரு ஆள்கிட்டே கொடுத்து அனுப்பியிருக்கார் ஸார்.''

அந்த லெட்டரை ஜி.எம்.மின் கையிலிருந்து பறிக்கிற மாதிரி வாங்கி, சற்று நேரம் பார்வையை அதில் ஓட விட்டார்.

''ஷிட்! த்ரீ மன்த்ஸ் லீவ் கேட்டு திடுதிப்ன்னு ஒரு லெட்டர் குடுத்து விட்டிருக்கார். இதோட அர்த்தம் என்ன?''

ஜி.எம். மெதுவான குரலில் பதிலை உதிர்த்தார்.

''ஸார்... ஐ திங் ஹி... ஈஸ் கோயிங் டு ரிசைன்.''

''இது ஒரு பொறுப்பில்லாத்தனமாத் தெரியலையா..? இவரை நம்பி இன்னிக்கு ஒரு காண்ட்ராக்டில் கையெழுத்துப் போட இருந்தேன். அஞ்சு லட்சம்! பாங்கிலிருந்து ட்ரா பண்ணி வெச்சதுதான் உங்களுக்குத் தெரியுமே...''

சொன்ன கேசவ் சட்டென்று யோசனையில் விழுந்தார். சில யோசனை நிமிஷங்களுக்குப் பிறகு - ஜியெம்மை ஏறிட்டு சொன்னார்.

''நீங்க போகலாம். அந்த ப்ராஜெக்ட் கன்சல்ட்டன்டுக்குப் போன் பண்ணி அக்ரிமெண்ட்டை அடுத்த வாரம் வெச்சுக்கலாம்னு சொல்லிடுங்க.''

''எஸ்... ஸார்...''

அவர் வெளியேறிச் சென்றார்.

டோர் க்ளோஸர் தானாகச் சாத்திக் கொண்டது.

கேசவ் ரிசீவரைக் கையிலெடுத்து எண்களைச் சுழற்றி னார்.

சில விநாடிக் காத்திருப்புக்குப் பின் மறுமுனையில் தனபால் கிடைத்தார்.

''ஹலோ.. இன்ஸ்பெக்டர் தனபால் ஹியர்..''

''நான் கேசவ் பேசறேன்...''

''சொல்லுங்க.. மிஸ்டர் கேசவ்.''

''எனக்கு ஒரு ஆள் மேல டவுட் ரெய்ஸ் ஆகி யிருக்கு.''

''யாரு...?''

''என்னோட கம்பெனி ப்ராஜெக்ட் மேனேஜர் பத்ம நாபன்.''

''இஸிட்? எதை வெச்சு அவரை சந்தேகப்படறீங்க?''

''திடீர்னு இன்னிக்கு அவர் அப்ஸ்காண்ட் ஆயிட்டார்! ஒண்ணு செய்ங்க. நீங்க நேர்ல வந்தா விபரமாப் பேச லாம்.''

''வேற ஒரு என்கொயரிக்காக நான் ரேஸ்கோர்ஸ் ஏரியாவுக்குத்தான் கிளம்பிட்டு இருந்தேன். ஒரு அரை மணி நேரத்தில் நான் அங்க வர்றேன்.''

''ப்ளீஸ்... கம்!''

ரிசீவர்களைப் பரஸ்பரம் சாத்தினார்கள்.

அரை மணி நேர ஆபீஸ் வேலைக்குப் பின் மறுபடியும் ஜியெம்முக்கு இண்ட்டர்காம் செய்தார்.

''ஸார்...'' லைனில் அவர் வந்தார்.

''நீங்க இன்னொரு தடவை பத்மநாபன் வீட்டுக்கு போன் பண்ணி அவர் எங்கே போயிருக்கார்ன்னு.. ஐ மீன் எக்ஸாக்ட் லொகேஷன் விசாரிங்க.''

''எஸ். ஸார்...''

பெண்டிங் ஃபைல்களை அசுவாரஸ்யமாய் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். பதினோரு மணியை எலக்ட்ரானிக் இசை நினைவுபடுத்திய போது இன்ஸ் பெக்டர் தனபால் வந்து சேர்ந்தார்.

''கமின். உக்காருங்க ப்ளீஸ்...''

தனபால் தொப்பியைக் கழற்றி மேஜையில் வைத்துக் கொண்டே கேசவ்க்கு எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தார்.

''சொல்லுங்க மிஸ்டர் கேசவ். உங்க கம்பெனி ப்ராஜெக்ட் மேனேஜரைப் பத்தி என்னவோ சொல்ல வந்தீங்க...?''

''எஸ்...! யாரையுமே நூறு சதம் நம்ப முடியாதுன்னு நீங்க சொன்னது ரொம்ப கரெக்ட். ப்ராஜெக்ட் மேனேஜர் பத்மநாபனை ரொம்ப விசுவாசமான ஆள்ன்னு நம்பிட்டு இருந்தேன். பாருங்க இப்படி ஒரு லீவ் லெட்டர் கொடுத்தனுப்பிக் காலைவாரிட்டார். த்ரீ மன்த்ஸ் லீவ் வேணும்ன்னு கேட்டிருக்கார். இதோட அர்த்தம்... 'நான் ரிசைன் பண்றேன்'னு சொல்லாம சொல்றதுதான். இன்னிக்கு அவரை வெச்சு ஒரு முக்கியமான காண்ட்

ராக்ட் போட இருந்தேன். அதுபத்தி நான் கவலைப்படலை. வித் இன் ஏ வீக்... சூட்டபிள் பர்சனை அப்பாயிண்ட் பண்ணி காண்ட்ராக்ட் போட்டுருவேன். நேத்து ராத்திரி அப்படி ஒரு அசம்பாவிதம் நடந்திருக்கும் போது இவர் இப்படிப் போனது தான் சந்தேகப்பட வைக்குது. பத்தாததுக்கு அவர் வீட்டுக்கு போன் பண்ணிக் கேட்டா ப்ராப்பரா ரிப்ளை இல்லை.''

''அவர் பேரென்ன சொன்னீங்க?''

''பத்மநாபன்.''

''பத்மநாபன் லீவ் லெட்டரை யார்கிட்டே கொடுத் தனுப்பினார்?''

''யாரோ கொண்டு வந்து ரிசப்ஷன்ல தந்திருக்காங்க. ஜி.எம்.கிட்டேயோ... என்கிட்டேயோ... போன்ல பேசி யிருக்கலாமே? எதுக்காக லெட்டர்? அதான் எனக்கு சந் தேகம். ஒரு மாசத்துக்கு முன்னால நடந்த ஒரு விஷயம் எனக்கு ஞாபகத்துக்கு வருது. அதை உங்ககிட்டே சொல்லணும். பத்மநாபன் ஏதோ ப்ராப்பர்ட்டி வாங்கணும்ன்னு சொல்லி ஃபிப்டி தவ்சன்ட் லோன் கேட்டார். அப்ப நான் எந்த மூடில் இருந்தேனோ ஞாபகம் இல்லை. என்ன காரணத்தாலோ நான் அதை ஸாங்ஷன் பண்ணலை.''

''இது நல்ல பாயிண்ட்! அவருக்கு ஏதோ பணத் தேவை இருந்திருக்கு.''

''எஸ்...''

கேசவ் தலையசைத்த விநாடி -

கீ...

கீ...

கீ...

இண்டர்காம் அலறியது.

ரிசீவரை எடுத்தார் கேசவ்.

''நான் ஜி.எம். பேசறேன் ஸார்...''

''சொல்லுங்க...''

''நீங்க சொன்ன மாதிரி பத்மநாபன் வீட்டுக்கு போன் பண்ணினேன் ஸார்... ஒய்ஃப் பேசினாங்க. வெளியூர் போறதாகத் தான் சொன்னாராம். எந்த ஊருக்குப் போறார்ன்னு அவங்களுக்கே தெரியலையாம்?''

''இது நம்பற மாதிரி இல்லையே...''

''நானும் கேட்டேன் ஸார். வெளியே போனா சொல்லிட்டுப் போற பழக்கம் அவருக்கு இல்லைன்னு திருப்பித் திருப்பிச் சொல்றாங்க.''

கேசவ் ரிஸீவரை சாத்திவிட்டு நிமிர்ந்தார். ஜி.எம். சொன்னதை இன்ஸ்பெக்டர் தனபாலிடம் தெரிவித்தார்.

''நாம அவங்களை நேரடியாகப் பார்த்து விசாரிக்கிறது நல்லது. டெலிபோன் மூலமா உண்மையைத் தெரிஞ் சிக்க முடியாது.''

''அப்படின்னா நாம அவங்க வீட்டுக்கே போய் நேர டியா விசாரிச்சுப் பார்க்கலாமே?''

''அப்படித்தான் செய்யணும். அவருக்கும் சேதுபதிக் கும் ஏதாவது வகையில் தொடர்பு இருக்கான்னு தெரி யணும்...''

இருவரும் எழுந்தார்கள்.

காருக்கு வந்தார்கள்.

கேசவ் இக்னிஷியனைத் திருகி - கியரை மாற்றி காரை சாலையோடு கலக்க விட்டார். மெயின் ரோட்டை எட்டிப் பிடித்ததுமே தனபால் கேட்டா[illegible]

''பத்மநாபன் வீடு எங்கே?''

''கணபதி தாண்டிப் போகணும். பாரதி நகர் எக்ஸ் டென்ஷன்ல அவருடைய வீடு. கிருகப் பிரவேசத்துக்குப் போனதால கரெக்டா ஞாபகம் இருக்கு.''

கார், டாக்டர் நஞ்சப்பா ரோட் [illegible] பிடித்து நூல் பிடித்த மாதிரி சீறிக் கொண்டு பே[illegible]. காந்திபுரம் சிக்னலில் இரண்டு நிமிஷங்களை விரயமாக்கி விட்டு அடுத்த சில நிமிஷங்களில் சக்தி ரோட்டை - கார் டயர்கள் தத்தெடுத்துக் கொண்டன.

அங்கிருந்து சரியாய்ப் பத்தே நிமிஷங்களில் பத்ம நாபனின் வீட்டு வாசலில் கொண்டு போய் காரை நிறுத்தினார் கேசவ்.

காலிங் பெல்லை அழுத்திய சற்று நேரத்தில் கதவு திறக்கப்பட்டது.

பத்மநாபனின் மனைவி - ஒரு சில விநாடி புருவங் களைச் சுருக்கி - வந்திருப்பது கம்பெனி சேர்மன் கேசவ் என்பதைப் புரிந்து கொண்டதும் -

சட்டென்று முகம் கறுத்துப் போனாள்.

கேசவ் புன்னகைத்தபடியே போர்டிகோ படிகள் ஏறி பத்மநாபனின் மனைவியைப் பார்த்துக் கேட்டார்.

''என்ன மிஸஸ் பத்மநாபன்...! வீடு தேடி வந்தவங்களை வாங்கன்னு கூப்பிட மாட்டீங்களா...?''

அவள் ப[illegible]த்துடன் வாயைத் திறந்தாள்.

''அது... வந்து... உங்களை...''

''இந்தச் சமயத்தில் எதிர்பார்க்கலை. அப்படித்தானே...?''

''ஆமா ஸார்.. நீங்க.. வாங்க.. உள்ள வாங்க...''

சொன்னவள் - கேசவ்க்கு பின்னே - யூனிஃபார்மில் இருந்த இன்ஸ்[illegible]ர் தனபாலைப் பார்த்ததும் முகத்தில் வியர்வை [illegible]ள். வேகமாய் உள்ளே போனாள்.

''உக்காருங்க.''

உட்கார்ந்தார்கள்.

''என்ன சாப்பிடறீங்க ஸார்...?''

''அதெல்லாம் இருக்கட்டும். நான் வந்த விஷயத்தைச் சொல்லிடறேன். உங்க ஹஸ்பெண்ட் திடீர்ன்னு லீவ் போட்டுட்டு எங்க போனார்னு தெரிஞ்சிக்கறதுக்காகத்தான் நாங்க இங்கே வந்திருக்கோம்.''

''அது... அதான் போன்லயே...''

''போன்ல ஜி.எம்.கிட்டே சொன்னீங்க. நீங்க சொன்னது தெளிவா இல்லை. வெளியூர் போயிருக்கார்ன்னும், எந்த ஊருக்குப் போயிருக்கார்ன்னு தெரியலைன்னும் சொன்னீங்க.''

''ஸார்... அதான் நிஜம்.''

''எங்க கம்பெனில சாதாரண கிளார்க் லீவ் போட்டாக்கூட லீவ் சமயத்தில் எந்த அட்ரஸ்ல தங்களைத் தொடர்பு கொள்ளலாம்ன்னு விபரம் தந்துட்டுப் போவாங்க. இவ்வளவு பெரிய பதவியில் இருக்கிற பத்மநாபன் வீட்டில் ஒய்ஃஃபுக்குக் கூட - தான் போகிற இடத்தைச் சொல்லாம போயிருக்கார்ங்கிறது நம்பறதுக்குக் கஷ்டமாயிருக்கு.''

''ஸார்.. நான் உள்ளதைத்தானே சொல்றேன்?''

''இங்க பாருங்க மிஸஸ் பத்மநாபன். எதையும் என்கிட்ட மறைக்காதீங்க. கம்பெனி சேர்மனே வீடு தேடி வந்து விசாரிக்கிறேன். காரணம் இல்லாமே இருக்குமா?''

''ஸார்... நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குப் புரியலை.''

''கம்பெனில நேத்திக்கு நடக்கக் கூடாத ஒரு சம்பவம் நடந்து போச்சு.''

''என்ன சம்பவம்?''

''ஒரு பண மோசடி.''

அவள் சட்டென்று நிமிர - தனபால் பேச்சைத் தொடர்ந்தார்.

''படிச்சவர், நல்ல பதவியில் இருக்கிறவர்... அவர் எதுக்காக சீப்பா பண மோசடியில் இறங்கணும்? அவரோட திறமைக்கு நேர்மையாவே அவரால லட்சக்கணக்கில் சம்பாதிக்க முடியும்!''

''இவ்வளவு தூரம் நீங்க வந்த பிறகு உங்க கிட்டே ஒரு உண்மையைச் சொல்றேன். உங்க கம்பெனில

இருந்து நிக்கிறதுங்கிற முடிவோடதான் அவர் லீவ் போட்டிருக்கார். நான் முதலில் வருத்தப்பட்டேன். ஆனா இவ்வளவு கீழ்த்தரமா சந்தேகப்படற உங்க கம்பெனில இருந்து நின்னதுக்காக இப்ப நான் சந்தோஷப்படறேன். இன்னொரு விஷயமும் சொல்றேன். இப்ப அவர் டெல்லிக்கு ஃப்ளைட்ல பறந்துட்டு இருப்பார். நியூ ஜெர்சில அப்பாயிண்ட்மெண்ட் கிடைச்சிருக்கு. செட்டில் மெண்ட் பிரச்சனை வரும்ன்னு பயந்துதான் 'எங்கே போயிருக்கார்'ன்னு கம்பெனில யாராவது கேட்டா 'தெரியலை'ன்னு சொல்லச் சொன்னார். நல்ல ஃபாரின் சான்ஸ். ரெண்டு வருஷ காண்ட்ராக்ட். ஏன் விடணும்? ஒரு மாசம் முந்தியே கிளம்பியிருப்பார். ஒரு ஃபைனான்ஸ் கம்பெனில அவர் ஏற்பாடு பண்ணின பணம் சமயத்துக்குக் கிடைக்கலை. நேத்துத் தான் ஏற்பாடாச்சு.''

''அவர் எந்த ஃப்ளைட்ல போறார்?''

அவள் ஃப்ளைட் நம்பரைச் சொன்னாள்.

கேசவ் அவளை சமாதானப்படுத்துகிற விதமாய் சற்று நேரம் பேசிவிட்டு - எழுந்து விடை பெற்றார்.

காரில் கம்பெனிக்கு திரும்பும் போது -

தனபாலன் சொன்னார்.

''பத்மநாபன் டெல்லில இருந்து நியூஜெர்சி போக ஃப்ளைட் பிடிக்கறதுக்கு முந்தி அவரை மடக்கி விசாரிக்க ஏற்பாடு பண்றேன். எனக்கு டெல்லி சர்க்கிள்ல ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்க.''

''ஆபீஸ்ல ஃபேக்ஸ் இருக்கு. அதை யூஸ் பண்ணி உடனே தகவல் தரலாம். சம்பந்தப்பட்ட ஆளுக்கு

நேரடியா உங்க மெசேஜைக் கொண்டு போய்ச் சேர்க்கறதுக்கு ஏற்பாடு செய்யறேன்.''

கார் அடுத்த பதினைந்து நிமிஷத்தில் - கம்பெனி காம்பசை எட்டிப் பிடித்தது.

வராந்தாவைக் கடந்து - அறைக்குள் நுழைந்தார்கள்.

நுழைய நுழையவே -

இண்ட்டர்காம் அலறியது.

கேசவ் ரிசீவரை எடுத்தார் ''எஸ்''

''குட் ஆஃப்டர்நூன் ஸார்...''

ரிசீவரில் ரிசப்ஷனிஸ்ட்டின் குரல் கேட்டது.

''எஸ்...''

''நீங்க வந்தவுடனே மிஸ்டர் யோகேஷ் உங்களைக் காண்டாக்ட் பண்ணச் சொன்னார். ஹி வான்ட்ஸ் டு ஸே ஸம்திங்.''

''சரிம்மா... நான் ரிங் பண்ணிக்கறேன்.''

இண்ட்டர்காமைச் சாத்திவிட்டு - யோகேஷோடு தொடர்பு கொண்டார்.

''ஹலோ...''

''மாமா! ரிசப்ஷனிஸ்ட் சொன்னாங்களா?''

''ஆமா. ஏதோ நீ பேசணும்னு சொன்னதாக...''

''எஸ்! இன்ஸ்பெக்டர் தனபால் உங்ககூட இருக்காரா?''

''இருக்கார்.''

''ஃபோனை அவர்கிட்ட குடுங்க.''

கேசவ். தனபாலிடம் போனை நீட்ட, அவர் பேசினார்.

''ஹலோ...''

''இன்ஸ்பெக்டர்! காலையில வந்ததுமே மொதல் வேலையா என் காலேஜ்மெட்ஸ் எல்லோருக்கும் டயல் பண்ணிப் பார்த்தேன். சேதுபதியைப் பத்தி எல்லார் கிட்டேயும் என்கொயரி பண்ணினேன். கடைசியில் ஐ காட் ஹிஸ் அட்ரஸ்! சேதுபதி கார்ல வர்றப்ப காந்தி புரத்தில் ஒரு பேச்சிலர்ஸ் லாட்ஜில் தங்கியிருக்கிறதா சொன்னது வடிகட்டின பொய்.''

''அப்புறம்?''

''சமீபத்தில் அவனைப் பார்த்த என் ஃப்ரெண்ட் ஒருத்தன், சேதுபதி பீளமேட்டுக்குப் பக்கத்தில் ஒரு வீடு எடுத்துத் தங்கியிருக்கிறதா சொன்னான்.''

''அட்ரஸ் என்ன?''

''ப்ராப்பர் அட்ரஸ் அவனுக்குத் தெரியலை. ஆனா அவன் வீட்டுக்குப் போறதுக்கான அடையாளம் சொன்னான்.''

''நீங்க இப்ப ஃப்ரீயா இருக்கீங்களா?''

''ஃப்ரீதான்.''

''இந்த கேசில் மெயின் சஸ்பிஷன் சேதுபதி மேலதான். அவரோட அட்ரஸ் நமக்குக் கிடைச்சிருக் கறப்ப - முதல் வேலையா அவரை மடக்கி விசாரிக்கறது பெட்டர்.''

''வி ஷல் கோ. போர்டிகோவில் நான் காத்திருக்கேன்.''

யோகேஷ் ரிசீவரை வைக்க - தனபாலும் ரிசீவரைக் கவிழ்த்து விட்டு கேசவ்விடம் விவரங்கள் சொன்னார்.

டெல்லிக்கு அனுப்ப வேண்டிய மெசேஜையும், முகவரியையும் ஒரு வெள்ளைப் பேப்பரில் தெளிவாக எழுதி கேசவ்விடம் ஒப்படைத்து விட்டு வெளியே வந்தார். நீளமான வராந்தாவை வேக நடையில் கடந்து போர்டிகோவைத் தொட்டார்.

'மாருதி 1000' - ல் யோகேஷ் அவருக்காகக் காத் திருந்தான். அவர் முன் இருக்கையில் உட்கார்ந்து கொண்டதும் - மெயின் கேட்டைக் கடந்தான். ஆள் அரவமில்லாத ரேஸ்கோர்ஸ் சாலையில் சீறிக் கொண்டு போனது கார்.

புலியகுளம் மெயின் ரோடு வழியாக - அவிநாசி ரோட்டை எட்டிப் பார்த்தார்கள். சில நிமிஷங்களில் பி.எஸ்.ஜி. காலேஜைத் தொட்டு - காலேஜ் காம்ப வுண்ட் சுவரை ஒட்டிப் போன வலது பக்கத் திருப்பத்தில் கார் நுழைந்தது.

அந்தச் சாலையில் இரண்டு பர்லாங் பயணித்ததும் - கருணாநிதி நகர் என்று பெயிண்ட்டில் பேசிய போர்டும் - ஆங்காங்கே தூரதூரமாய் டெரஸ் வீடுகளும் பார்வை யில் மோதியது.

''இங்கேதான் இன்ஸ்பெக்டர் - சேதுபதியோட வீடு இருக்கு. ஆப்பிள் ஒயிட் கலர்ல டிஸ்டெம்பர் அடிச் சிருக்கும்னு ஃப்ரெண்ட் சொன்னான். காம்பவுண்ட்ல 'எமரால்டு' அப்படின்னு சலவைக் கல்லில் பொறிச் சிருக்குமாம்.''

''காரை உள்ளே விடுங்க. நீங்க சொன்ன அடை யாளங்களோட ஏதாவது வீடு வருதான்னு நான் பார்க்க றேன்.''

கார் செம்மண் பாதையில் புழுதிப் புகையைப் பரப்பிக் கொண்டு நிதானமான வேகத்தில் ஊர்ந்து சென்றது. கார் அந்த ஏரியாவை ஒரு சுற்று சுற்றி முடித்த போது - இடது பக்கமிருந்த அந்த வீட்டைப் பார்த்ததும் தனபால் பரபரத்தார்.

''யோகேஷ்! காரை நிறுத்துங்க. நீங்க சொன்ன 'எமரால்டு' அடையாளம் - இதோ இந்த வீட்டில் இருக்கு.''

கார் என்ஜினை அணைத்துவிட்டு இறங்கினார்கள். அருகாமையில் வீடுகள் எதுவுமில்லை. ஒரு அடர்த்தியான வேப்பமரம் வீட்டுக்கு முன்னால் சருகுகளையும், அகலமான நிழலையும் பரப்பி வைத்து இருந்தது.

காம்பவுண்ட் கதவைத் திறக்க - 'க்றீச்'சென்று அது எண்ணெய் இல்லாமல் வறட்சியாய் அழுதது.

காசித் தும்பைச் செடிகளுக்கு நடுவே சென்ற வாசலில் நடந்து - காலிங் பெல்லை அழுத்தினார்கள்.

ர்ர்ர்...

ர்ர்ர்...

ர்ர்ர்...

சில விநாடிகள் காத்திருந்தார்கள்.

உள்ளே எந்த சலனமும் தெரியவில்லை.

யோகேஷ் மறுபடி காலிங்பெல்லை அழுத்தினான்.

ர்ர்ர்ர்....

அவன் அழுத்திக் கொண்டே இருக்க - இன்ஸ்பெக்டர் தனபாலுக்குள் மெலிதான சந்தேகம் உயிர் பெற்றது.

'போலீஸ் யூனிஃபார்மைப் பார்த்து உஷாராகித் தப்பி இருப்பானா?'

மெதுவான நடையில் வீட்டை சுற்றி வந்தார்.

பின்பக்கம் வந்தார்.

கதவைப் பார்த்துத் திகைத்துப் போனார்.

"யோகேஷ்... பின்னால வாங்க! ஐ திங்... ஆள் தப் பிச்சாச்சு."

இன்ஸ்பெக்டரின் குரல் கேட்டு யோகேஷ் பின் வாசலுக்கு வந்தான்.

"தப்பிச்சுட்டானா?"

தனபால் பின்கட்டுக் கதவைக் கை காண்பித்தார். திறந்திருந்த கதவு காற்றுக்கு அசைந்து கொண்டிருந்தது.

"வாங்க! வீட்டுக்குள்ளே பார்க்கலாம்."

சொல்லிக் கொண்டே - கதவுக்குள் நுழைந்தார்.

பாத்ரூம்.

அதைத் தொடர்ந்து கிச்சன்.

அதற்கடுத்த அறையைத் தொட்டவர்கள் -

அதிர்ந்து போனார்கள்.

அங்கே -

சேதுபதி - கைகளையும், கால்களையும் பரப்பிக் கொண்டு -

எக்ஸ் மாதிரி குப்புறக் கிடந்தான்.

அவனைச் சுற்றி சிரத்தையாய் ரத்தம் - சிவப்பாய் பார்டர் கட்டி இருந்தது.



# 12

டி.பி.ரோட்டின் அகலத்தில் கதிரேஷின் ஹீரோ ஹோண்டா தடதடத்துப் போனது. ரத்ன விநாயகர் கோயிலுக்கு எதிர்த் தெருவில் பைக்கைத் திருப்பினான்.

'ஹோட்டல் ஸ்ரீ அன்னபூர்ணா' ஜனக் கசகசப்போடு தெரிய, பார்க்கிங் லேனில் பைக்கை ஓரங்கட்டினான். எதிர்சாரி பெட்டிக் கடையில் ஒரு மாலை தினசரியை வாங்கிச் சுருட்டிக் கொண்டு - ஹோட்டல் படிகளில் ஏறினான்.

கண்ணாடிக் கதவுக்குப் பின்னால் ஏ.சி. ரெஸ்டா ரெண்ட். கதிரேஷின் தள்ளலுக்கு டோர் க்ளோஸர் ஜகா வாங்கியது. கூட்டமில்லாத ரெஸ்டாரெண்ட். மேஜை களுக்கு இடையில் சாவதானமாய் நடந்து கடைசி டேபிளைத் தொட்டான். அங்கிருந்து பார்த்தால் வாசல் தெரிகிற மாதிரி உட்கார்ந்து கொண்டான்.

மேஜையில் தண்ணீர் வைத்து - வார்த்தையில் பவ்யம் வைத்து ''என்ன ஸார் வேணும்?'' என்றார் வெள்ளுடுப்பு பேரர்.

''கட்லெட் அண்ட் சாஸ்...''

பேரர் தலையசைத்து நகர - கதிரேஷ் கையில் இருந்த மாலை தினசரியை விரித்துக் கொண்டான்.

முதல் பக்கத்தின் வலது பக்க மூலையிலேயே - அவன் படிக்க விரும்பின செய்தி - கட்டம் கட்டி பிரசுர மாகியிருந்தது.

கருணாநிதி நகர் இளைஞர் படுகொலை.

மர்மம் நீடிக்கிறது.

கொலையாளியைத் தேடி போலீஸ் வலைவீச்சு.

தலைப்பின் மேல் சற்று நேரம் கண்ணை வைத் திருந்தவன் - மெதுவாய் செய்தியின் சாராம்சத்துக்குள் மூழ்கி முடித்த போது - ரெஸ்டாரெண்ட் கதவு திறந்தது.

நிமிர்ந்த கதிரேஷின் முகம் மலர்ந்தது.

கதவைத் திறந்து - ரெஸ்டாரெண்டின் மெல்லிய இருட்டுக்குள் கதிரேஷைப் பார்த்து புன்னகைத்த படி பக்கத்தில் வந்து உட்கார்ந்தான் யோகேஷ்.

கதிரேஷ் பதிலுக்கு புன்னகைத்தான்.

''இன்னும் காணோமேன்னு... இப்பத்தான் நினைச் சேன்.''

''இன்ஸ்பெக்டர் தனபாலைக் கூட்டிக்கிட்டு விசா ரணைக்காக நாய் மாதிரி அங்கே இங்கே அலையவே... நேரம் சரியா இருக்கு. அரை மணி நேரத்துக்கு முன் னாடிதான்... அவரை போலீஸ் ஸ்டேஷன்ல விட் டேன்.''

பேரர் கட்லெட்டோடு வர -

கதிரேஷ் யோகேஷிடம் கேட்டான்.

''உனக்கும் கட்லெட் சொல்லட்டுமா..?''

''வேண்டாம்! லைம் ஜூஸ் போதும்.. மத்தியானத்தி லிருந்து வயிறு சரியில்லை.''

பேரரிடம் ஒரு லைம் ஜூஸுக்கு ஆர்டர் சொல்லி அனுப்பிவிட்டு - கட்லெட்டை துண்டாடிக் கொண்டே யோகேஷிடம் கேட்டான் கதிரேஷ்.

''நியூஸ் படிச்சியா?''

''ம்... பார்த்தேன்.''

''போலீஸ் திணர்றாங்க இல்லை?''

''ஆமா...'' என்ற யோகேஷ் குரலைத் தாழ்த்திக் கொண்டு கேட்டான்.

''அந்த ரெண்டு கான்ஸ்டபிள்களையும் நீ எப்படி சமாளிச்சேன்னு டெலிபோன்ல சொன்னதை என்னால அன்னிக்கு சரியா ஹியர் பண்ண முடியலை. இப்ப சொல்லு. பணம் எடுக்கப் போன அந்த ராத்திரி என்ன நடந்தது?''

கதிரேஷ் ஒரு கட்லெட் துண்டை - டொமேட்டோ சாஸில் குளிப்பாட்டி வாய்க்குள் திணித்துக் கொண்டே சிரித்தான்.

''அதையேன் கேட்கிற... யோகேஷ்! உன்னோட மாமா, பணம் இருந்த ப்ரீப் கேஸை வெச்சுட்டுப் போனதுமே - நான் வேகவேகமா போய் எடுத்தேன். ப்ரீப் கேஸை கையில் எடுத்ததுதான் தாமதம்... பக்கத்து சந்திலிருந்து அந்த ரெண்டு கான்ஸ்டபிள்களும் வேகமா 'தபதப'ன்னு ஓடி வந்தாங்க. ஒரு செக்கண்ட் அரண்டு போயிட்டேன். கான்ஸ்டபிள்ஸ் என்னை மிரட்ட ஆரம்பிச்சாங்க. 'வந்தது யாரு..? பெட்டியில என்னா?'ன்னு கேட்டு... துளைச்சிட்டாங்க.

''அப்புறம்... என்ன பண்ணினே...?''

''கான்ஸ்டபிள்கள் எகிற ஆரம்பிச்சதும்.. நான் ஒரு புதுக்கதையைச் சொன்னேன். மிரண்டு போயிட் டாங்க...''

''புதுக்கதையா...?''

''ஆமா...! 'அரசியல் செல்வாக்குள்ள ஒரு நபர்க் காகவும், ஒரு மந்திரிக்காகவும்... பெரிய பெரிய தொழி லதிபர்கள்கிட்டயிருந்து மாமூல் வாங்கி அவங்ககிட்ட சேர்ப்பிக்க வேண்டியது என்னோட பொறுப்பு. ஒரு பார்ட்டி குடுத்துட்டுப் போயிருக்கிற ப்ரீப் கேஸ் இது. அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே இது போயாகணும்... நீங்க என்ன நம்பாமே போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிட்டுப் போனா... விவகாரம் பெரிசாயிடும். மந்திரி உங்களை எப்படி கவனிக்கணுமோ அப்படி கவனிச்சுடு வார்.' இப்படி நான் சொன்னதும் ரெண்டு கான்ஸ் டபிள்ஸும் அரண்டு போயிட்டாங்க.''

''அப்புறம்...?''

''அப்புறம் என்ன...? ஆளுக்கு ஆயிரம் ரூபாய் குடுத்து இந்த விஷயத்தை வெளியே யார்கிட்டேயும் சொல்லக் கூடாதுன்னு வாயை அடைச்சுட்டு - பைக்கை... கிளப்பிட்டு வந்துட்டேன். இனிமே வாயைத் திறந்தா மாட்டிக்கப் போறது அவங்கதான். ஏன்னா கை நீட்டி லஞ்சம் வாங்கியிருக்காங்களே...?''

''அந்த கான்ஸ்டபிள்ஸ் இன்னொரு தடவை உன்னைப் பார்த்தா கண்டுபிடிச்சுடுவாங்களா...?''

''முடியாது... ஏன்னா அன்னிக்கு ராத்திரி... கொஞ்சம் வித்தியாசமான மேக்கப்ல இருந்தேன். ஒட்டு மீசை, முடி கொட்டிப் போன சைஸில் ஒரு விக். துருத்தின

மாதிரியான பல் செட். பைக்ல போலி நெம்பர் ப்ளேட்... யாராலயும் என்னைக் கண்டுபிடிக்க முடியாது...'' சிரித்த கதிரேஷ் கேட்டான்.

''போலீஸ் இப்ப எந்தத் திசையில் போயிட்டிருக் காங்க?''

''தப்பான திசையில் போயிட்டிருக்காங்க. நல்ல வேளையா ப்ராஜெக்ட் மானேஜர் பத்மநாபனை டெல்லி யில் பிடிக்க முடியலை. அவர் நியூ ஜெர்ஸிக்கு ஃப்ளைட் ஏறிட்டார். சேதுபதியும் பத்மநாபனும் சேர்ந்து பண மோசடி பண்ணியிருக்கலாங்கிறது... போலீஸோட எண்ணம்... சேதுபதியை பத்மநாபன்தான் ஆட்களை வெச்சு தீர்த்துக் கட்டியிருக்கலாம்ன்னு இன்ஸ்பெக்டர் தனபால் அஸ்யூம் பண்ணி வெச்சிருக்கார்.''

பேரர் லெமன் ஜூஸைக் கொண்டு வந்து வைத்து விட்டுப் போகும் வரை மௌனமாய் இருந்த கதிரேஷ் - பிறகு கேட்டான்.

''உன் மேல் யாருக்கும் - எந்த சந்தேகமும் வர லையே...?''

''எப்படி வரும்? மருமகனை எந்த மாமனாராவது சந்தேகப்படுவாரா...?''

''பட்... போலீஸோட பார்வை அப்படி இருக்காது. யூ ஷுட் பி காஷியஸ்...''

''அதை விடு! உன் சிஸ்டர் ஹம்ஸா எப்படி யிருக்கா...?''

''சந்தோஷமாயிருக்கா! அஞ்சு லட்சம் பணம் ரொப்பின ப்ரீஃப் கேஸை கையில் வாங்கியதும் ஹம்ஸா என்ன சொன்னா தெரியுமா?''

''என்ன சொன்னா?''

''சொல்லட்டுமா...?''

''ம்... சொல்லு...''

''உன் உடம்பு பூராவும் முத்தம் கொடுக்கணுமாம் - ஒரு இடம் பாக்கியில்லாமே...''

யோகேஷ் சிரித்தான். ''இந்த அமளியெல்லாம் ஓயட்டும். சாவகாசமா வந்து முத்தங்களை வாங்கிக்கறேன்னு சொல்லு...''

''ஹம்ஸா உன்னைப் பார்க்கத் துடிக்கிறா...''

''போட்ட திட்டம் இன்னும் முடியலை. போலீஸ் தீவிரமான விசாரணையில் இருக்கும் போது - நாம உணர்ச்சிகளைக் காட்டிக்காமே பொம்மைகள் மாதிரி இருந்துடறது பெட்டர். ஹம்ஸாவை ஒரு வாரம் பத்து நாள் கழிச்சு வந்து பார்க்கிறேன்.''

''அப்புறம் இன்னொரு விஷயம்...!''

''என்ன...?''

''அந்த அஞ்சு லட்ச ரூபாய் பணத்துல ரெண்டு லட்ச ரூபாயைக் கட்டிட வேலைகளுக்கு எடுத்துக்கலாமான்னு ஹம்ஸா கேட்கச் சொன்னா...''

''இதோ பார் கதிரேஷ்...! அந்தப் பணம் அஞ்சு லட்சமும் உன் தங்கச்சி ஹம்ஸாவுக்குத் தான்... அவளுக்கு எப்படி இஷ்டமோ... அப்படி செலவு பண்ணச் சொல்லு. அவளுக்குப் பணத்தைக் கொடுக்கத்தானே... இந்தத் திட்டத்தையே போட்டேன்.''

லைம் ஜூஸைக் குடித்து முடித்துவிட்டு எழுந்தான் யோகேஷ்.

''சரி.. நான் புறப்படறேன். ரெஸ்டாரெண்ட்டுக்கு கூட்டம் வர ஆரம்பிச்சுடுச்சு...''

''மறுபடியும் எப்போ...?''

''அடுத்த ஞாயிற்றுக்கிழமை ராத்திரி எட்டு மணிக்கு சூர்யா ஹோட்டல் ரெஸ்டாரெண்ட்டுக்கு வந்துடு...''

''சரி...''

''அந்த இரண்டு கான்ஸ்டபிள்களாலே எந்த பிரச்சனையும் வந்துடாதே...?''

''ஒரு பிரச்சனையும் வராது...! நீ மனசைப் போட்டு அலட்டிக்காதே யோகேஷ். ''

யோகேஷ் - ரெஸ்டாரெண்ட்டை விட்டு வெளியே வந்ததும் - கதிரேஷ் காபியை வரவழைத்து சாப்பிட்டு விட்டு - பத்து நிமிஷம் கழித்து வெளியே வந்தான்.

அன்னபூர்ணா ஜனத்திரளில் இருந்தது. டூ வீலர்ஸ் பார்க்கிங்கில் வாகனங்கள் நெருக்கியடித்துக் கொண்டு நின்றிருந்தன.

ரோட்டின் எதிர்பக்கத்தில் - சித்தி விநாயகர் கோயில் தெரிய, அருகிலேயே டெலிபோன் பூத்.

'ஹம்ஸாவுக்குப் போன் பண்ணி யோகேஷ் பணத்தை செலவழிக்க அனுமதி கொடுத்த விஷயத்தை சொல்லி விடலாமா...?'

பூத்தை நோக்கிப் போனான்.

புதிய பூத், பெயிண்ட் வாசனையோடு புதுப்பெண் மாதிரி இருந்தது.

உள்ளே நுழைந்து - கதவைச் சாத்திக் கொண்டவன் ரிஸீவரை எடுத்து - டயல் செய்தான். ரிங் போய் ஹம்ஸாவின் 'ஹலோ' குரல் கேட்டதும் ரூபாய் நாணயத்தைப் போட்டான்.

லைன் உயிருக்கு வந்தது.

''ஹலோ...''

''ஹம்ஸா...! நான் கதிரேஷ்...''

ஹம்ஸா பேசினாள். குரல் உடைந்திருந்தது.

''கதிரேஷ்! நீ உடனே... புறப்பட்டு வீட்டுக்கு வா...''

''ஏன்... என்ன விஷயம்...?''

''இன்ஸ்பெக்டர் ஒருத்தர் உன்னைப் பார்க்கிறதுக்காக வந்திருக்கிறார்.



# 13

கதிரேஷ் தடதடக்கிற இருதயத்தோடு பைக்கில் பயணம் செய்து - வீட்டைத் தொட்டு வாசலை நெருங்கிய போது - போலீஸ் ஜீப் ஒன்று வாசலில் நின்றிருந்தது.

உடம்பின் முக்கிய இடங்களில் கலவரக் கொடி பறந்தது.

'இன்ஸ்பெக்டர் எதற்காக வந்திருப்பார்...?'

பைக்கை ஸ்டாண்டிட்டு நிறுத்திவிட்டு உள்ளே போனான். முன் அறை சோபாவில் இன்ஸ்பெக்டர் தனபால் - ஒரு வார இதழைப் புரட்டியபடி காத்திருக்க - சமையலறைக்குள் டீ போடும் முயற்சியில் இருந்தாள் ஹம்ஸா.

கதிரேஷ் முகத்தை இயல்பாய் வைத்துக் கொண்டு "வாங்க இன்ஸ்பெக்டர்!" என்றான்.

தனபால் கையில் வைத்திருந்த வார இதழை டீபாயின் மேல் போட்டு விட்டு அவனை ஏறிட்டார்.

"நீங்க கதிரேஷ்...?"

"ஆமா ஸார்..."

"உட்காருங்க... உங்ககிட்ட ஒரு சின்ன என்கொய்ரி!"

"ரிகார்டிங் வித்...?"

"சொல்றேன்...! உங்களுக்கு சேதுபதியைத் தெரியுமா...?"

"சேதுபதி...?"

"எஸ்...?"

முகத்தை புரியாத்தனமாய் வைத்துக் கொண்டு -

"எங்கேயோ கேள்விப்பட்ட பேர் மாதிரி இருக்கே...?" என்றான்.

"நல்லா யோசனை பண்ணிப் பாருங்க கதிரேஷ்..."

கதிரேஷ் ஜாக்கிரதையானான். 'இன்ஸ்பெக்டர் தனபால் சேதுபதியும் நானும் காலேஜ்மெட்ஸ் என்பதை எப்படியோ மோப்பம் பிடித்துக் கொண்டுதான் வந்திருக்க வேண்டும். தெரியாது என்று சொல்லிக் கண்ணை மூடுவது சரியில்லை?'

கதிரேஷ் யோசிப்பவனைப் போல் பாவ்லா செய்து விட்டு பிறகு மெல்லிய குரலில் சொன்னான்.

"காலேஜ் டேஸ்ல என்கூட சேதுபதின்னு ஒருத்தன் படிச்சான்."

''அந்த சேதுபதியைக் கடைசியா என்னிக்குப் பார்த்தீங்க?''

''காலேஜ் டேஸ்ல பார்த்ததுதான்... அதுக்கப்புறம் பார்க்கலை.''

''இன்னிக்கு பேப்பர் பார்த்தீங்களா...?''

''பார்க்கலை...''

''பாருங்க...'' கையில் சுருட்டி வைத்திருந்த பேப்பரை கதிரேஷிடம் நீட்டினார் தனபால். ''பேப்பரோட வலது பக்க மூலையைப் பாருங்க.''

''பேப்பர்ல... என்ன ஸார்...?''

''பாருங்க..''

செயற்கையாய் ஒரு ஆர்வத்தை வரவழைத்துக் கொண்டு பேப்பரின் வலது பக்க மூலையில் வெளியாகியிருந்த - சேதுபதி கொலைச் செய்தியை படித்து விட்டு - கண்களை விரித்து திகைப்புக் காட்டினான்.

''சேதுபதி மர்டரா... எப்படி ஸார்...? என்ன ரீஸன்..?''

''இன்னமும் எதுவும் தெரியலை... அதைப் பத்தின இன்வெஸ்டிகேஷன்ல... இப்பத்தான் இறங்கியிருக்கேன்.''

''நான் சேதுபதிக்கு ஃப்ரண்ட்ங்கிற விஷயத்தை உங்களுக்கு யார் ஸார் சொன்னது?''

''யாரும் சொல்லலை. சேதுபதி வீட்டை சோதனை பண்ணிப் பார்த்த போது... பரண்மேல கட்டிப் போட்டிருந்த ஒரு புத்தகக் கட்டிலிருந்து ஒரு ஆட்டோகிராப் புத்தகம் கிடைச்சது. காலேஜ்ல ஃபேர்வல் டே அன்னிக்கு ஸ்டூடண்ட்ஸ் பரஸ்பரம் கையெழுத்து வாங்கிக் கிற பழக்கம் உண்டு. அதே போல் சேதுபதியும் தனக்கு

வேண்டிய காலேஜ் மெட்ஸ்கிட்ட கையெழுத்து வாங்கி யிருக்கார். அதுல உங்க கையெழுத்தும் அட்ரஸும் இருந்தது. கிட்டத்தட்ட முப்பது பேர் அந்தப் புத்தகத்துல கையெழுத்துப் போட்டிருக்காங்க. அதையெல்லாம் லிஸ்ட் பண்ணி ஒவ்வொருத்தரையா விசாரிச்சுட்டு வர்றோம். இதே ஊர்ல இருக்கிற சேதுபதியை நீங்க எப்படிப் பார்க்காமே இருந்தீங்க கதிரேஷ்...?''

''அதான் ஸார்... எனக்கும் ஆச்சர்யமாயிருக்கு. சேதுபதிக்கு சொந்த ஊர் மெட்ராஸ். அவன் எப்ப கோயமுத்தூர் வந்து செட்டிலானான்னு தெரியலை...''

''இன்னொரு கேள்வி...''

''ப்ளீஸ்...''

''உங்களுக்கு யோகேஷைத் தெரியுமா..?''

''தெரியும்... யோகேஷும் எனக்கு காலேஜ்மெட்தான். அவன் இன்னிக்கு பெரிய இடத்துல பொண்ணைக் கட்டிக்கிட்டு சந்தோஷமா இருக்கான். வழியில எங்கேயாவது பார்த்தா 'ஹலோ' சொல்றதோடு சரி. .''

''அந்த யோகேஷோட மாமனாரை ஏமாத்தி - சேது பதியும் இன்னொருத்தரும் அஞ்சு லட்ச ரூபாயை மோசடி பண்ணியிருக்காங்க.''

ஹம்ஸா தேநீர் கோப்பைகளோடு வந்தாள். டீபாயின் மேல் பரப்பினாள். முகத்தில் எந்த சலனத்தையும் காட்டாமல் இறுக்கமாய் வைத்திருந்தாள்.

கதிரேஷ் ஆச்சர்யம் காட்டினான்.

''அஞ்சு லட்சம் பண மோசடியா...?''

''எஸ்... யோகேஷும், அவருடைய மனைவியும் கடத்தப்பட்டதா பொய் சொல்லி - ரெண்டு மணி நேரத்

துக்குள்ளே அஞ்சு லட்சத்தை மிரட்டி வாங்கியிருக்காங்க. சேதுபதியை போலீஸ் சந்தேகப்பட்டு நெருங்குறதுக் குள்ளே அவரைக் கொலையும் பண்ணிட்டாங்க."

"சேதுபதி... ஒரு அப்பாவி ஸார்..."

"யோகேஷும் இதையேதான் சொன்னார். சேது பதியை முன்னால நிறுத்தி யாரோ இந்தக் காரியத்தை பண்ணியிருக்காங்க. காலேஜ் டேஸ்ல சேதுபதிக்கு யார் நெருக்கமான ஃப்ரண்டஸ்...?"

"அப்படின்னு குறிப்பிட்டு சொல்ல முடியாது சார். சேதுபதி எல்லார்கிட்டயும் நல்லாப் பழகற டைப். ப்ளீஸ்... ஹேவ் ஸம் டீ... இன்ஸ்பெக்டர்."

தனபால் டீயைப் பருகிவிட்டு எழுந்தார்.

"தாங்க்யூ வெரிமச் ஃபார் யுவர் டீடெய்ல்ஸ்."

"வெல்கம் ஸார்..."

தனபால் ஜீப்பில் புறப்பட்டுப் போனதும் - கதிரேஷ் ஹம்ஸாவிடம் திரும்பினான்.

"இன்ஸ்பெக்டர் எப்ப வந்தார்...?"

"நீ வெளியே புறப்பட்டுப் போன கொஞ்ச நேரத்துக் குள்ளே வந்துட்டார்..."

"அந்த சேதுபதி பாவி... காலேஜ் டேஸ் ஆட்டோ கிராப் புக்கை இப்படி பத்திரப்படுத்தி வெச்சிருப் பான்னு... கொஞ்சம் கூட நினைச்சுப் பார்க்கலை."

ஹம்ஸா புன்னகைத்தாள்.

"ஆட்டோகிராப் புக்கை வெச்சுகிட்டு... போலீஸால ஒண்ணும் பண்ண முடியாது. வெறுமனே விசாரிச்சுட் டுப் போலாம். அவ்வளவுதான்... சரி யோகேஷைப் பார்த்தியா...?"

''பார்த்தேன்...''

''என்ன சொன்னார்...?''

''பணத்தைக் கட்டிட செலவுக்கு உபயோகப்படுத்திக்கச் சொன்னான்.''

மலர்ந்தாள் ஹம்ஸா.



# 14

நீரஜா தன் வீட்டு ஹால் சோபாவில் உட்கார்ந்து - டெலிபோனில் சற்று சத்தமாய் பேசிக் கொண்டிருந்தாள்.

''அந்த ரெட் கலர் புடவையைத் தானே சொல்றே...?''

''.....''

''ஆமா... அதைத்தான் கட்டிக்கிட்டு இருக்கேன்.''

''.....''

''நல்லாயில்லாமே இருக்குமா? சிங்கப்பூரிலிருந்து என் கணவர் வாங்கிட்டு வந்ததாச்சே... வெரி லேட்டஸ்ட். இன்னும் இந்தியாவுக்கு வரலை.''

''.........''

''உனக்கு வேணும்ன்னா... நீ சிங்கப்பூர்க்குத் தான் போகணும்.''

''......''

''ஒரு நாளைக்கு வேணுமானா தர்றேன். கட்டிக்க... விலை எவ்வளவு தெரியுமா? ரெண்டாயிரம்...''

''.......''

''அடுத்த வாரம் தானே? தர்றேன்... கட்டிட்டு ட்ரை வாஷ்க்குப் போட்டுக் குடுத்துடு.''

''...........''

''ம்... சரி...''

நீரஜா ரிஸீவரை வைத்துவிட்டுத் திரும்பினாள். இன்ஸ்பெக்டர் தனபால் நின்றிருந்தார்.

''வாங்க... ஸார்...''

''அப்பா இல்லையாம்மா..?''

''கம்பெனிக்குப் போயிருக்கார்...''

''யோகேஷ்...?''

''ஐ'யாம் ஹியர்... இன்ஸ்பெக்டர்..''

மாடிப்படிகளிலிருந்து மெல்ல இறங்கிக் கொண் டிருந்தான் யோகேஷ். ''இன்னிக்கு எனக்கு கொஞ்சம் உடம்பு முடியலை. அதான் ஆபீஸுக்குப் போகலை...''

இன்ஸ்பெக்டரை நெருங்கி - அவருக்கு சோபாவைக் காட்டிவிட்டு தானும் உட்கார்ந்தான்.

''இன்வெஸ்டிகேஷன்... எந்த அளவில் இருக்கு இன்ஸ்பெக்டர்...?''

''ஆட்டோகிராப் புக்கில் இருக்கிற முப்பது பேரில் இருபது பேருக்கு மேலே வெளியூரில் இருப்பவர்கள். ஒரு போலீஸ் ஸ்க்வாட், விசாரணைக்காகப் போயி ருக்கு.''

''பத்மநாபன் விஷயம் என்னாச்சு...?''

''அவரை சந்தேக லிஸ்ட்டிலிருந்து எடுத்துட்டோம்.''

உள்ளுக்குள் அதிர்ந்தாலும் - அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் கேட்டான்.

''ஏன்...?''

''ஹி... ஈஸ் ஹார்ம்லஸ்... ஒரு பைனான்ஸ் கம்பெனியிலிருந்து தான் அவருக்குப் பணம் கிடைச்சு - நியூஜெர்ஸி போயிருக்கார்ங்கிறது கன்ஃபார்ம் ஆயிடுச்சு...''

''பத்மநாபன் இல்லைன்னா வேற யாரைச் சந்தேகப் படறீங்க?''

''சேதுபதியைப் பத்தின தகவல்களைத் திரட்டிக்கிட்டு இருக்கேன். அவர் வேலையை ராஜினாமா பண்ணிட்டு - ஏதோ பிசினஸை ஆரம்பிக்கிறதுக்காக முயற்சிகளை மேற்கொண்டிருந்தாராம். பிசினஸ் தொடங்க பணம் தேவைப்பட்டதால... அவருக்கு பணத்தாசை காட்டிய யாரோ... இந்த இடத்தில் நாடகத்தைப் போட்டு அஞ்சு லட்சத்தைத் தட்டிக்கிட்டுப் போயிருக்காங்க... பணம் கைக்கு வந்ததும் - அவரைத் தீர்த்துக் கட்டியிருக்காங்க...''

யோகேஷ் உள்ளுக்குள் வியர்த்தான். 'இன்ஸ்பெக்டர் சாதாரணமானவர் இல்லை. நடந்த சம்பவத்தை துல்லியமாய் கணிக்கிறாரே?'

தனபால் கேட்டார்.

''மிஸ்டர் கேசவ் எத்தனை மணிக்கு வருவார்...?''

''மாமாகிட்ட ஏதாவது சொல்லணுமா... இன்ஸ்பெக்டர்?''

''அவர்கிட்டேயிருந்து ஒரு தகவல் வேணும்.''

''என்ன...?''

''அஞ்சு லட்ச ரூபாய் கொண்டு போய் போட்டதாய் சொன்னார். என்னென்ன டினாமினேஷன்ல நோட்ஸ் இருந்ததுன்னு தெரியணும். புது கரன்ஸியா இருந்தா சுலபமா கண்டுபிடிச்சுடலாம்.''

''மாமா... இப்ப கம்பெனியில்தான் இருப்பார். போய்ப் பார்த்துடறீங்களா...?''

''வேண்டாம்... அவர் வீட்டுக்கு எத்தனை மணிக்கு வருவார்..?''

''எப்படியும் ராத்திரி எட்டு மணியாயிடும்.''

''எட்டு மணிக்கே வந்து பார்க்கிறேன்...''

தனபால் - எழுந்து கொண்டார்.



# 15

இரவு மணி ஒன்பது.

கேசவ் நைட் கவுன் தரித்து - டி.வி. பார்த்துக் கொண டிருக்க, போலீஸ் ஜீப் போர்டிகோவில் வந்து நின்றது. கேசவ் டி.வி.யை அணைத்து விட்டு எழுந்து போய் - உள்ளே வந்து கொண்டிருந்த தனபாலை எதிர்கொண்டார்.

''எட்டு மணிக்கு வர்றதா சொன்னீங்களாம்...! உங் களுக்காகத்தான் காத்திட்டிருக்கேன்.''

''ஸாரி... வெளியே கொஞ்சம் வேலையிருந்தது.''

ஹால் சோபாவில் போய் உட்கார்ந்தார்கள்.

''அஞ்சு லட்ச ரூபாய் என்ன டினாமினேஷன்னு கேட்டீங்களாம். மாப்பிள்ளை சொன்னார். எல்லாம் நூறு ரூபாய் நோட்டுகள்தான்.''

''புது கரன்ஸி இருந்ததா?''

''நான் கவனிக்கலையே...''

''யோகேஷ் வீட்ல இருக்காரா...?''

''மாப்பிள்ளை தானே...? இருக்கார். கூப்பிடணுமா?''

''ம்...''

கேசவ் இண்ட்டர்காமைத் தட்டி - யோகேஷைக் கூப்பிட - அடுத்த சில விநாடிகளில் யோகேஷும், நீரஜாவும் மாடியறையிலிருந்து வெளிப்பட்டார்கள். பக்கத்தில் வந்ததும் தனபால் யோகேஷைப் பார்த்து புன்னகைத்தார்.

''மிஸ்டர் யோகேஷ்! உங்ககிட்ட ஒரு கேள்வி...''

''எ... என்ன...?''

''உங்க மாமனார் எடுத்துட்டுப் போன - அஞ்சு லட்ச ரூபாயில் புது கரன்ஸி நோட்டுக்கட்டு ஏதாவது இருந்ததா...?''

''எ... எ... என்னைக் கேட்டா...? எனக்கெப்படித் தெரியும்...?''

''உங்களைக் கேட்காமே வேற யார்கிட்ட கேக்கிறது...? உங்க மாமனார்கிட்டயிருந்து அஞ்சு லட்ச ரூபாயை அபகரிக்கத் திட்டம் போட்டதே நீங்கதானே?''

கேசவ் - நீரஜா திடுக்கிட்டார்கள்...

''இன்ஸ்பெக்டர்... வாட்... டூ... யூ.. ஸே..?''

''எஸ்...! நடந்த சம்பவங்களுக்கெல்லாம் மூல சூத்ரதாரி உங்க மருமகன்தான். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடிதான் எல்லாமே வெளிச்சத்துக்கு வந்தது.

யோகேஷ் வீறிட்டான். ''நோ... ஓ... ஓ... ஓ...! இன்ஸ்பெக்டர்! எதை ஆதாரமா வெச்சு.... இவ்வளவு பெரிய குற்றச்சாட்டை என் மேல சுமத்தறீங்க...?''

தனபால் புன்னகைத்தார்.

''ஆதாரம் வேணுமா யோகேஷ்..?'' கேட்டவர் போர்டிகோவில் நின்றிருந்த ஜீப்பை திரும்பிப் பார்த்து கையை அசைத்தார்.

அடுத்த விநாடி

கதிரேஷும் [illegible] ஸாவும் இரண்டு கான்ஸ்ட பிள்களுக்கு நடுவேல [illegible] மாய் தலைகுனிந்து நடந்து வந்தார்கள்.

யோகேஷ் திடுக்கிட்டு - உடனே முகம் பூராவும் வியர்வை வாங்க - தனபால் எழுந்து அவன் அருகே போய் தோளைத் தட்டினார்.

''ஆதாரம் போதுமா... இன்னும் வேணுமா...?''

கேசவ் - நீரஜா பதட்டப்பட்டார்கள். ''இன்ஸ்பெக்டர்! இதெல்லாம் என்ன...? எங்களுக்கு ஒண்ணுமே புரியலை...''

''புரியும்படியாவே சொல்றேன் மிஸ்டர் கேசவ்! உங்க மருமகன் பணத்துக்காக உங்க மகள் நீரஜாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாலும் - அவரோட நாட்ட மெல்லாம் ஹம்ஸா மேலதான். ஹம்ஸா - யோகேஷ் தொடர்புக்கு கதிரேஷ் முழு ஆதரவு. ஹம்ஸாவுக்கு யோகேஷ் அப்பப்ப பண உதவி பண்ணினாலும் - அது

அவளுக்குப் போதுமானதா இல்லை இந்த நிலை மையில் ஆர்.எஸ்.புரத்துல இடம் வாங்கி - ஒரு வீட்டைக் கட்டும் முயற்சியில் ஹம்ஸாவும், கதிரேஷும் ஈடுபட்டிருந்தாங்க. கட்டிட வேலைக்கு பணம் அதிகமா தேவைப்பட்டது. யோகேஷ்கிட்டே கேட்டாங்க. மாமனார் வசதியாக இருந்தாலும் லட்சக்கணக்கில் பணம் வாங்க முடியாதே... ஸோ பணத்துக்காக யோகேஷ் ஒரு திட்டம் போட்டுக் கொடுத்தார். புது பிசினஸ் தொடங்க - பணத்துக்காக ஆலாய் பறந்துட்டிருந்த சேதுபதியையும் இந்தத் திட்டத்துல சேர்த்துக் கிட்டாங்க. சேதுபதிக்கு ரெண்டு லட்ச ரூபாய் தர்றதாய் பேச்சு. ஆனா, பணம் கைக்கு வர் [illegible] ம் - சேதுபதியை - போலீஸ்ல காட்டிக் கொடுத்து [illegible] காலை செஞ்சுட வேண்டியது. உங்களுக்கும், நீ [illegible] க்கும் யோகேஷ் மேல் சந்தேகம் வந்துடக் கூடாதுங்கிறதுக்காக ரிச்சி ரிசார்ட்டிலிருந்து இந்தத் திட்டம் ஆரம்பமாயிற்று. எல்லாமே துல்லியமாய் நடந்தது.''

சில விநாடிகள் பேச்சை நிறுத்திவிட்டுத் தொடர்ந்தார் தனபால். ''இந்த கேஸை நான்கூட தப்பான கண்ணோட்டத்தில் எடுத்துக்கிட்டு இன்வெஸ்டிகேஷனை நடத்திட்டிருந்தேன். ஆனா இன்னிக்கு சாயந்திரம் உங்களைப் பார்க்கிறதுக்காக இங்கே வந்தப்ப - நீரஜா கட்டியிருந்த சேலை என்னோட கவனத்தை கவர்ந்துச்சு. காரணம் அதே கலர், அதே டிசைன் சேலையை - கதிரேஷை விசாரிக்க அவன் வீட்டுக்குப் போன போது - அவரோட சிஸ்டர் ஹம்ஸாவும் கட்டியிருந்தா... ரெண்டு பேரும் ஒரே மாதிரியான சேலையைக் கட்டியிருக்காங்களேன்னு நான் திகைச்சு நின்னப்ப - நீரஜா டெலிபோனில்

தன்னோட ஃப்ரண்ட்கிட்டே, 'சிங்கப்பூரிலிருந்து என் கணவர் வாங்கிட்டு வந்ததாச்சே! வெரி லேட்டஸ்ட். இன்னும் இந்தியாவுக்கு வரைல'ன்னு சொன்னதும் என் மனசுக்குள்ளே ஒரு ஃப்ளாஷ். யோகேஷுக்கும், ஹம்ஸாவுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ...? சேதுபதி, கதிரேஷ் இரண்டு பேருமே யோகேஷுக்கு காலேஜ் மெட்ஸ்... அதனால நடந்த சம்பவங்கள்ல யோகேஷுக்குப் பங்கு இருக்குன்னு மனசுக்குப் பட்டது. நேரே ஹம்ஸா வீட்டுக்குப் போனேன். கதிரேஷ் வீட்ல இல்லை. ஹம்ஸா மட்டும் இருந்தா. அவ கட்டியிருந்த சேலையைக் காட்டி 'இந்தச் சேலையை எடுத்துக் கொடுத்தது யார்'ன்னு கேட்டேன். யாரும் எடுத்துத் தரலைனும், கடையில் போய் எடுத்ததாவும் சொன்னா... எந்தக் கடைன்னு கேட்டதும் முழிச்சா...! போலீஸ் தோரணையைக் காட்டி விசாரிச்சதும் பயந்து போய் எல்லாத்தையும் சொல்லிட்டா... அரை மணி நேரம் காத்திருந்து - வெளியே போயிருந்த கதிரேஷ் வந்ததும் - அவனையும் கைது பண்ணி - சுடச்சுட இங்கே கொண்டு வந்தேன்.''

நீரஜா, யோகேஷை 'சே' என்று ஒரு பார்வை பார்க்க - கேசவ் தனபாலிடம் நிமிர்ந்தார்.

''இந்த நிமிஷத்திலிருந்து இவன் எனக்கு மருமகன் இல்ல. உங்க கடமையைச் செய்யுங்க இன்ஸ்பெக்டர்.''

தனபால் கை விலங்கை எடுத்தார்.



# விடாதே விவேக் விடாதே

## 1

உலகின் அத்யாவசியப் பொருளாக மாறி விட்ட மொபைல் போன் எந்த நாட்டில் அதிக மாய் உற்பத்தி செய்யப்படுகிறது தெரியுமா? ஜப்பான் என்று சொல்வீர்கள். அது தவறு. சரியான பதில் சீனா. ஒரு ஆண்டில் மட்டும் 24 கோடி மொபைல் போன்களை உற்பத்தி செய்துள்ளது. இதில் 14 கோடி போன்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட் டுள்ளன.

ரூபலா விஷ்ணுவிடம் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''இந்த உலகத்துல ஏழு கடல், 2500 பெரிய நதி; 5000 சிறிய நதி, பத்தாயிரம் ஏரி, ஐம்பதாயிரம் குளம், பத்து லட்சம் கிணறு இருக்கு. அப்புறம் நீ மட்டும் ஏன்டா குளிக்க மாட்டேங்கிறே...?''

''மேடம்! இது கிரேட் இன்ஸல்ட்... நான் குளிக்கலைன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்...?''

''முன்னாடியெல்லாம் நீ வீட்டுக்குள்ளே வரும்போது செண்ட் வாசனை வராது. இப்போ நீ உள்ளே வந்தாலே மாங்காட்டு மைனர் ரேஞ்சுக்கு செண்ட் வாசனை தூக்குதே...? சரி... போட்டதுதான் போட்டே... கொஞ்சம் நல்ல செண்ட்டா போடக்கூடாதா...? நீ காம்பௌண்ட் கேட்டைத் திறந்துகிட்டு உள்ளே வரும்போதே என் வயித்துக்குள்ளே குஜராத் கலவரம் ஆரம்பமாயிடுதே...?''

''மேடம்! இந்த செண்ட்டைப் பத்தி கேவலமாய் பேசாதீங்க... ஐஸ்வர்யா ராயும், சானியா மிர்ஸாவும் கோடிக்கணக்கான ரூபாயை சம்பளமாய் வாங்கிகிட்டு இந்த செண்ட் விளம்பரத்துல நடிச்சிருக்காங்க. இதனோட விலை எவ்வளவு தெரியுமா மேடம்?''

''எவ்வளவு?''

''பத்து மில்லி செண்ட் - ரெண்டாயிரம் ரூபாய்.''

''அதுதான் இந்த நாறு நாறுது...''

''மேடம்...'' விஷ்ணு கோபமாய்ப் பற்களைக் கடித்துக் கொண்டிருக்கும்போதே விவேக் உடை மாற்றிக் கொண்டு தன்னுடைய அறையிலிருந்து வெளிப்பட்டான்.

''என்னடா... சண்டை...?''

''பாருங்க பாஸ்... மேடம்... நான் ஸ்பிரே பண்ணி யிருக்கிற செண்ட்டைப் பத்தி மோசமா கமெண்ட் பண்றாங்க...''

விவேக் சிரித்தான். ''ஆமா... நான்கூட கேட்க ணும்ன்னு நினைச்சேன்... எப்பயிருந்துடா உனக்கு இந்த செண்ட் பழக்கம்?''

''போன மாசம் பத்தாம் தேதியிலிருந்து பாஸ்.''

''அன்னியிலிருந்து என்னடா விசேஷம்...?''

''அன்னிக்குத்தானே சிங்காரச் சென்னையில் தேசிய நதி பாய்கிற சிந்தாதிரிப் பேட்டைக்கு குடி போனேன்... இருபத்தி நாலு மணி நேரமும் ஷிஃப்ட் போட்டுகிட்டு கூவம் மணக்குது பாஸ்! ஒவ்வொரு ஷிஃப்ட்டுக்கும் ஒவ்வொரு பிரத்யேக மணம். செண்ட்டை ஸ்பிரே பண் ணிக்காமே தூங்க முடியாது பாஸ்...''

''நீ மொதல்ல வீடு மாறுடா...! நீ ஸ்பிரே பண்ணி யிருக்கிற செண்ட்டுக்கு அந்தக் கூவமே பரவாயில்லை போலிருக்கு! இது செண்ட் இல்லை. பூச்சிக் கொல்லி மருந்து!'' - விவேக் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவனுடைய செல்போன் 'ஜாரே ஜகான்ஜி அச்சா' என்ற ட்யூனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான். வியப்பில் புருவங்கள் உயர்ந்தன. செல்லின் டிஸ்ப்ளேயில் 'டாக்டர் ஆனந்தகிருஷ்ணன்' என்ற பெயர் தெரிந்தது. செல் காதுக்குப் போயிற்று. ''ஹலோ டாக்டர்...! குட்மார்னிங்!'' விவேக் குரல் கொடுக்க டாக்டர் பதட்டப்பட்டார்.

''டேய்...!''

''ஸாரி பாஸ்...! நீங்க பொறாமைப் படுவீங்கன்னு எனக்குத் தெரியும்... இருந்தாலும் என்கிட்டே இருக்கிற எக்ஸ்ட்ரா கர்ரிகுலர் ஆக்டிவிடியைப் பற்றிச் சொல்லி யாகணுமே... இந்த ஜோஸ்யம் மட்டும் இல்லை பாஸ்...! ஜனவசியம், பண வசியம், காதல் வசியம், சத்ரு வசியம், புத்திர பேறு வசியம், திருமண வசியம், நவக்ரஹ வசியம், இது தவிர மஹாமேரு ஸ்ரீ சக்கரம் மற்றும் சுதர்சன கணபதி, வாஸ்து, நவக்ரஹ மஹாலட்சுமி, குபேர, பிரத்தியங்கரா, பைரவ, சடாட்சர, தன்வந்திரி, இரசமணி யந்திரங்களும்...''

''டேய்...! நீ பேசி முடிச்சுட்டு ஆபீஸ் போய் சேரு. நான் டாக்டர் ஆனந்த கிருஷ்ணனைப் பார்த்துட்டு ஆபீஸ் வந்துடறேன். நான் டாக்டரைப் பார்த்துட்டு வர்ற துக்குள்ளே நீ அந்த பெசன்ட்நகர் டி.வி. நடிகை 'ஸ்ருதி லயா'வோட மர்டர் கேஸ் ஃபைலை முழுசா படிச்சு முக்கியமான பாயிண்ட்ஸை நோட் பண்ணி வை...! இன்னிக்கு என்கொயரி போகணும்.''

''பாஸ்... பாஸ்...!'' விஷ்ணு பின்னாலேயே ஓடி வந்தான். ''நானும் உங்ககூட வர்றேன் பாஸ்...''

''வேண்டாம்... நீ ஆபீஸுக்குப் போ... சொன்ன வேலையைப் பாரு...''

''ப்ளீஸ் பாஸ்...''

ரூபலா குறுக்கிட்டாள். ''என்னங்க... விஷ்ணு இவ்வளவு கெஞ்சறான்... கூட்டிட்டுப் போங்களேன்.''

''இவனைப் பத்தி உனக்குத் தெரியாது ரூபி...! ஹாஸ்பிட்டல்ல ஒரு நர்ஸ் அழகாய் இருக்கக்கூடாது. போய் பேச ஆரம்பிச்சுடுவான்...''

''ஏன்டா! அப்படியா?''

''மேடம்...! இது அபாண்டம்... நான் நர்ஸ்கள் கிட்டே ஜாலியா பேசறதா பாஸ் தப்பா நினைச்சுட்டிருக்கார். நான் நர்ஸ்கள்கிட்டே பேசறதுக்குக் காரணம் அவங்க தொழிலில் இருக்கிற பிரச்னைகளைப் பத்தி தெரிஞ்சுக்கத்தான்...! அப்படி நான் நர்ஸ்கள் கிட்டே பேசினாலும் அந்த நர்ஸ்களுக்கெல்லாம் நாற்பது வயசுக்கு மேல்தான் இருக்கும்... பாஸ்க்கு எப்பவும் என் மேல சந்தேகம்தான்...!''

விவேக் காரில் ஏறி உட்கார்ந்து இக்னீஷியனை உசுப்பினான். விஷ்ணு பக்கத்தில் வந்தான்.

''பாஸ்...''

''வந்து தொலை...! வால் வெளியே தெரியக்கூடாது.''

''தேங்க்யூ பாஸ்...''

கார் கிளம்பியது. காம்பௌண்ட் கேட்டைத் தாண்டி ரோட்டில் பிரவேசித்தபோது விவேக்கின் செல்போன் மறுபடியும் 'ஜாரே ஜகான்ஸி அச்சா' என்று ட்யூன் வாசித்தது. எடுத்து காதுக்கு ஒற்றினான். டாக்டர் ஆனந்த கிருஷ்ணன் பேசினார்.

''விவேக்...! புறப்பட்டுட்டீங்களா?''

''ம்... வந்துட்டிருக்கேன்... வீட்டைத் தாண்டியாச்சு...''

''அப்படீன்னா ஒரு இருபது நிமிஷத்துக்குள்ளே வந்துடுவீங்க...?''

''ம்...''

''விவேக்...! நீங்க ஹாஸ்பிட்டலுக்கு வந்ததும் நேரா ஆபரேஷன் தியேட்டர்க்கு வந்துடுங்க... யார்கிட்டேயும் எதையும் கேட்க வேண்டாம்.''

''டாக்டர்...! எனிதிங்... சீரியஸ்...?''

''எஸ்... வெரி வெரி சீரியஸ்!''

''என்னான்னு தெரிஞ்சுக்கலாமா?''

''இது சொல்லக்கூடிய விஷயம் இல்லை விவேக்...''

''தென்...?''

''பார்க்கக்கூடிய விஷயம்...!'' ஆனந்தகிருஷ்ணன் செல்போனை அணைத்துவிட, விவேக் யோசனை யோடு காரை விரட்டினான்.

''என்ன பாஸ்...?''

''விஷ்ணு...! டாக்டர் ஆனந்தகிருஷ்ணனின் குரலில் ஏகப்பட்ட பதட்டம், ஏதோ சீரியஸான விவகாரம்ன்னு நினைக்கிறேன்...! நேரா ஆப்ரேஷன் தியேட்டர்க்கே வரச் சொல்றார்... உன்னால ஏதாவது கெஸ் பண்ண முடி யுதா?''

''முடியுது பாஸ்...''

''சொல்லு. என்ன...?''

''டாக்டர் ஆனந்தகிருஷ்ணனுக்கு அங்கே என்ன பிரச்னைன்னு எனக்குத் தெரியாது பாஸ்...! பட் ஒரு விஷயம் க்ளீயர் பாஸ்.''

''என்ன...?''

''நாம ஹாஸ்பிட்டல் போய் சேரும்போது அவர் உயி ரோடு இருக்க மாட்டார் பாஸ். ஹி மே பி மர்டர்ட் பை ஸம்படி...''

''உளறாதேடா...''

''இது உளறல் இல்லை பாஸ்... நடக்கப் போகிற உண்மை'' விஷ்ணு தீர்க்கமாய் சொல்ல காரை ஓட்டிக் கொண்டிருந்த விவேக்கின் இருதய மையத்தில் குண்டூசி தைத்த தினுசில் ஒரு பயம் உற்பத்தியாயிற்று. நெற்றி யில் ஒரு வியர்வை கோட்டிங் அரும்ப, விவேக் காரின் வேகத்தை அதிகரித்தான்.



**நமது பூமியின் வானவெளி மண்டலம் பல்வேறு அடுக்குகளால் ஆனது. நமக்கு நேர் மேலே உள்ள அடுக்கின் பெயர் ட்ரோ போஸ்பியர். மழை பொழிவதும், பனி விழுவதும், மேகங்கள் தவழ்வதும் இந்த அடுக்கில்தான். இங்குதான் ஓசோன் படலமும் அமைந்துள்ளது. பூமியின் மேற்பரப்புக்கு 19 முதல் 48 கிலோ மீட்டர்க்கு மேல் இது அமைந்துள்ளது. மனித உடம்புக்கு தோல் எவ்வளவு அவசியமோ அதே போல் பூமி உருண்டைக்கு ஓசோன் படலம் அவசியம்.**

சரியாய் இருபது நிமிஷம்.

கார் ஹாஸ்பிடலுக்குள் நுழைந்து கார் பார்க்கிங்கில் இடம் பிடித்தது. விவேக்கும் விஷ்ணுவும் இறங்கினார்கள்.

ஹாஸ்பிட்டல் அமைதியாய் இருந்தது.

விவேக் வேகமாய் நடந்து போர்டிகோ படிகளில் ஏறிய விநாடி - அவனுடைய செல்போன் மீண்டும் தேசபக்தி பாடல் பாடியது.

எடுத்தான்.

டாக்டர் ஆனந்தகிருஷ்ணன்தான்.

''என்ன விவேக்... வந்துட்டீங்களா?''

''ஹாஸ்பிட்டலோட போர்டிகோ ஏறிகிட்டிருக்கேன்...''

''சரி... நேரா ஆபரேஷன் தியேட்டர்க்கு வந்துடுங்க..! தியேட்டர் எந்த மாடியில் இருக்குன்னு தெரியுமா?''

''தெரியும்...''

''வந்துடுங்க...''

விவேக் செல்போனை அணைத்து பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டு விஷ்ணுவை முறைத்தான்.

''இப்ப பேசினது யார் தெரியுமா?''

''யாரு பாஸ்?''

''டாக்டர் ஆனந்தகிருஷ்ணன்.''

''அப்படியா பாஸ்...?''

''என்ன அப்படியா... பாஸ்...! நாம ஹாஸ்பிட்டல் போய் சேர்றதுக்குள்ளே உயிரோடு இருக்க மாட்டார்ன்னு சொன்னே...?''

''பாஸ்...! நாம இன்னும் டாக்டரைப் பார்க்கலை. செல் போன்ல பேசினது அவர்தான்னு நீங்க சொல்றீங்க...! அவரோட வாய்ஸில் வேற யாராவது ஒருத்தர் ஏன் பேசியிருக்கக் கூடாது...?''

''டேய்...! நீ என்னடா சொல்றே?''

''என்னோட சந்தேகத்தைச் சொல்றேன் பாஸ்... நீங்களும் நானும் இப்போ ஆபரேஷன் தியேட்டர்க்குப் போய்கிட்டு இருக்கோம். அந்த ஆபரேஷன் தியேட்டர்ல இந்த நிமிஷம் யார் இருப்பாங்கன்னு நினைக்கறீங்க?''

''நீயே சொல்லு...''

''சொன்னா நம்ப மாட்டீங்க பாஸ்...''

''பரவாயில்லை சொல்லு...''

''டாக்டர்க்குப் பதிலா அங்கே வேற யாராவது இருப் பாங்க பாஸ். அது யார்ன்னு எனக்குத் தெரியாது.''

''என்னடா... கெஸ் ஒர்க்கா...?''

''கெஸ் ஒர்க் இல்ல பாஸ்... நடக்கப் போகிற நிஜம். எழுத்தாளர்கள் கதைகளை எழுதும்போது 'திடுக்கிட்டுப் போனார்கள்'ன்னு ஒரு வார்த்தை எழுதுவாங்க... அது மாதிரி ஆபரேஷன் தியேட்டரில் நாம ரெண்டு பேரும் நுழைஞ்சதும் திடுக்கிடப் போறோம்...''

விவேக் உள்ளுக்குள் ஒரு சின்ன உதறலோடு நடந் தான். 'விஷ்ணு சொன்னதை உதாசீனப்படுத்த முடி யாது! ஏனென்றால் அவன் சொன்னது பல கேஸ்களில் பலித்துள்ளது.'

''என்ன பாஸ்! பந்தயம் கட்டிக் கொள்ளலாமா?''

விவேக் முறைக்க விஷ்ணு போலி பவ்யம் காட்டி னான். ''ஸாரி பாஸ்...!''

முதல் மாடியில் இருந்த ஆபரேஷன் தியேட்டர்க்கு முன்பாய் வந்து நின்றார்கள்.

விவேக் கதவின் மேல் கையை வைத்து மெல்லத் தள்ளினான். அது திறந்து கொண்டது.

உள்ளே நுழைந்தார்கள். பாலிமர் கதவு பின் பக்கம் மெதுவாய் சாத்திக் கொள்ள, இரண்டாவதாய் வந்த கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு அடுத்த அறைக்குள் நுழைந்தார்கள். ஸ்டெரிலைசேஷன் செய்யப்பட்ட அறை ஏ.ஸி. குளிரில் உறைந்து போயிருந்தது.

விவேக் சுற்றும் முற்றும் பார்வையைப் போட்டான். ஆபரேஷன் தியேட்டரில் யாருமேயில்லை.

விஷ்ணு விவேக் காதருகே கிசுகிசுத்தான். ''பார்த்தீங்களா பாஸ்... டாக்டர் ஆனந்தகிருஷ்ணனைக் காணோம்...''

விவேக்கின் பார்வை மெதுவாய் அந்த ஆபரேஷன் தியேட்டரைச் சுற்றி வந்தது. விஷ்ணு விவேக்கின் இடது முழங்கையை மெல்லச் சுரண்டினான். ''பாஸ்...''

''ம்...''

''அந்த மூலையோர டேபிளுக்குக் கீழே பாருங்க...''

விவேக் பார்வையைக் கொண்டு போனான்.

அங்கே -

பச்சை நிற பெட் ஷீட்டால் போர்த்தப்பட்ட ஒரு உடல் ஒருக்களித்த நிலையில் தெரிந்தது.

# 3

**தற்போது எரிபொருளாகப் பயன்படுகிற நிலக்கரி, வாயு மற்றும் எண்ணெய் இன்னும் 10**

முதல் 15 ஆண்டுகளில் பெருமளவு குறைந்து விடும் என்று விஞ்ஞானிகள் எச்சரித்துள் ளார்கள். இந்நிலையில் இது போன்ற எரிபொருள் களுக்கு மாற்றாக ஹைட்ரஜன் வாயுவைப் பயன்படுத்தவும் திட்டமிட்டுள்ளார்கள். ஹைட்ரஜன் வாயு மற்ற எரிபொருள்களைவிட சுத்தமானதாகும். இதனால், ஹைட்ரஜன் வாயுவை எரிபொருளாகப் பயன்படுத்தினால் சுற்றுச் சூழல் மாசு படாது. ஆனால், ஹைட்ரஜன் வாயு கிடைப்பது மிகவும் அரிது. இயற்கை வாயுவிலிருந்தோ, கடல் நீரிலிருந்தோ கிடைக் கக்கூடிய ஹைட்ரஜன் வாயுவை அவைகளி லிருந்து பிரித்து எடுப்பதற்கு மிக அதிகமாக செலவாகும் என்பதும் ஒரு காரணம்.

டெல்லி.

தூர்தர்ஷன் கேந்திரா. 5-வது எண் ஸ்டூடியோவுக்குள் இருபத்தேழு வயது இளம் விஞ்ஞானி சாய்தீப் வீடியோ காமிராக்களின் வெளிச்சத்தில் நனைந்தபடி ரிப்போர்ட் டர்களின் கேள்விகளுக்கு பதில் சொல்லிக் கொண டிருந்தான். ஏர்க்கண்டிஷனர்கள் முழு அளவில் இயங்கி னாலும் சாய்தீப்பை வியர்வை குளிப்பாட்டியது. ரிப் போர்ட்டர் ஒருவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

''ஸார்...! இந்த ஜெனிடிக் என்ஜீனிரிங் எனப்படும் டி.என்.ஏ. டெக்னாலஜி சாத்தியம்தானா...? இல்லை... இது ஆராய்ச்சி அளவிலேயே நின்று போய்விடுமா...?''

சாய்தீப் சிரித்தான். ''உங்கள் சந்தேகம் தேவை யில்லாத ஒன்று. இந்தியாவுக்குள் இன்றைக்கு பத்து

கோடி செல்போன்கள் உபயோகத்தில் உள்ளன. இருபது வருஷங்களுக்கு முன்னால் இவ்வளவு செல்போன்கள் இந்தியாவில் இருக்குமென்று நினைத்துப் பார்த்து இருப்போமா?''

''அப்படியானால், இது எப்படி சாத்தியம் என்று சொல்ல முடியுமா...?''

''ரீகாம்பினன்ட் எனப்படும் டி.என்.ஏ. டெக்னாலஜியை இப்போது ஜெனடிக் என்ஜினீரிங் என்று அழைக்கிறார்கள். பெயர்கள் பலவாக இருந்தாலும் ஆராய்ச்சி ஒன்றுதான். இன்றைக்கு நாட்டில் இருக்கிற ஜனத்தொகையில் இரண்டு சதவீதம் பேர் மனநிலை பாதிக்கப்பட்டு அரசு மருத்துவமனைகளிலும் தனியார் மருத்துவமனைகளிலும் சிகிச்சை பெற்று வருகிறார்கள். இதில் இருக்கிற மிகப் பெரிய குறைபாடு என்னவென்றால் மன நோயாளிகளில் நூற்றுக்கு எண்பது பேர் குணமாகாமலேயே இறந்து போகிறார்கள். அதாவது சரியான சிகிச்சையளிக்கப்பட்டாலும் கூட அவர்கள் குணமாவது இல்லை.''

ஒரு நிருபர் குறுக்கிட்டு கேட்டார்:

''அதற்கு என்ன காரணம்...?''

''ஜீனின் குறைபாடுதான்...''

''கொஞ்சம் புரியும்படியாக - எளிமையாகச் சொல்ல முடியுமா?''

சாய்தீப் சில விநாடி நேர மௌனத்துக்குப் பிறகு மெல்ல பேச்சை ஆரம்பித்தான்.

''நமது மூளைப் பகுதியில் உள்ள பிட்யூட்டரி சுரப்பியில் லட்சக்கணக்கான செல்கள் இருக்கின்றன. இந்த

செல்களுக்கு உள்ளே இருக்கும் டி.என்.ஏ. எனப்படும் குரோமோஸோம்களில் உள்ள ஒரு பகுதியான ஜீன்தான் நமது உடல்களில் நடக்கும் பல்வேறு குணாதிசயங் களுக்கு காரணமாக உள்ளது. ஒரு மனிதனின் மனநிலை பாதிக்கப்படுவதற்கு காரணம் அந்த ஜீன் செய்யும் குளறுபடிகள்தான். மூளையின் மொத்த செயல்பாட் டையும் இந்த குளறுபடியான ஜீன் பாதிப்பதால் ஒரு மனிதனுக்கு மூளைக் கோளாறு உண்டாகிறது. அந்த மூளைக் கோளாறுக்குக் காரணமான ஜீனை அகற்றி விட்டு வேறு ஒரு செல்லில் இருக்கும் ஆரோக்கியமான ஜீனைப் பொருத்தி மன நோயாளிகளை முற்றிலும் குணப் படுத்தும் முறைக்குத்தான் ரீகாம்பினன்ட் டி.என்.ஏ. டெக் னாலஜி அல்லது ஜெனிடிக் என்ஜீனிரிங் என்று பெயர்.''

''இந்த முறையைப் பயன்படுத்தி எந்த ஒரு மன நோயாளியையாவது குணப்படுத்தியிருக்கிறீர்களா?''

''அமெரிக்காவில் மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒரு கைதிக்கு திடீரென்று மூளைக் கோளாறு ஏற்பட்டு பைத்தியம் பிடித்து விட்டது. அங்கேயிருக்கும் ஜெனி டிக் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள் சிறை நிர்வாகத்திடம் அனுமதி பெற்று அந்த மரண தண்டனைக் கைதிக்கு ஜெனிடிக் என்ஜினியரிங் முறைப்படி ட்ரீட்மெண்ட் கொடுத்தார்கள். ஒரே ஒரு மாதம்! கைதி மூளைக் கோளா றிலிருந்து விடுபட்டு நார்மல் நிலைமைக்கு வந்தான். ஆனால்...''

''என்ன... ஆனால்...?''

''அந்தக் கைதி மூளைக் கோளாறிலிருந்து விடுபட் டாலும், விடுபட்ட ஒரு வாரத்திற்குள் திடீரென்று இறந்து போனான்.''

''எ.... எப்படி?''

''அதுதான் விஞ்ஞானிகளுக்கும் புரியவில்லை... அவனுடைய உடம்பைப் போஸ்ட் மார்ட்டம் செய்து பார்த்தபோது எந்த ஒரு காரணமும் பிடிபடவில்லை. அந்த மரணம் எதனால் என்பதைக் கண்டு பிடிப்ப தற்காக மனநோய் நல விடுதியில் இருந்த ஒரு பெண் ணுக்கு ஜெனிடிக் என்ஜீனிரிங் ட்ரீட்மெண்ட்டை செய்' தார்கள். அந்தப் பெண் முழு அளவில் குணமாக வில்லை. இதுவும் விஞ்ஞானிகளுக்கு ஒரு ஆச்சர்ய மான விஷயமே... ட்ரீட்மெண்ட்டில் சில மாற்றங்களைக் கொடுக்க வேண்டும் என்பதை வலியுறுத்த டெல்லி யில் ஒரு சயன்டிஸ்ட் மீட் நடைபெறப் போகிறது. அதில் கலந்து கொள்ளத்தான் தமிழ்நாட்டிலிருந்து நான் வந்து இருக்கிறேன்...'' சாய்தீப் பேசப் பேச ரிப்போர்ட்டர் ஒருவர் இடைமறித்துக் கேட்டார்.

''ஜெனிடிக் என்ஜீனிரிங் ட்ரீட்மெண்ட் கொடுத்ததால் ஒரு கைதி இறந்து விட்டான்; இன்னொரு பெண்ணுக்கு முழுமையான அளவில் குணமாகவில்லை என்று சொன்னீர்கள். இந்த நிலைமையில் இந்த ஜீன் தெரபி ட்ரீட்மெண்ட் எந்த வகையில் வெற்றிகரமாக அமையும் என்று சொல்கிறீர்கள்?''

சாய்தீப் சிரித்தான்.

''எந்த ஒரு துறையை எடுத்துக் கொண்டாலும் சரி; ஆரம்ப காலத்தில் அதில் சில குளறுபடிகள் இருக்கும்... குழந்தை ஒன்று தட்டுத் தடுமாறி நடப்பதைப் போன்றது தான் இதுவும்...! மருத்துவத் துறையில் 'ஜீன் தெரபி' ஒரு வரப்ரசாதம். மருந்து இல்லாமல், மாத்திரை

இல்லாமல், அறுவை சிகிச்சை இல்லாமல் உடம்பில் உள்ள எல்லா நோய்களையும், மனரீதியான பிரச்னை களையும் தீர்க்க வல்ல ட்ரீட்மெண்ட் இது. எதிர்காலத் தில் இந்தியாவில் மட்டுமல்ல... உலகத்தில் உள்ள எல்லா மருத்துவமனைகளிலும் இந்த ஜீன்தெரபி மட்டுமே இருக்கும்.''

''எதிர்காலத்தில் என்று சொன்னீர்கள்... அது எப் போது?''

''எப்படியும் 2011க்குள்...''

''இந்த சயன்டிஸ்ட் மாநாட்டில்... உங்களுடைய பங்களிப்பு என்ன என்பதைச் சொல்ல முடியுமா...?''

''ஒரு மனிதனுக்கு மூளைக் கோளாறு ஏற்படுவதற்குக் காரணம் மூளையில் உள்ள 'ஹைபோதலாமஸ்' என்பது என்னுடைய கருத்து. அது சம்பந்தமான தீஸிஸை சயன்டிஸ்ட் மாநாட்டில் சப்மிட் செய்யப் போகிறேன். என்னுடைய தீஸிஸில் உள்ள கருத்துக்களை ஜெனிடிக்ஸ் விஞ்ஞானிகள் எந்த அளவுக்கு ஏற்றுக் கொள்வார்கள் என்பது எனக்குத் தெரியாது.''

சாய்தீப் சொல்லிக் கொண்டிருக்கும்போதே தூர்தர் ஷனைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் வேகவேகமாய் வந்து ரிப்போர்ட்டர்களுக்கு நடுவே புகுந்தார்.

''மன்னிக்க வேண்டும்! பேட்டியை இத்துடன் முடித் துக் கொள்ளுங்கள். சாய்தீப் அவர்கள் பகல் உணவுக்காக ராஷ்ட்ரபதி பவன் செல்ல வேண்டும். இப்போதே பத்து நிமிடம் தாமதம்...''

வீடியோ காமிராவின் வெளிச்சங்கள் காணாமல் போக - ரிப்போர்ட்டர்கள் கலைந்தார்கள். நிமிஷ நேரத்திற்குள் ஸ்டூடியோ காலியாயிற்று.

தூர்தர்ஷன் அதிகாரி பவ்யமாய் சாய்தீப்பிடம் குனிந்தார்.

''போகலாமா ஸார்...?''

''ம்... போகலாம்...'' என்று சொன்ன சாய்தீப் மெல்லிய குரலில் கேட்டான். ''பகல் உணவு சாப்பிட இன்னமும் ஒரு மணி நேரம் பாக்கி இருக்கும்போது எதற்காக ரிப்போர்ட்டர்களை பேட்டியை முடித்துக் கொள்ளும்படி சொன்னீர்கள்...?''

''காரணத்தோடுதான் அப்படிச் சொன்னேன் ஸார்.''

''காரணமா...? என்ன காரணம்?''

''பக்கத்து அறையில் டெல்லி போலீஸ் அதிகாரி ஒருவர் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். அவர் காரணத்தைச் சொல்வார் ஸார்...''

''என்னது! பக்கத்து அறையில் போலீஸ் அதிகாரி ஒருவர் எனக்காகக் காத்துக் கொண்டு இருக்கிறாரா...?''

''ஆமாம்...''

''எதற்கு...?''

''என்ன காரணம்னு தெரியாது ஸார். அவர்தான் பேட்டியை உடனே முடிக்கும்படி சொன்னார். அதற்கான காரணம் என்ன என்பதை அவரிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். ப்ளீஸ் கம் வித் மீ ஸார்.''

சாய்தீப் குழப்பமான முகத்தோடு அவரைப் பின் தொடர்ந்தான். மனசுக்குள் எண்ணங்கள் ஓடின.

'போலீஸ் அதிகாரி எதற்காக வந்து காத்துக் கொண்டு இருக்கிறார்...?'

காற்றோட்டமான அந்த வராந்தாவில் நடந்து எதிர் பட்ட ஒரு அறைக்குள் நுழைந்தார்கள். அங்கே நாற் காலிக்கு சாய்ந்தபடி உட்கார்ந்திருந்த அந்த நடுத்தர வயது போலீஸ் அதிகாரி சாய்தீப்பைப் பார்த்ததும் எழுந்து நின்றார். ''ஸாரி மிஸ்டர் சாய்தீப்! ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ். அயாம் க்யூ ப்ராஞ்ச் ஆபீஸர் கோவிந்த் வர்மா. உங்களிடம் ஒரு செய்தியைத் தெரிவிக்கும்படி டெல்லி போலீஸ் கமிஷனரின் கட்டளை...''

''செய்தியா...? என்ன செய்தி...?''

''முதலில் உட்காருங்கள் மிஸ்டர் சாய்தீப்.'' கோவிந்த் வர்மா தனக்கு எதிரில் இருந்த சோபாவைக் காட்டிவிட்டு தானும் உட்கார்ந்தார். தன் கையில் வைத்து இருந்த ஒரு கவரை நீட்டியபடி சொன்னார்:

''மிஸ்டர் சாய்தீப்...! சரியாய் இரண்டு மணி நேரத் துக்கு முன்பு க்யூ ப்ராஞ்சின் தலைமையகத்துக்கு இந்தக் கடிதம் வந்தது. இதைப் படித்துப் பாருங்கள்.''

சாய்தீப் இறுகிப் போன முகத்தோடு அந்தக் கவரை வாங்கிப் பிரித்து, உள்ளே மடித்து வைத்து இருந்த கம்ப்யூட்டர் தாளை எடுத்தான். கடிதம் ஆங்கிலத்தில் இருந்தாலும் படிக்கும்போது மனசுக்குள் தமிழாக்கம் ஓடியது.

*காவல்துறையின் நுண்ணறிவுப் பிரிவு தலைவர்க்கு,*

*W.H.I. இயக்கத்தின் கறுப்பு வணக்கம்.*

*W.H.I. என்கிற மூன்று எழுத்துக்களின் விரிவாக்கம் என்னவாக இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள நீங்கள் ஆர்வப்படுவது*

*எங்களுக்குப் புரிகிறது. W.H.I. என்பதின் விரி வாக்கம் இதுதான். WE HATE INDIA. இந்தியா எந்தத் துறையில் வளர்ச்சியடைந்தாலும் சரி, அது எங்களுக்குப் பிடிக்காது. இப்போது டெல்லியில் கூடியுள்ள மருத்துவத்துறை விஞ்ஞானிகள் கூட்டம் செமினார் ஒன்றை நடத்தி ஜெனிடிக் என்ஜீனிரிங் பற்றிப் பேசுவதும் அதன் மூலம் இந்தியாவின் பெயர் உலக நாடுகள் மத்தியில் பெருமையோடு பேசப்படுவதும் எங்களுக்குப் பிடிக்கவில்லை. எங்களுக்கு ஒரு விஷயம் பிடிக்க வில்லையென்றால் அது உலகத்தின் எந்த ஒரு மூலையிலும் நடைபெறக்கூடாது. அதே போல் இந்த 'சயன்டிஸ்ட் மீட்'டும் நடக்கக் கூடாது என்று விரும்புகிறோம். எங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி வைப்பது உங்கள் கடமை. அந்தக் கடமையிலிருந்து நீங்கள் தவறும் பட்சத்தில்...*

*(நாங்கள் செய்யப் போவது எதையும் முன் கூட்டியே சொல்வது இல்லை.)*

*இப்படிக்கு*

*W.H.I.*

சாய்தீப் கடிதத்தைப் படித்து முடித்துவிட்டு வியர்த்த முகமாய் கோவிந்த் வர்மாவை ஏறிட்டான். ''வி... ஹேட் இண்டியா...! இப்படியும் ஒரு இயக்கமா...?''

கோவிந்த் வர்மா பெருமூச்சு விட்டார்.

''எஸ்...! சமீபத்தில்தான் இந்த இயக்கம் முளைத் துள்ளது. இதன் தாயகம் ஆப்கானிஸ்தான். எப்படியோ

பாகிஸ்தான் வழியாக இந்தியாவுக்குள் ஊடுருவி டெல்லிக்குள் நுழைந்து விட்டார்கள்.''

''ஓ.கே...! டெல்லி போலீஸ் இந்த மிரட்டல் கடிதத் திற்கு என்ன மரியாதை கொடுக்கப் போகிறது...?''

''தீவிரவாதிகளின் மிரட்டல்களுக்கு டெல்லி போலீஸ் என்றுமே பணிந்து போனது இல்லை. சென்ற வருடம் அணி சேரா நாடுகளின் கருத்தரங்கம் டெல்லியில் நடந்தபோது சிவப்பு விடியல் - 'ரெட்டான்' - எனப்படும் ஒரு தீவிரவாத இயக்கம், 'கருத்தரங்கம் நடைபெறக் கூடாது. மீறி நடைபெற்றால் கருத்தரங்கில் ரத்த ஆறு ஓடும்' என்று எச்சரித்து டெல்லி போலீஸ் கமிஷனர்க்கு கடிதம் அனுப்பியிருந்தார்கள். அப்போது டெல்லி போலீஸ் கமிஷனராய் இருந்த முன்ஷி அந்தக் கடிதத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டு விட்டு அணி சேரா நாடுகளின் கருத்தரங்கை வெற்றி கரமாய் நடத்திக் காட்டினார். இப்போது டெல்லி கமிஷனராய் இருக்கிற அனில் கௌர் துணிச்சலானவர். அவர் தீவிரவாதிகளின் மிரட்டல்களையெல்லாம் பான் பீடாவாய் வாயில் போட்டு மென்று துப்பி விடுவார். அவர் இந்த 'சயன்டிஸ்ட் மீட்'டை நடத்திக் காட்டுவார்... இருந்தாலும் விஞ்ஞானிகள் அனைவரும் எச்சரிக்கை உணர்வோடு இருக்க வேண்டும் என்பதற்காக போலீஸ் அதிகாரிகள் ஒவ்வொரு விஞ்ஞானிக்கும் ஒரு பாதுகாப்பு வளையத்தை ஏற்படுத்தியுள்ளார்கள். நீங்கள் அந்த வளையத்துக்குள்தான் இருக்க வேண்டும். செமினார் முடிகிற வரைக்கும் பொது நிகழ்ச்சிகளில் நீங்கள் கலந்து கொள்ளக் கூடாது. அது தவிர...''

கோவிந்த் வர்மா சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவருடைய செல்போன் அழைத்தது. எடுத்துப் பேசியவரின் முகம் தனது ரத்த ஓட்டத்தை இழந்து நிறம் மாறி வெளுத்தது.



பெயிண்டுகளில் கலக்கப்படும் காரீய குரோமேட்டுக்கு பதிலாக டைட்டேனியம் - டை ஆக்ஸைடை பயன்படுத்துமாறு உலக சுகாதார நிறுவனம் அனைத்து நாடுகளையும் கேட்டுக் கொண்டுள்ளது. பச்சை, மஞ்சள், ஆரஞ்சு வர்ண பெயிண்ட்டுகளில் காரீய குரோமேட்டின் தன்மை அதிகம் இருக்கும். எனவே, குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்கள், பள்ளிகளின் வகுப்பறைகளில் இத்தகைய நிற பெயிண்டுகளைத் தவிர்க்குமாறு சுகாதார நிபுணர்கள் கூறுகிறார்கள். ரத்தத்தில் காரீயம் கலப்பதால் 1 கோடியே 80 லட்சம் குழந்தைகள் மன வளர்ச்சிக் குறைவிற்கு ஆளாகியுள்ளனர்.

பச்சை நிற பெட்ஷீட்டால் போர்த்தப்பட்ட ஒரு உடல் ஒருக்களித்த நிலையில் தெரிந்ததும் விஷ்ணு விவேக்கை ஏறிட்டான்.

''பார்த்தீங்களா பாஸ்... நான் சொன்ன மாதிரியே ஆபரேஷன் தியேட்டரில் யாருமில்லை. அந்த போர்வைக்குள்ளே இருக்கிறது டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் தான்னு நினைக்கிறேன். வந்தவன் காரியத்தை

முடிச்சுட்டு உங்களுக்கும் போன் பண்ணிட்டு சத்தமில்லாமே ஜூட் விட்டிருக்கான்...''

விவேக் விஷ்ணுவின் பேச்சை கவனிக்காமல் காதுகளுக்கு உன்னிப்பைக் கொடுத்து பக்கவாட்டு சுவரைப் பார்த்துக் கொண்டிருக்க, விஷ்ணு தொட்டான்.

''என்ன பாஸ்...?''

''ஏதோ சத்தம் கேட்கலை...?''

''ஆமா பாஸ்... பக்கத்து ரூம்ல உன்னிகிருஷ்ணன் உட்கார்ந்து பாடிகிட்டு இருக்கார்...! என்ன பாஸ் நீங்க... ஆபரேஷன் தியேட்டர்க்குள்ளே ஒரு மயான அமைதியிருக்கு. நீங்க என்னடான்னா சத்தம் கேக்குதுன்னு சொல்றீங்க...?''

''நல்லா உத்துக் கேளுடா மரமண்டை!''

விஷ்ணு காதுகளுக்கு உன்னிப்பைக் கொடுத்து விட்டு, ''ஆமா பாஸ்! யாரோ பேசற குரல் கேட்குது. ரூமுக்குள்ளே போய் எட்டிப் பார்க்கலாமா?''

இருவரும் மெல்ல நடந்து போய் அந்த அறையை நெருங்கி ஒருக்களித்து சாத்தியிருந்த கதவைத் திறந்து தள்ளினார்கள்.

உள்ளே -

டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் செல்போனைக் காதில் பொருத்திக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார். விவேக்கையும் விஷ்ணுவையும் பார்த்ததும் பேச்சை வேகமாய் முடித்துக் கொண்டு அவர்களை நெருங்கினார்.

''வாங்க விவேக்... உங்களைத்தான் ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்துட்டிருக்கேன்...! அதுக்குள்ளே

வீட்லயிருந்து போன்...! பை... த... பை... இவர் உங்க அஸிஸ்டெண்டா...?''

''ஆமா டாக்டர்... பேரு விஷ்ணு...''

''ஹலோ டாக்டர்...'' விஷ்ணு டாக்டரிடம் கையைக் கொடுத்து குலுக்கிக் கொண்டிருக்க, விவேக் கேட்டான்.

''டாக்டர்...! 'மேட்டர் ஈஸ் வெரிவெரி இம்பார்ட் டன்ட். உடனே புறப்பட்டு வாங்க'ன்னு சொன்னீங்க...''

''எஸ்...'' என்று சொன்னவர் அறையின் மூலையில் இருந்த பச்சை நிற பெட்ஷீட் போர்த்தப்பட்டிருந்த அந்த உடலை நோக்கிப் போனார். போய் பக்கத்தில் உட் கார்ந்து பெட்ஷீட்டை விலக்கினார்.

நல்ல உயரத்தில் ஒரு உயிரில்லாத தேகம். வயது முப்பத்தி ஐந்திலிருந்து நாற்பதுக்குள். பின்னந்தலையில் ரத்தக்காயம், முகத்தில் ரத்த சிராய்ப்புகள். அணிந்து இருந்த பேண்ட்டிலும் சர்ட்டிலும் உறைந்துபோன ரத்தப் புள்ளிகள்.

விவேக் கேட்டான்.

''டாக்டர்! யார் இவன்...?''

''எனக்குத் தெரியாது. நேத்து ராத்திரி நான் மது ராந்தகம் வரைக்கும் போய்ட்டு கார்ல வீடு திரும்பிட் டிருந்தபோது தாம்பரத்துக்கு முன்னாடி ரோட்டோரமா இந்த இளைஞன் விழுந்து கிடந்தான். ஏஸ்... ஏ... டாக்டர்... அப்படியே பார்த்துட்டுப் போக மனசு வரலை. காரை நிறுத்திட்டுப் போய்ப் பார்த்தேன். தலையில் அடிபட்டு மயக்க நிலையில் இருந்தான். உயிர் இருக் கான்னு பார்த்தேன். இருந்தது. உடனடியாய் ஹாஸ்

பிட்டல் கொண்டு போய்ச் சேர்த்து ட்ரீட்மெண்ட் கொடுத்தால் உயிர் பிழைச்சிக்குவான்னு நினைச்சேன். ஹாஸ்பிட்டலுக்கு கொண்டு வந்து ட்ரீட்மெண்ட் கொடுத்தேன்... ஓரளவுக்கு தேறி வர்ற நேரத்துல சடன் ஹார்ட் அட்டாக். இறந்துட்டான்...''

''இவனுக்கு கான்ஷியஸ் வந்தபோது ஏதாவது பேசி னானா?''

''கான்ஷியஸ் வந்தது... பட், அவனால பேச முடி யலை...''

''அவனுடைய தலையில எப்படிக் காயம்...?''

''ரோட்ல போன ஏதாவது ஒரு வாகனம் அவன் மீது மோதியிருக்கலாம்...''

''அதாவது - இது ஒரு ஆக்ஸிடெண்ட் கேஸ்...''

''எஸ்...''

''இதுக்கு நாங்க வரவேண்டியது இல்லை டாக்டர்... இந்த ஏரியா பீட் போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொல்லியிருந்தா போதும். அவங்க இந்தக் கேஸை இன்வெஸ்டிகேட் பண்ணி ஆள் யாருன்னு கண்டு பிடிச்சு அவரோட ஃபேமிலிக்கு தகவல் கொடுத்துடுவாங்க...''

டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் லேசாய்ப் புன்னகைத் தார். ''இது எனக்குத் தெரியாதா மிஸ்டர் விவேக்...? நான் இங்கே உங்களை வரவழைச்சதுக்குக் காரணம் வேற...! இறந்துபோன அந்த இளைஞனை ஒரு தடவை நல்லாப் பாருங்க...''

விவேக்கும் விஷ்ணுவும் பார்த்தார்கள்.

அரை நிமிஷ நேரத்துக்குப் பிறகு டாக்டர் கேட்டார்.

''உங்க பார்வைக்கு வித்தியாசமாய் ஏதாவது தெரியுதா?''

''வித்தியாசம்?''

''எஸ்...''

''தெரியலையே டாக்டர்...''

ஆனந்த கிருஷ்ணன் அந்த இளைஞனின் உடம்பில் இருந்த பேண்ட்டையும் சர்ட்டையும் உருவினார். முழு உடம்பும் விறைத்துப் போய் தெரிந்தது.

''இப்ப பாருங்க விவேக்...!''

விவேக் முழுசாய் ஒரு நிமிஷ நேரம் எடுத்துக் கொண்டு அந்த இளைஞனின் உடலைப் பார்த்த பின்பு டாக்டரைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினான்.

''ஸாரி டாக்டர்... ஐ குட் நாட் ஃபைண்ட் எனிதிங்... டிஃபரண்ட்லி...''

''விஷ்ணு! உங்களுக்கு...?''

''என்னோட குருவே சைபர் மார்க்... என்னோட மார்க் எவ்வளவு இருக்கும்ன்னு நீங்களே கெஸ் பண்ணிக்குங்க டாக்டர்.''

''ஓ.கே...! இவனோட உடம்புல வித்தியாசமாய் என்ன இருக்குன்னு நானே சொல்லிடறேன் விவேக்! இவனோட இடது கையைப் பாருங்க...?''

விவேக் பார்க்க, டாக்டர் கேட்டார்: ''வலது கைக்கும் இடது கைக்கும் ஏதாவது வித்தியாசம் தெரியுதா?''

''இடது கை... லேசாய் நிறம் மாறியிருக்கு...''

''அவ்வளவுதானா...?''

''வலது கை தோலில் சுருக்கங்கள் அதிகமாய் இருக்கு. இடது கை தோலில் அவ்வளவாய் சுருக்கங்கள் இல்லை...''

''சரி...! இப்போ வலது கையைத் தொடுங்க...''

விவேக் தொட்டான்.

''ஹௌ டூ யூ ஃபீல்...?''

''கை பனிக்கட்டி மாதிரி குளிர்ச்சியாய் இருக்கு.''

''ஓ.கே...! இப்ப இடது கையைத் தொடுங்க.''

தொட்டான்.

''எப்படியிருக்கு...?''

''வெதுவெதுப்பாய் இருக்கு...''

''ஒரு டெட்பாடியோட வலது கை குளிர்ச்சியாகவும், இடது கை வெதுவெதுப்பாகவும் எப்படி இருக்க முடியும் விவேக்...?''

''ரியலி இது ஒரு வியப்பான விஷயம்தான்... பட், என்னுடைய சந்தேகத்தை சொல்லட்டுமா டாக்டர்?''

''சொல்லுங்க...''

''இந்த இளைஞனின் இடது கை ஒரு செயற்கைக் கையாய் இருக்கலாம். அதாவது, செயற்கை சதைக் கூழி னால் உருவாக்கப்பட்ட கை...''

''யூ ஆர் கரெக்ட் விவேக்...! இந்த இளைஞனின் இடது கை ஒரு செயற்கை கைதான். கெட்டியான ப்ளாஸ்டிக் எலும்புகளின் மேல் செயற்கை சதைக் கூழைப் பூசி செயற்கை மனிதத் தோலால் உருவாக்

கப்பட்ட கை. ஒரு டாக்டரின் கண்களுக்கு மட்டுமே இந்த உண்மை தெரியும்.''

விஷ்ணு குறுக்கிட்டான். ''டாக்டர்...! சாலை விபத்தில் இறந்து போன ஒரு இளைஞனுக்கு இடது கை செயற்கை கை என்பதில் என்ன முக்கியத்துவம் இருக்கு...? இதையும் ஏரியா போலீஸ் ஸ்டேஷனிலேயே சொல்லியிருக்கலாமே...?''

டாக்டர் புன்னகைத்தார். ''அது செயற்கை கையாய் இருந்தால் மட்டும் சொல்லியிருக்கலாம். பட்... அந்த செயற்கை கைக்குள் ஒரு விபரீதம் ஒளிஞ்சிருக்கே...?''

''விபரீதமா...?''

''எஸ்...! இதோ பாருங்க...'' சொன்ன டாக்டர் அந்த இளைஞனின் இடது கைக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்து அக்குள் பகுதியில் தன்னுடைய இரண்டு விரல்களை நுழைத்து மெல்லத் திருகி இழுக்க இடது கை தனியே வந்தது. அதைக் கீழே வைத்து மூட்டுப் பகுதியில் இருந்த தோலை மெல்ல உரித்து எடுக்க, உள்ளே -

பிளாஸ்டிக் எலும்புகளுக்கு மத்தியில் ஒரு எலக்ட்ரானிக் உலகம் தெரிந்தது.

சதுரம் சதுரமாய் 'மைக்ரோ சிப்'கள், சிலிக்கான் சங்கதிகள், நடுநடுவே ரோம இழைகளைக் காட்டிலும் மெலிதான காப்பர் கம்பிகள், பென்ஸில் பருமனுக்கு கார்பன் ராடுகள், அதன் முனைகளில் மினுமினுப்பாய் யுரேனிய உருண்டைகள் பாதி தீப்பெட்டி சைஸில் பாட்டரி ஒன்று மின்சாரம் தரும் பணியைக் கவனித்தது.

விவேக்கின் முதுகுத் தண்டு வடத்தில் குளிர்பாய - விஷ்ணு ''ய்ம்மாடி'' என்றான். ''பாஸ்...! அண்ணா

யூனிவர்சிடியின் அப்ரூவல் இல்லாமே ஒரு என்ஜினி யரிங் காலேஜையே இடது கைக்குள்ளே வெச்சு நடத் திட்டு வந்திருக்கான்.''



கருவேல மரத்திலிருந்து மின்சாரம் தயா ரிக்கும் முறையை ஜெய்ப்பூரில் உள்ள மரபு சாரா எரிசக்தி மையம் நாடு முழுவதும் பிரபலமாக்கி வருகிறது. கருவேல மரங்கள் வறட்சியைத் தாங்கி வளரும் தன்மையைப் பெற்றுள்ளன. 12 கிலோ எடையுள்ள கருவேல மரத்திலிருந்து 7500 வாட் மின்சக்தி உற்பத்தி செய்யப்படுகிறது. கருவேல மரத்திலிருந்து மின்சாரத்தைத் தயாரிக்க யூனிட் ஒன்றுக்கு 2 ரூபாய் 50 காசு செலவாகிறது. மற்ற முறைகளில் மின்சாரம் தயாரிக்கும் போது யூனிட்டுக்கு 4 ரூபாய் 50 காசு செலவாகிறது.

டெல்லி, நேரம் மதியம் 1.15 மணி.

தூர்தர்ஷன் கேந்த்ராவின் ஸ்டேஷன் டைரக்டர் ஜோஷி பகல் உணவுக்காக கிளம்பிக் கொண்டிருந்த நேரத்தில், அவருடைய மேஜை மேலிருந்த டெலிபோன் குரல் கொடுத்தது. போய் எரிச்சலாய் எடுத்தார்.

''எஸ்...''

மறுமுனையிலிருந்து டெல்லி போலீஸ் கமிஷனர் அனில் கௌர் பேசினார். ''மிஸ்டர் ஜோஷி... குட் ஆஃப்டர்நூன்...!''

''குட் ஆஃப்டர்நூன் கௌர்...''

''பகல் உணவு ஆயிற்றா...?''

''கிளம்பிக் கொண்டிருந்தேன்...! உங்கள் போன் வந்தது.''

''ஓ... ஸாரி...!''

''நோ... ப்ராப்ளம்...! என்ன விஷயம் சொல்லுங்கள்.''

''தமிழ்நாட்டின் இளம் விஞ்ஞானி சாய்தீப்பின் பேட்டி ஒளிபரப்பு எத்தனை மணிக்கு முடிந்தது...?''

''பனிரெண்டு மணிக்கு...!''

''பனிரெண்டு மணிக்கே முடிந்து விட்டதா?''

''ஆமாம்... ஏன்...?''

''ஒளிபரப்பு ஒரு மணி வரைக்கும் போகும் என்று சொன்னார்களே?''

''ஒரு மணி வரைக்கும் போக வேண்டிய ஒளிபரப்பு தான்! க்யூ ப்ராஞ்சிலிருந்து வந்த போலீஸ் அதிகாரி கோவிந்த் வர்மா தீவிரவாதிகளிடமிருந்து வந்த கடிதத்தைக் காட்டியதும் அரண்டு போய் விட்டோம். பேட்டி எடுத்துக் கொண்டிருந்த ரிப்போர்ட்டர்களை உடனே அப்புறப்படுத்தி பாதுகாப்பு வளையத்துக்குள் சாய்தீப்பைக் கொண்டு வந்து விட்டோம். சரியாய் பனிரெண்டரை மணிக்கெல்லாம் பாதுகாப்புப் போலீஸாரோடு கிளம்பிப் போய் விட்டார்.''

மறுமுனையில் போலீஸ் கமிஷனர் அனில் கௌர் பதற்றப்பட்டார்.

''மிஸ்டர் ஜோஷி...! வாட் நான்சென்ஸ் யூ ஆர் டாக் கிங்...? தீவிரவாதிகளிடமிருந்து கடிதம் வந்ததா...?''

''ஆமாம்...! அப்படி என்றுதானே க்யூ ப்ராஞ்ச் அதி காரி கோவிந்த் வர்மா சொன்னார்?''

''யார் அந்த கோவிந்தவர்மா...? இந்தப் பெயரில் க்யூ ப்ராஞ்ச் துறையில் எந்த போலீஸ் அதிகாரியும் இல் லையே...?''

''வந்தாரே..! வந்து... தீவிரவாதிகளிடமிருந்து அவர்க்கு கிடைத்த ஒரு மிரட்டல் கடிதத்தை என்னிடம் காட்டி, 'சாய்தீப்புக்கு போலீஸ் பாதுகாப்பு கொடுப்பதற்காக வந்து இருக்கிறோம். பேட்டி ஒளிபரப்பாவதை உடனே நிறுத்துங்கள்' என்று சொன்னார். நான் ஒரு டி.வி. நிலைய அதிகாரியை அவரோடு ஸ்டூடியோவுக்கு அனுப்பி வைத்தேன். ஒளிபரப்பு உடனே நிறுத்தப் பட்டது. பனிரெண்டு மணியிலிருந்து பனிரெண்டரை மணி வரைக்கும் ஒரு அறையில் உட்கார்ந்து பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பற்றி பேசினார்கள். அப்போது கோவிந்த் வர்மாவுக்கு செல்போன் அழைப்பு ஒன்று வந்தது. உடனே அவர் புறப்பட்டுப் போக வேண்டும் என்று சொல்லி சாய்தீப்பையும் அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டார்...''

''மை குட்னஸ்...! ஏமாந்து விட்டீர்களே ஜோஷி! தீவிரவாதிகளிடமிருந்து போலீஸ் துறைக்கு எந்த ஒரு மிரட்டல் கடிதமும் வரவில்லை. கோவிந்த் வர்மா என்ற பெயரில் டெல்லி போலீஸில் எந்த ஒரு அதிகாரியும் இல்லை.

சாய்தீப்பைக் கடத்துவதற்காக யாரோ திட்டம் போட்டு இந்த வேலையைச் செய்து உள்ளார்கள். நீங்கள் எனக்கு போன் செய்து விபரம் சொல்லியிருக்கலாமே?''

''கோவிந்த்வர்மாவின் மீது எனக்கு எந்த ஒரு சந்தேகமும் வராதபோது நான் எப்படி உங்களுக்கு போன் செய்து பேச முடியும் மிஸ்டர் கௌர்? அந்த கோவிந்த்வர்மா தனி ஒரு ஆளாய் வரவில்லை. டெல்லி போலீஸ் யூனிஃபார்மில் சில பேரை பாதுகாப்பு அதிகாரிகளாக கூட்டி வந்து இருந்தான். வந்த வாகனங்களும் டெல்லி போலீஸ் துறையின் வாகனங்களைப் போலவே இருந்தன.''

''அ... அ... அவர்கள் மொத்தம் எத்தனை பேர்...?''

''பத்திலிருந்து பதினைந்து பேர்...''

''எல்லோருமே யூனிஃபார்ம்களில் இருந்தார்களா?''

''ஆமாம்...?''

''வெப்பன்ஸ்...?''

''இருந்தது...''

''அவர்கள் கிளம்பும்போது நேரம் சரியாக எவ்வளவு?''

''பனிரெண்டரை மணி...''

''அவர்கள் புறப்பட்டுப் போய் இப்போது முக்கால் மணி நேரமாகிறது. வாகனங்கள் எந்த திசையில் கிளம்பிப் போயிற்று என்பதைக் கவனித்தீர்களா?''

''இல்லை...''

மறுமுனையில் போலீஸ் கமிஷனர் அனில்கௌர் நொறுங்கிப் போய் ரிஸீவரை வைத்தார்.

# 6

ஈமெயில் அனுப்ப வேண்டுமென்றால் தனியாக பெர்ஸனல் கம்ப்யூட்டரும் இண்ட்டர் நெட் இணைப்பு வசதியும் வேண்டும். இது முன்பு. ஆனால், இப்போது. வேண்டியது இல்லை. இந்த இரண்டுக்கும் பதிலாக இப்போது ஐஸ்டேஷன் என்ற சிறிய கம்ப்யூட்டர் வந்து விட்டது. இந்த ஐஸ்டேஷன் ஒரு கிலோவுக்கும் குறைவான எடை கொண்டது. P.C. எனப்படும் பர்சனல் கம்ப்யூட்டர்களைக் காட்டிலும் விலை குறைவு. P.C.யில் அனுப்புவதைக் காட்டிலும் ஐஸ்டேஷன் மூலமாக வேகமாய் ஈமெயில் அனுப்பலாம்.

விவேக்கும் விஷ்ணுவும் ஃபாரன்ஸிக் பிரிவின் எலக்ட்ரானிக் அண்ட் ஹைடெக் க்ரைம் செல்லில் இருந்தார்கள். ஃபாரன்ஸிக் ஆபீஸர் கந்தவேல் மேஜை யின் மேல் கிடத்தப்பட்டு இருந்த அந்த இடது கையைப் பார்த்துவிட்டு விவேக்கை ஏறிட்டார்.

''மிஸ்டர் விவேக்...! இந்த கம்ப்யூட்டர் யுகத்தில் தீவிரவாதிகளின் புது அஸ்திரம் இது. இதுக்குப் பேரு 'ஹேண்டி டிஸாஸ்டர்' கிட்டத்தட்ட இதுவும் ஒரு மனித வெடிகுண்டு மாதிரிதான். வெடிகுண்டை இடுப்பிலோ அல்லது உடம்பின் எந்த பாகத்திலோ மறைச்சு வெச் சுட்டு போனாலும் டைனமைட் டிடெக்டர் கண்டு பிடிச்சுடறதால சில தீவிரவாத இயக்கங்கள் இந்த

ஹேண்டி டிஸாஸ்டர்களைப் பயன்படுத்த ஆரம்பிச் சிருக்கு... இப்படியொரு செயற்கைக் கையைப் பொருத் திக் கொள்வதற்காகவே தீவிரவாதிகள் தங்களோட இடது கைகளை துண்டிச்சுக் கொள்றதும் உண்டு. இறந்துபோன அந்த தீவிரவாத இளைஞன் ஏதோ ஒரு திட்டத்தோடு சென்னைக்குள் ஊடுருவியிருக்கான். இப்படி ஊடுரு யிருப்பது இவன் மட்டும்தானா... இல்லை... ஒரு கும்பலே ஊடுருவியிருக்கிறதா என்பதை உடனடியாகக் கண்டு பிடிக்க வேண்டிய பொறுப்பு உங்களுடையது.''

விவேக் சில விநாடிகள் மௌனமாய் இருந்து விட்டு ஃபாரன்ஸிக் அதிகாரியை ஏறிட்டான்.

''மிஸ்டர் கந்தவேல்...! நீங்க சொன்ன அந்த 'ஹேண்டி டிஸாஸ்டர்'களைப் பற்றி... இப்பத்தான் கேள்விப்பட றேன். பை... தி பை... இந்த டிஸாஸ்டர்களைப் பயன் படுத்தும் தீவிரவாத இயக்கங்கள் எந்த நாட்டில் அதிகம் இருக்குன்னு சொல்ல முடியுமா...?''

''ஆப்கானிஸ்தான்! போதைப் பொருள்களை உற் பத்தி செய்கிற அந்த நாட்டில் தீவிரவாத இயக்கங் களுக்கு பஞ்சமேயில்லை. எல்லா நாட்டு தீவிரவாதி களுக்கும் அதுதான் சொர்க்க பூமி.''

விஷ்ணு இடைமறித்தான்.

''ஸார்...! ஒரு சந்தேகம்...''

''என்ன...?''

''இந்த ஹேண்டி டிஸாஸ்டர்களை டைனமைட் டிடெக்டார்ஸ் கண்டு பிடித்துக் கொடுக்காதா...?''

''கொடுக்காது...! காரணம் ஒவ்வொரு ஹேண்டி டிஸாஸ்டர்களுக்குள்ளேயும் ஒரு ஜாமர் இருப்பதுதான்.

இந்த ஜாமர் டைனமைட் டிடெக்டர்கள் வெளியிடும் கதிர் வீச்சை முடமாக்கி வெளித் தள்ளி விடும்...''

கந்தவேல் சொல்லிக் கொண்டு இருக்கும்போதே அவருடைய மேஜையின் மேல் இருந்த இண்ட்டர்காம் ஒலி எழுப்பியது. பட்டனைத் தட்டினார். மறுமுனையில் உதவியாளர் ஒருவர் பேசினார்.

''ஸார்! டாக்டர் ஆனந்தகிருஷ்ணன், மிஸ்டர் விவேக்கைப் பார்த்துப் பேசறதுக்காக இங்கே வந்து காத்துட்டிருக்கார்.''

''அவரை உடனடியாய் என்னோட அறைக்கு அனுப்பி வையுங்கள்...'' கந்தவேல் இண்ட்டர்காமின் பட்டனை அணைத்துவிட்டு விவேக்கிடம் விஷயத்தைச் சொல்ல விவேக் தன் நெற்றிப் பரப்பில் வியப்பு வரிகளைக் காட்டினான். ''டாக்டர்கிட்டே பேசிட்டுத்தானே இங்கே வர்றோம். மறுபடியும் என்னைப் பார்த்து பேச எதுக்காக வர்றார்ன்னு தெரியலையே?''

''நான் சொல்லட்டுமா பாஸ்...?''

விவேக் விஷ்ணுவை ஒரு அமிலப் பார்வை பார்த்தான். ''நீ எதையும் சொல்லாதே...! இந்த கேஸ்ல இதுவரைக்கும் சொன்னது எல்லாமே பாகிஸ்தான் புளுகு. உன்னோட கெஸ் ஒர்க்கையெல்லாம் மூட்டை கட்டி வெச்சுட்டு என்ன நடக்குதுன்னு கவனி... போதும்...!''

''பாஸ்...! இன்னிக்கு என்னோட ராசிப்படி கோச்சாரத் துல குருவும் ராகுவும் சேர்ந்திருக்கிறதாலே...''

''டேய்...''

''ஸாரி... பாஸ்...''

டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் பாதி சாத்திக் கிடந்த அறைக் கதவைத் திறந்து கொண்டு சற்றே பதட்டமாய் உள்ளே வந்தார். முகம் வியர்த்திருக்க தலை முடி கலைந்து தெரிந்தது.

விவேக் கேட்டான்.

''வாட் ஹேப்பன்ட் டாக்டர்?''

ஆனந்தகிருஷ்ணன் ஒன்றும் பேசாமல் நாற்காலிக்கு சாய்ந்து கொண்டே தன் கையில் வைத்திருந்த ஒரு காகிதத்தைக் கொடுத்தார்.

விவேக் வாங்கிப் பார்த்தான். பால் பாயிண்ட் பேனா வால் எழுதப்பட்டிருந்த கொட்டை கொட்டையான எழுத்துக்கள். கோணல் வாக்கியங்களாய் மாறியிருந்தது.

*டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் அவர்களுக்கு,*

*இனிமேல் உங்கள் பெயரில் இருக்கும் 'ஆனந்தம்' உங்கள் வாழ்க்கையில் இருக்காது. இன்று முதல் அழக் கற்றுக் கொள்ளுங்கள். நாங்கள் யாரையும் காரணம் இன்றி தண்டிப்பது இல்லை. உங்களை நாங்கள் ஏன் தண்டிக்க வேண்டும்? குற்றம் செய்த உங்களுக்கு அதற் கான காரணமும் தெரியும். எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த 'ரூஸோ' உங்கள் காரால் மோதப்பட்டு தலையில் பலத்த காயமடைந்து நினைவிழந்து போனான். போலீஸுக்கு விஷயத்தைத் தெரியப் படுத்தாமல் ரூஸோவை உங்கள் காரிலேயே எடுத்துப் போட்டுக் கொண்டு ஹாஸ்பிடலுக்கு வந்து சிகிச்சை அளித்தீர்கள். ஆனால் சிகிச்சை பலனின்றி அவன் இறந்து போனான். அவன் யார்*

*என்று தெரிந்து கொள்வதற்காக பரிசோதித்தபோது அவனுடைய இடது கை செயற்கை என்பதையும் அவன் ஒரு தீவிரவாதியாய் இருக்கலாம் என்பதையும் கண்டு பிடித்து விட்டீர்கள். க்ரைம் ப்ராஞ்ச் விவேக்கிற்கு போன் செய்து வரவழைத்து எல்லாவற்றையும் சொல்லி விட்டீர்கள். எங் களுக்கு போலீஸ் பயம் என்பது அறவே கிடை யாது. இண்ட்டர்போல் போலீஸுக்கே தண்ணீர் காட்டுபவர்கள் நாங்கள். சென்னை போலீஸ் எங்களுக்கு சோன்பப்டி! மறுபடியும் விஷயத்துக்கு வருகிறோம். எங்களுடைய இயக்கத்தில் துடிப் போடு செயல்பட்ட ரூஸோவை நீங்கள் கொன்று விட்டீர்கள். அதற்கான தண்டனை என்ன என்பது இன்னும் ஒரு மணி நேரத்தில் தெரியும்.*

கடிதம் மொட்டையாய் முடிந்திருந்தது. விவேக் அந்தக் கடிதத்தை மறுபடியும் ஒரு தடவை படித்துப் பார்த்துவிட்டு ஆனந்த கிருஷ்ணனிடம் கேட்டார்:

''இந்தக் கடிதம் உங்க கைக்கு எப்படி வந்தது டாக்டர்?''

''என்னுடைய ஹாஸ்டலில் புகார் பெட்டி ஒண்ணு இருக்கு. நோயாளிகளும், நோயாளிகளைப் பார்க்க வருகிற விசிட்டர்களும் தங்களோட குறைகளையும் யோசனைகளையும் எழுதிப் போடறதுக்காக அந்தப் புகார் பெட்டியை வெச்சிருக்கோம். அந்த புகார் பெட் டியைத் திறந்து பார்த்தப்பதான் இந்தக் கடிதம் இருந்தது. லெட்டரைப் படிச்சதுமே உங்களுக்கு போன் பண்ணி னேன். சரியா டவர் கிடைக்காததனால லைன் கிடைக் கலை. நீங்க ஃபாரன்ஸிக் டிபார்ட்மெண்ட்டுக்கு புறப்

பட்டுப் போறதாய் சொன்னது ஞாபகம் வந்தது. நேர்லயே பார்த்து சொல்லிடலாம்ன்னு வந்தேன்...''

''என்ன... டாக்டர்...! இந்த லெட்டர் உங்க கைக்கு கிடைச்சதுமே போலீஸுக்கு இன்ஃபார்ம் பண்ணியிருக்க வேண்டாமா? அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே உங்களுக்கு தண்டனை கிடைக்கும்ன்னு மிரட்டி இருக்காங்க. அதைப் பொருட்படுத்தாம தனியாய் வந்து இருக்கீங்க...''

''எனக்கு உடனே உங்களைப் பார்க்கணும்... உங்க கிட்டே விஷயத்தைச் சொல்லணும்ன்னு என் மனசுக்குப் பட்டது. எதைப் பற்றியும் யோசிக்காம புறப்பட்டு வந்துட்டேன்.''

''ஓ.கே... டாக்டர்...! இந்த லெட்டர் நம்ம கைக்குக் கிடைச்சதுல ஒரு உண்மை வெளியே வந்திருக்கு! இறந்தவன் பெயர் 'ரூஸோ' என்பதும் அவன் ஒரு தீவிரவாத இயக்கத்தில் துடிப்புமிக்க நபராய் இருந்திருக்கான் என்பதும் தான் அந்த உண்மை.''

டாக்டர் குறுக்கிட்டார்.

''அவங்க சொன்ன ஒரு பொய்யும் அதுல இருக்கு மிஸ்டர் விவேக்...!''

''என்ன பொய்...?''

''ரூஸோ என்னோட காரால் மோதப்பட்டு காயமடைந்து இறந்து போனதாய் சொல்லியிருக்காங்க. அது பொய்... அவங்க தப்பாப் புரிஞ்சுகிட்டு என்னைப் பழி வாங்க நினைக்கறாங்க...''

விவேக் புன்னகைத்தான்.

"அவங்க எதைத்தான் சரியாப் புரிஞ்சுகிட்டு செயல் பட்டிருக்காங்க...? ரூஸோ இறந்து போனதுகூட அவங் களுக்குப் பெரிய விஷயம் கிடையாது. அவனோட இடது கை செயற்கை கைன்னு நீங்க கண்டு பிடிச்சதுதான் அவங்களுக்கு எரிச்சலைக் கொடுத்து இருக்கு... அந்தக் கோபம்தான் அவங்களுக்கு! உங்களுக்கு எந்த ஆபத்தும் நேராதபடி போலீஸ் பாதுகாப்புக்கு ஏற்பாடு பண்ணிட லாம்."

விவேக் சொல்லிக் கொண்டிருக்கும்போதே டாக்டர் ஆனந்தக் கிருஷ்ணனின் செல்போன் தன் ரிங்டோனை வெளியிட்டது. டாக்டர் செல்போனைக் கையில் எடுக்க - விவேக் சொன்னான்:

"ஒரு நிமிஷம் டாக்டர்...! டிஸ்ப்ளேயில் கூப்பிடறது யார்ன்னு பாருங்க..."

"பார்த்தார்.

"பழக்கமான நம்பரா டாக்டர்...?"

"இல்லை... புது நம்பர்..."

"சரி... பேசுங்க...?"

ஆனந்தகிருஷ்ணன் செல்போனை வலது காதுக்கு ஒற்றினார்.

"எஸ்...?"

மறுமுனையில் ஒரு ஆண் குரல் கேட்டது. "டாக்டர் ஆனந்தகிருஷ்ணன்?"

"ஹோல்டிங்..."

நல்ல ஆங்கிலத்தில் குரல் தொடர்ந்தது.

''டாக்டர்...! நான் டெல்லி போலீஸ் கமிஷனர் அனில் கெளர் பேசுகிறேன். நீங்கள் டாக்டர் ஆனந்தகிருஷ்ணன்தானே?''

''ஆமாம்...''

''டாக்டர்...! மனதை தைரியமாய் வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு ஒரு துயரமான செய்தி...''

''எ...ன்...ன...?''

''விஞ்ஞானிகள் மாநாட்டில் கலந்துகொள்ள டெல்லி வந்த உங்கள் மகன் சாய்தீப்பை ஒரு தீவிரவாத கும்பல் கடத்திக் கொண்டு போய் விட்டது.''



வைட்டமின் 'டி' பொதுவாக சூரிய ஒளியில் இருந்து கிடைக்கிறது. வைட்டமின் 'டி' உடலில் குறைந்தால் எலும்புகள் தொடர்பான நோய்கள் வரும் என்பது அனைவர்க்கும் தெரிந்த விஷயமே! இப்போது வைட்டமின் 'டி' பற்றிய புதிய உண்மை ஒன்று வெளியே வந்துள்ளது. அதாவது வைட்டமின் 'டி' உடம்புக்குள் போனதும் புதிய ஹார்மோன் ஒன்றைச் சுரக்கிறது. இந்த ஹார்மோன் புற்று நோயைத் தடுக்கிறது. வயோதிகத் தன்மையை எதிர்க்கின்றது. நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்துகிறது. இந்த ஹார்மோன்களுக்கு விஞ்ஞானிகள் 1.25 டி என்று பெயர் சூட்டியுள்ளார்கள்.

டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் அதிர்ந்து போனவராய் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு எழுந்தார்.

"எ... எ... என்ன... சொன்னீர்கள்?"

"உங்கள் மகன் சாய்தீப்பை ஒரு தீவிரவாத கும்பல் கடத்திக் கொண்டு போய் விட்டது."

"எ... எப்படி...?"

"டெல்லி டி.வி. ஸ்டேஷனில் அவர் பத்திரிகை நிருபர்களுக்கு பேட்டி கொடுத்து விட்டு ஓய்வறைக்கு வந்தபோது போலீஸ் யூனிஃபார்மில் வாகனங்களோடு வந்த தீவிரவாத கும்பல் அவரைக் கடத்திக் கொண்டு போய் விட்டது..."

"மை குட்னஸ்...! உண்மையான போலீஸுக்கும் போலியான போலீஸுக்கும் எப்படி வித்தியாசம் தெரியாமல் போயிற்று?"

"எப்படியோ காவல்துறை ஏமாந்து விட்டது. சாய் தீப்பை மீட்க டெல்லி போலீஸ் முழுவதும் களத்தில் குதித்து உள்ளது. அடுத்த இருபத்தி நான்கு மணி நேரத்திற்குள் உங்கள் மகனை எப்படியும் கண்டு பிடித்து விடுவோம். பயப்படாதீர்கள்."

டாக்டர் வெடித்தார். "மிஸ்டர் கமிஷனர்! கடத்தப் பட்டது... உங்கள் மகனாக இருந்து நான் இதே ஆறுதல் வார்த்தைகளை உங்களுக்கு சொன்னால் அதை ஏற்றுக் கொள்வீர்களா?"

"மிஸ்டர் ஆனந்தகிருஷ்ணன்! உங்களுடைய கோபத்தையும் வருத்தத்தையும் என்னால் உணர முடிகிறது... தயவு செய்து பதட்டமின்றி இருங்கள். தீவிரவாதிகளை

மடக்கிப் பிடிக்க போலீஸ் துறை களம் இறங்கி துடிப் போடு செயல்பட்டுக் கொண்டு இருக்கிறது... நீங்கள் சந்தோஷப்படும்படியான தகவலை இன்னும் சில மணி நேரங்களில் தெரிவிப்பேன்.''

டாக்டர் மேற்கொண்டு பேச முடியாமல் தன் நெஞ் சைப் பிடித்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்துவிட, பக்கத்தில் இருந்த விவேக் அவரிடம் இருந்த செல் போனை வாங்கி, தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

''ஸார்... போலீஸ் யூனிஃபார்மில் வந்தவர்கள் தீவிரவாத கும்பல்தான் என்கிற முடிவுக்கு எப்படி வந்தீர் கள்?''

''கோவிந்த் வர்மா என்கிற பெயரில் எந்த போலீஸ் அதிகாரியும் எந்தத் துறையிலும் இல்லை... அதுவுமில் லாமல் டெல்லியில் 'சயன்டிஸ்ட்ஸ் மீட்' நடக்கப் போகும் தேதி முடிவானதிலிருந்து டெல்லி உளவுத் துறைப் பிரிவு, ஆப்கானிஸ்தானத்தில் இருக்கும் ஒரு தீவிரவாத அமைப்பு - விஞ்ஞானிகளின் உயிர்களுக்கு குறி வைத்து இருப்பதாக எங்களுக்கு தகவல் கொடுத்தது. நாங்களும் அந்தத் தகவலை ரகசியமாக வைத்து இருந்து நகரில் தீவிரவாதிகளின் நடமாட்டம் உள்ளதா என்பதைக் கண்காணித்து வந்தோம்... நாங்கள் எவ்வளவோ எச்சரிக்கை உணர்வோடு இருந்தும் ஏமாற் றப்பட்டு விட்டோம்.''

''அந்த தீவிரவாத அமைப்பின் பெயர் என்ன என் பதை சொல்ல முடியுமா?''

''W.H.I.... அதாவது 'வீ ஹேட் இந்தியா' என்பது அந்த தீவிரவாத இயக்கத்தின் பெயர். இதில் என்ன ஒரு

ஆச்சர்யம் என்றால், சாய்தீப்பை கடத்திப் போக போலீஸ் யூனிஃபார்மில் வந்த தீவிரவாதிகள் அதே W.H.I. பெயரை உபயோகப்படுத்தி அந்த இயக்கம் எழுதியது போல் ஒரு போலியான கடிதத்தைக் காட்டி சாய்தீப்பை நம்ப வைத்து, பாதுகாப்பு தருகிறோம் என்ற பெயரில் கடத்திக் கொண்டு போயிருக்கிறார்கள்...''

''ஸார்! உங்களிடம் ஒரு வெளிப்படையான கேள்வி.''

''கேளுங்கள்.''

''சாய்தீப் கடத்தல்காரர்களிடமிருந்து விரைவில் மீட்கப்பட்டு விடுவாரென்று டாக்டர் ஆனந்தகிருஷ்ண னிடம் சொன்னது எந்த அளவுக்கு உண்மை...? டாக் டரை சமாதானப்படுத்துவதற்காக சொல்லப்பட்ட வார்த்தைகளா அல்லது உண்மையிலேயே சாய்தீப்பை மீட்பதற்கான துணிச்சலான நடவடிக்கைகள் ஏதாவது எடுக்கப்பட்டுள்ளதா...?''

''ஐந்து கமெண்டோ படைகள் டெல்லி நகர் முழு வதும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. எந்த நேரத்திலும் அந்த W.H.I. தீவிரவாத இயக்கத்தைப் பற்றிய தக வல்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உள்ளது.''

''ஸார்...! உங்களிடம் ஒரு உண்மையைச் சொல்ல வேண்டும்...''

''என்ன உண்மை...?''

''விஞ்ஞானிகள் மாநாட்டில் கலந்து கொள்ளச் சென்ற டாக்டரின் மகன் சாய்தீப் கடத்தப்பட்டதற்குக் காரணம் டெல்லியிலிருந்து உருவாகலை ஸார்...''

''பிறகு...?''

''சென்னையிலிருந்து...''

''என்ன சொல்கிறீர்கள் மிஸ்டர் விவேக்...?''

''ரூஸோ என்ற பெயருள்ள ஒரு தீவிரவாதி நேற்று ஏதோ ஒரு வாகனத்தில் அடிபட்டு சாலையோரமாய் விழுந்து உயிர்க்குப் போராடிக் கொண்டிருந்திருக்கிறான். டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் அந்த வழியாக காரில் வந்தபோது பார்த்து தன்னுடைய ஹாஸ்பிட்டலுக்கு கொண்டு போய் ட்ரீட்மெண்ட் கொடுத்துள்ளார். ஆனால், அந்த ட்ரீட்மெண்ட் பலனளிக்காமல் ரூஸோ இறந்து விட்டான். ரூஸோ காரில் அடிபடுவதற்கும், அவனுடைய மரணத்துக்கும் காரணம் டாக்டர்தான் என்பதை தப்பாகப் புரிந்து கொண்ட அந்த தீவிரவாத-இயக்கம் டாக்டரைப் பழி வாங்கும் விதமாக அவருடைய மகன் சாய்தீப்பைக் கடத்திக் கொண்டு போய் விட்டார்கள். ரூஸோவின் மரணம் காரணமாக அவர்கள் கடும் கோபத்திலும் ஆத்திரத்திலும் இருப்பார்கள். சாய்தீப்பின் உயிர்க்கு ஆபத்து ஏற்படுவதற்கு முன்பாக சாய்தீப்பை அவர்களிடமிருந்து மீட்க வேண்டும்...''

''மிஸ்டர் விவேக்...!''

''சொல்லுங்கள் ஸார்.''

''தீவிரவாதிகளின் பிடியில் சிக்கியிருக்கும் சாய்தீப் உயிரோடு மீட்கப்பட வேண்டுமானால் அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.''

''என்ன வழி ஸார்?''

''நீங்கள் உடனே டெல்லி புறப்பட்டு வரவேண்டும்.''

# 8

**சூரியனைச் சுற்றி வரும் ஒன்பது கிரகங்களுக்கு அப்பால் பத்தாவது கிரகமாக ஒரு கோள் சுற்றிக் கொண்டிருப்பது இப்போது தெரிய வந்துள்ளது. இந்தப் பத்தாவது கிரகத்துக்கு 'வருணா' என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது. இது ஒரு சிறிய கிரகம். 900 கிலோ மீட்டர் குறுக்களவு கொண்டது. ஹானாலூலுவைச் சேர்ந்த வானியல் விஞ்ஞானி 'டேவிட் ஜூவிட்' இந்தக் கோளினைக் கண்டு பிடித்துள்ளார்.**

விவேக்கும் விஷ்ணுவும் டெல்லி போய் சேர்ந்த போது சாய்தீப் தீவிரவாதிகளால் கடத்தப்பட்ட விவகாரம், பறவைக் காய்ச்சல் மாதிரி பரவியிருந்தது. பத்திரிகைகளும், டி.வி. மீடியாக்களும் சூடாய் இருந்தன. உள்துறை அமைச்சர் சம்பவத்துக்கு பொறுப்பேற்று ராஜினாமா செய்ய வேண்டும் என்று எதிர்க்கட்சிகளும், ராஜினாமா செய்யத் தேவையில்லையென்று ஆளுங் கட்சியினரும் பரஸ்பரம் குரல் கொடுத்துக் கொண்டிருந் தனர். பத்திரிகைகள் விதவிதமான தலைப்புக்களில் மக்களை மிரட்டின.

**★ இளம் விஞ்ஞானி சாய்தீப் உயிரோடு மீள்வாரா?**

**★ தீவிரவாதிகள் விதித்த நிபந்தனைகள் என்ன? அரசு மௌனம்.**

**★ நிபந்தனைகளை நிறைவேற்றாவிட்டால் சாய்தீப் பின் தலை துண்டிக்கப்படும். தீவிரவாதிகள் எச்சரிக்கை!**

''பாஸ்...'' கார் போய்க் கொண்டிருக்க, விஷ்ணு கூப் பிட்டான்.

''ம்...''

''டெல்லியில் சாய்தீப் கடத்தப்பட்ட விவகாரம் பத்திகிட்டு எரியுது... டெல்லி போலீஸ் குழம்பிப் போய் கிடக்கு. சாய்தீப்பை கடத்தல்காரர்களிடமிருந்து மீட்க உங்களால்தான் முடியும்ன்னு ஏகப்பட்ட நம்பிக்கை யோடு டெல்லி போலீஸ் கமிஷனர் அனில்கௌர் உங் களைக் கூப்பிட்டிருக்கார். நானும் உங்ககூட இருக்கிறது எப்படியோ தெரிஞ்சு போய்த்தான் அவர் இந்த அழைப்பை விட்டிருக்கார்ன்னு நினைக்கிறேன். இந்த விவகாரத்துல உங்களுக்கு என்ன சந்தேகம் இருந்தாலும் பரவாயில்லை பாஸ். என்கிட்டே தயங்காம கேளுங்க... ஐ... வில் க்ளியர் த ஆல் டவுட்ஸ்.''

''இப்ப எனக்கு இருக்கிறது ஒரே ஒரு சந்தேகம்தான்!''

''கேளுங்க பாஸ்...''

''சென்னைக்கு அடுத்த ட்ரெயின் எப்போ?''

''எதுக்கு பாஸ்...?''

''உன்னை ஏத்திவிடத்தான்...!''

''பா... பாஸ்...''

''இதோ பார்...! இது டெல்லி...! உன்னோட அலம் பலையெல்லாம் மூட்டை கட்டி வெச்சுட்டு நான் என்ன சொல்றேனோ அதை மட்டும்தான் செய்யணும்... உனக்கு டெல்லியில் லோடி பாக் தெரியுமா?''

''லோடி பாக்கா... லேடி பாக்கா பாஸ்?''

"டேய்!" விவேக் முறைக்க - விஷ்ணு தலையாட்டினான்.

"எனக்குத் தெரியாது பாஸ்..."

"ஜான்ஸி ஃபோர்ட் போயிருக்கியா?"

"எத்தனையோ தடவை...!"

"அதுக்கு கொஞ்சம் தள்ளித்தான் 'லோடி பாக்' இருக்கு... அங்கே நீ போய்ட்டு வரணும்..."

"எதுக்கு பாஸ்...?"

"லோடி பாக் எல்லா வகையான தீவிரவாதிகளும் வந்து போகிற ஒரு ஏரியா. இதுக்கு இன்னொரு பேர் ரெட் சர்க்கிள். வாரத்துக்கு ஒரு மர்டராவது நடக்கக்கூடிய இடம்... நீ அந்த ஏரியாவுக்குப் போய் ஸ்டே பண்ணி டெரரிஸ்ட் யாராவது இருக்காங்களான்னு ஸ்மெல் பண்ணணும்..."

"என்ன பாஸ் இது. ஏதோ ஊட்டிக்குப் போய் ரெண்டு நாள் 'ஸ்டே' பண்ணிட்டு வாடான்னு சொல்ற மாதிரி என்னை லோடி பாக்குக்கு அனுப்பி வைக்க றீங்க...? வாரத்துக்கு ஒரு மர்டர் நடக்கிற ஏரியான்னு சொல்றீங்க... இந்த வாரம். அது நானாய் இருந்துட்டா...?"

"சரி... உனக்கு பயமாய் இருந்தா நான் போய்ட்டு வர்றேன்..."

"வேண்டாம் பாஸ்... நானே போறேன்... ஏதாவது பிரச்னைன்னு வந்துட்டா உங்களால எதிரிகளோடு ஃபைட் பண்ண முடியாது. விஜய் மாதிரி, தனுஷ் மாதிரி பறந்து பறந்து ஃபைட் பண்ண என்னாலதான் முடியும்...

நான் என்னிக்கு அந்த லேடி பாக்குக்கு ஸாரி லோடி பாக்குக்கு போகணும் பாஸ்...?''

''இப்ப... நாம கமிஷனர் ஆபீஸ் போறோம். அவர் கிட்டே பேசிட்டு திரும்பும்போது நான் ஹோட்டலுக்குப் போயிடுவேன். நீ லோடி பாக்குக்குப் போயிடணும். அங்கே 'நீல் கமல் லாட்ஜ்'ன்னு ஒரு லாட்ஜ் இருக்கு... அந்த லாட்ஜ்ல ரூம் எடுத்துக்க... யார்க்கும் எந்த சந்தேகமும் வராதபடி வாட்ச் பண்ணு... யாரையாவது சந்தேகப் பட்டா ஃபாலோ பண்ணு...''

''எஸ் பாஸ்...'' விஷ்ணு தலையாட்டிக் கொண்டு இருக்கும்போதே கார் டெல்லி போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்குள் நுழைந்து பார்க்கிங் ஏரியாவில் போய் நின்றது.

கமிஷனரின் அலுவலகம் அமைதியாய் இருப்பது போல் தெரிந்தாலும், உள்ளுக்குள் நடமாடிய போலீஸ் அதிகாரிகளிடம் பதட்டம் தென்பட்டது. எல்லா அறைகளிலும், வயர்லெஸ் இரைந்து கொண்டிருந்தது.

போர்டிகோவில் காத்திருந்த டெப்டி கமிஷனர் ஒருவர் விவேக்கையும் விஷ்ணுவையும் எதிர்கொண்டார்.

''வெல்கம் மிஸ்டர் விவேக்...! கமிஷனர் உங்களை எதிர்பார்த்துதான் காத்துக் கொண்டு இருக்கிறார். ப்ளீஸ்! இந்தப் பக்கம் வாருங்கள். அந்தப் பக்கம் பத்திரிகை நிருபர்களும், பிரஸ் ரிப்போர்ட்டர்களும் இருக்கிறார்கள். உங்களைப் பார்த்தால் பேட்டி என்ற பெயரில் மொய்த்துக் கொண்டு தேவையில்லாத கேள்விகளைக் கேட்டு தொல்லை கொடுப்பார்கள். ப்ளீஸ் கம் திஸ் சைட்.''

டெப்டி கமிஷனர் சொல்லிக் கொண்டே முன்னால் நடக்க, விவேக்கும் விஷ்ணுவும் தொடர்ந்தார்கள். விவேக் அவரிடம் கேட்டான்:

''ஸார்! சாய்தீப் கடத்தப்பட்ட விஷயத்தில் மேற் கொண்டு ஏதாவது தகவல் கிடைத்ததா?''

''எஸ்... மிஸ்டர் விவேக்...''

''என்ன தகவல்?''

''அதைச் சொல்வதற்காகத்தான் கமிஷனர் காத்துக் கொண்டிருக்கிறார்!''

நீளமான அந்த வராந்தாவில் மேலும் இரண்டு நிமிஷ நடை. கமிஷனரின் அறை வந்தது.

ஏ.ஸி.யின் ஜில்லிப்பில் உறைந்து போயிருந்த அறைக்குள் மூன்று பேரும் நுழைய - கமிஷனர் அனில் கௌள் எக்ஸிக்யூடிவ் நாற்காலியில் இறுகிப்போன முகத்தோடு உட்கார்ந்திருந்தார்.

''குட்மார்னிங் ஸார்.''

''வாங்க மிஸ்டர் விவேக்... ப்ளீஸ் ஸீட்டட்...''

கமிஷனர் தனக்கு எதிரேயிருந்த நாற்காலிகளைக் காட்ட - மூன்று பேரும் உட்கார்ந்தார்கள். சில விநாடிகள் மௌனம் சாதித்த கமிஷனர் பிறகு மெல்லிய குரலில் பேச்சை ஆரம்பித்தார்.

''சாய்தீப் கடத்தப்பட்ட விவகாரத்தில் நிலைமை நேற்றைவிட இன்று மோசம், சாய்தீப்பை உயிரோடு மீட்க முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இல்லை மிஸ்டர் விவேக்...''

“ஏன் ஸார்... என்ன நடந்தது...?”

கமிஷனர் பெருமூச்சு விட்டார். “ஒரு மணி நேரத்துக்கு முன்பாய் என் பெயருக்கு சி.டி. ஒன்று வந்தது. அந்த சி.டி.யைப் போட்டுப் பார்த்ததிலிருந்து என்னுடைய மனம் அமைதியை இழந்து விட்டது.”

“அது என்ன சி.டி. ஸார்?”

கமிஷனர், டெப்டி கமிஷனரைப் பார்த்தார். “மிஸ்டர் முகர்ஜி! கதவை நன்றாக சாத்தி தாழ் போட்டு விட்டு வாருங்கள்.”

டெப்டி கமிஷனர் எழுந்து போய் கதவைத் தாழ் போட்டுவிட்டு வர, கமிஷனர் தன் மேஜை மேலிருந்த கம்ப்யூட்டரை ஆன் செய்து பிளாஸ்டிக் உறையில் இருந்த சி.டி. ஒன்றை எடுத்துப் போட்டார்.

சில விநாடிகளுக்குப் பின் கம்ப்யூட்டர் திரை உயிர் பெற்று ஒரு காட்டின் அடர்ந்த பகுதியைக் காட்டியது. ஒற்றையடிப் பாதை ஒன்றை மோப்பம் பிடித்த காமிரா அதை ஒரு நிமிட நேரத்துக்கு காட்டிக் கொண்டே போய் மரங்களுக்கு நடுவில் சிதிலமாகிக் கிடந்த பங்களா ஒன்றுக்கு முன்பாய் திடும்மென்று போய் நின்றது.

பிறகு காமிரா பங்களாவுக்குள் நுழைந்து ஒவ்வொரு அறையிலும் புகுந்து, கடைசியாய் ஒரு இருட்டான அறை வாசலில் ஸ்டில் போட்ட மாதிரி நின்றது. ஒரு ஆண் குரல் பின்னணியில் ஒலித்தது.

*“சி.டி.யைப் பார்த்துக் கொண்டிருக்கும் கமிஷனர் அவர்களுக்கும் மற்றும் உள்ள போலீஸ் அதிகாரிகளுக்கும் வணக்கம். இளம் விஞ்ஞானி சாய்தீப் கடத்தப்பட்டு சரியாய்*

*நாற்பத்தெட்டு மணி நேரமாகிறது. இப்போது நீங்கள் பார்த்துக் கொண்டு இருக்கும் இந்த அறைக்குள்தான் சாய்தீப் அடைபட்டுக் கிடக் கிறார். அவர் இந்த அறையிலிருந்து உயிரோடு வெளியே வருவதும் வராததும் உங்கள் கைகளில் தான் உள்ளது. நாங்கள் எங்கள் கோரிக்கைகள் என்ன என்பதை மத்திய உள்துறை அமைச்ச ருக்குத் தெரியப்படுத்தி விட்டோம். ஆனால், உள்துறை அமைச்சர் அதைப்பற்றி வெளியே சொல்லவேயில்லை. அவருடைய இந்தச் செய்கை எங்களை - எங்களுடைய இயக்கத்தை அலட்சியப் படுத்துவது போல் உள்ளது. இந்த அலட்சியம் நீடித்தால் அது சாய்தீப்பின் உயிர்க்கும் ஆபத்தாய் முடியும். இன்னும் உங்களுக்கு 24 மணி நேரம் கெடு. அதற்குள் எங்களுடைய கோரிக்கைகள் நிறைவேற்றப்பட வேண்டும். இல்லாவிட்டால் சாய்தீப்பின் தலையைத் துண்டிப்பதைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை. இப்போது இந்த அறைக் கதவு திறக்கப் போகிறது. உள்ளே சாய்தீப் எந்த நிலைமையில் இருக்கிறார் என்பதை நீங்களே பாருங்கள்.''*

பேச்சுக்குரல் நின்றது. காமிரா அசைந்தது. ஒரு கை பக்கவாட்டிலிருந்து வெளிப்பட்டு கதவைத் தள்ளியது. உள்ளே வீடியோ காமிராவின் வெளிச்சம் பாய - சாய்தீப் ஒரு நாற்காலியில் உட்கார வைக்கப்பட்டு, கயிற்றால் கைகளையும் கால்களையும் கட்டியிருந்தார்கள். வாயில் ப்ளாஸ்டர். அவனுக்கு முன்பாய் ஒரு ஸ்டூல் போடப்

பட்டு அதன்மேல் இரண்டடி நீளத்திற்கு ஒரு பளபளப்பான பட்டாக்கத்தி.

பின்னணியில் குரல் கேட்டது.

*''கடந்த 48 மணி நேரமாய் சாய்தீப்பிற்கு ஒன்றும் சாப்பிடக் கொடுக்கவில்லை. சாப் பிட்டால் பலம் வரும். தெம்பு வரும். தப்பிக்க என்ன வழி என்று மூளை யோசிக்கும். எனவே, சாய்தீப்பிற்கு மூன்று வேளையும் ஒரு டம்ளர் தண்ணீர் மட்டுமே கொடுக்கப்படுகிறது. இப்போது நாங்கள் கொடுத்துள்ள 24 மணி நேரக் கெடு முடிந்ததும் ஸ்டூலின் மேல் வைக்கப் பட்டுள்ள அந்த பட்டாக்கத்திதான் சாய்தீப்பின் தலையை அறுத்து எடுக்கப் போகிறது. எங்களுக்கு இரக்கம் என்பது கிடையாது. இதயம் இருக்கிற இடத்தில் எங்களுக்கு ஒரு இரும்புத் துண்டுதான் இருக்கிறது. நாங்கள் யார்க்காகவும் எதற்காகவும் கருணை காட்ட மாட்டோம். சென்ற வருடம் குவைத்தில் ஒரு இந்தியப் பொறியாளரைக் கடத்தி எங்களுடைய கோரிக் கைகள் ஏற்றுக் கொள்ளப்படாததால் அந்த இந்தியரின் தலையைத் துண்டித்து ஹைவேஸ் சாலையில் போட்டோம். அதே நிலைமை சாய்தீப்புக்கும் வராமல் இருக்க வேண்டு மென்றால் எங்களுடைய கோரிக்கைகளை மத்திய உள்துறை அமைச்சர் நிறைவேற்ற வேண்டும். சாய்தீப், ஜெனிடிக்ஸ் துறையில் ஒரு சிறந்த இளம் விஞ்ஞானி, எதிர்கால மருத்துவ உலகில் நிறைய சாதிக்கப் போகிறவர்.*

*ஜீன் தெரபி மூலம் மருந்து மாத்திரை, அறுவை சிகிச்சையில்லாமல் நோய்களை குணப்படுத் தக்கூடியவர். அவருடைய உயிர் மதிப்பு வாய்ந்தது. அந்த உயிரைக் காப்பாற்றிக் கொள் வதும், கொள்ளாததும், உங்கள் கைகளில்தான் இருக்கிறது. சரியாக 24 மணி நேரம் கழித்து அதாவது நாளைக் காலை 11 மணிக்கு எங் களுக்கு சாதகமான பதில் வரவில்லையென் றால் 11.01 மணிக்கு சாய்தீப்பின் உடம்பில் தலை இருக்காது."*

குரல் சட்டென்று நின்று போக, கம்ப்யூட்டர் திரை யில் தெரிந்து கொண்டிருந்த சாய்தீப் ஸ்லோமோஷனில் மறைந்து போனான்.

## 9

**மி**ன்னலில் இருந்து மின்சாரம் தயாரிக்க இப்போது ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இந்த ஆய்வுகள் மட்டும் வெற்றி பெற்று விட்டால் உலகின் எந்த ஒரு நாட்டிலும் மின்சாரத் தட்டுப்பாடே இருக்காது. மக்களுக்கு இலவசமாகவே கூட மின்சாரத்தைக் கொடுக்க முடியும் என்று சொல்கிறது. அந்த ஆய்வு அறிக்கை. இப்போது இந்தியாவில் 30% மின் சாரம் மத்திய அரசு நிறுவனங்கள் மூலமாகவும் 57% மாநில அரசு நிறுவனங்கள் மூலமாகவும் 13% மின்சாரம் தனியார் மூலமாகவும் உற்பத்தி

செய்யப்படுகிறது. ஒரு யூனிட் மின்சாரம் உற்பத்தி செய்ய சராசரி செலவு ரூ.2.80 ஆகிறது. ஆனால் மின்சாரம் இந்தியாவில் 2.07க்கு விற்கப்படுகிறது. உலகில் நஷ்டத்தில் மின் சாரத்தை விநியோகிக்கும் நாடு இந்தியாதான்.

அறையில் சில விநாடிகளுக்கு மௌனம் நிலவியது.

கமிஷனர் அனில்கௌர் அந்த இறுக்கமான சூழ் நிலையைத் தன் தொண்டைச் செருமலால் கலைத்து விட்டு விவேக்கை ஏறிட்டார்.

''காஸட்டைப் பார்த்தீங்களா மிஸ்டர் விவேக்?''

''ம்...''

''இந்த காஸட்டைப் பார்த்த பிறகு சாய்தீப்பை அந்தத் தீவிரவாதிகளிடமிருந்து மீட்க முடியும் என்று நினைக் கிறீர்களா?''

பதில் பேசாமல் விவேக் புன்னகைத்தான்.

''என்ன சிரிக்கிறீர்கள் விவேக்?''

''முடியாது என்று சொல்லவா நான் சென்னையி லிருந்து வந்திருக்கிறேன்.''

''ஓ.கே...! சாய்தீப்பை மீட்க என்ன வழி...? ஏதாவது திட்டம் உள்ளதா...?''

''நான் டெல்லி மண்ணை மிதித்து ஒரு மணி நேரம்தான் ஆகிறது. அதற்குள் என்னால் திட்டத்தைத் தயாரித்துவிட முடியுமா... என்ன? நான் சாய்தீப்பை மீட்க வியூகம் அமைப்பதற்கு முன்னால் எனக்கு சில விப ரங்கள் வேண்டும்... கொடுத்து உதவ முடியுமா...?''

''கேளுங்கள்.''

''தீவிரவாதிகள் உள்துறை அமைச்சரிடம் ஏதோ கோரிக்கைகளை வைத்து இருப்பதாகச் சொல்லியுள் ளார்கள். அந்தக் கோரிக்கைகள் என்ன?''

அனில் கௌர் தலையாட்டினார். ''அந்த கோரிக்கை கள் என்ன என்பது எனக்குத் தெரியாது.''

''உள்துறை அமைச்சரிடம் நீங்கள் கேட்கவில்லையா?''

''கேட்டேன்.''

''அவருடைய பதில் என்ன?''

''அந்த கோரிக்கைகளைப் பற்றி வெளியே சொல்ல முடியாது. சொன்னால் நாட்டில் பயங்கரமான மதக் கலவரம் ஏற்பட்டு விடும். அதைப்பற்றி வாயைத் திறக் காமல் இருப்பதே நல்லது என்று அமைச்சர் என்னிடம் சொன்னார்.''

விவேக் வியப்பில் புருவங்களை உயர்த்தினான்.

''அப்படி என்ன கோரிக்கைகள்?''

''தெரியவில்லை...! சாய்தீப் கடத்தப்பட்ட விவ காரத்தில் எந்தப் பக்கத்திலும் போலீஸ்துறைக்கு சாதகமான தகவல்கள் இல்லை. அந்தத் தீவிரவாதிகள் இப்போது டெல்லியில்தான் இருக்கிறார்களா என்பதும் சந்தேகமாகவே உள்ளது.''

''ஸார்! இந்த விஷயத்தில் நாம் ஒரு உண்மையை கவனிக்க வேண்டும்.''

''என்ன உண்மை?''

''தீவிரவாதிகள் இளம் விஞ்ஞானி சாய்தீப்பைக் கடத்திக் கொண்டு போனதுக்குக் காரணம் சாய்தீப்பின் அப்பா டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் மேல் ஏற்பட்ட

கோபம்தான். அவர்கள் இயக்கத்தைச் சேர்ந்த ரூஸோ என்பவனின் மேல் டாக்டர் காரை மோதி அவனைக் கொன்று விட்டதாக அவர்கள் தப்பாக நினைத்து அதற்குப் பழி வாங்கும் விதமாக டாக்டரின் மகனைக் கடத்திக் கொண்டு போயிருக்கிறார்கள். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்கள் என்பது போல் சாய்தீப்பை பணயமாக வைத்து சில கோரிக்கைகளையும், அரசாங் கத்தின் முன் வைத்து நிறைவேற்றிக் கொள்ள எண்ணு கிறார்கள்.''

கமிஷனர் பெருமூச்சொன்றை வெளியேற்றி விட்டு கேட்டார். ''ஓ.கே... மிஸ்டர் விவேக்...! எல்லாத் திசை களிலும் கும்மிருட்டாய் தெரிகிற இந்தக் கேஸில் உங் களுடைய நடவடிக்கைகள் எந்த வகையில் அமைந்து சாய்தீப்பை மீட்டுக் கொண்டு வரப் போகின்றன...?''

விவேக் தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த விஷ் ணுவை சுட்டிக் காட்டியபடி சொன்னான்.

''ஸார்... ஹி ஈஸ் மிஸ்டர் விஷ்ணு...! இவர் லோடி பாக்கில் உள்ள ஒரு லாட்ஜில் தங்கி தீவிரவாதிகளின் நடமாட்டம் அதிகமாக உள்ள அந்தப் பகுதியை கண் காணிக்கப் போகிறார். அதன் மூலம் ஒரு துரும்பளவு க்ளூ கிடைத்தாலும் போதும்; அது நமக்கு உதவியாக இருக்கும்...''

கமிஷனர் ஒரு கவலையான பார்வையோடு விவேக்கை ஏறிட்டார். ''டெல்லியில் உள்ள மிக மோசமான, சட்டம் ஒழுங்கு சிறிதும் இல்லாத ஏரியா அந்த லோடி பாக். அங்கே முன்பு சர்வதேச தீவிரவாதிகள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் உளவுத்துறை ரிப்போர்ட்

படி இப்போது தீவிரவாதிகளின் நடமாட்டம் அங்கே இல்லை. அதற்கு பதிலாக டெல்லியில் உள்ள சமூக விரோதிகளின் கூடாரமாக அந்த ஏரியா மாறி விட்டது. ஒவ்வொரு நிமிஷமும் அங்கே எச்சரிக்கையோடு இருக்க வேண்டும்.'' சொன்ன கமிஷனர் விஷ்ணுவிடம் திரும்பி னார்.

''உங்களுக்கு ஹிந்தி பேசத் தெரியுமா?''

''தெரியும்...''

''தப்பில்லாமல் - தடுமாற்றமில்லாமல் பேசுவீர்களா?''

''பேசுவேன்... நான் சென்ட்ரல் போர்டு பள்ளியில் படித்தவன்.''

''ஓ! தட்ஸ் குட்...! நீங்கள் லோடி பார்க்கில் எங்கே தங்கப் போகிறீர்கள்?''

''நீல்கமல் லாட்ஜ்...''

''அங்கே தங்கியிருக்கும்போது மறந்தும்கூட ஹிந் தியைத் தவிர வேறு மொழியில் பேசி விடாதீர்கள். உங்களிடம் துப்பாக்கி இருக்கிறது அல்லவா?''

''இருக்கிறது...''

''அது... உங்களிடம் இருப்பது மற்றவர்களுக்கு தெரியக்கூடாது. எப்போது லோடி பாக் போகிறீர்கள்?''

விஷ்ணு 'எப்போது பாஸ்' என்ற பாவனையில் விவேக்கைப் பார்க்க - விவேக் கமிஷனரிடம் சொன் னான்.

''இன்னும் இரண்டு மணி நேரத்துக்குள் ஸார்.''

# 10

லட்சத் தீவுகள் என்று அழைக்கப்படும் தீவில் லட்சம் தீவுகள் இருக்கும் என்று நீங்கள் நினைத் தால் அது தவறு. அந்தத் தீவில் 27 தீவுகள் மட்டுமே உள்ளன. பிறகு ஏன் அது லட்சத்தீவு என்று அழைக்கப்பட வேண்டும்? காரணம் இருக்கிறது. 16-ம் நூற்றாண்டில் இந்தத் தீவுகள் போர்ச்சுகீசியர்கள் வசம் இருந்தன. அதன்பின் கொனார்க் மன்னர் அலிராஜாவிடம் இந்தத் தீவுகள் ஒப்படைக்கப்பட்டன. 18-ம் நூற்றாண் டில் இந்தியாவுக்கு வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்திய கம்பெனியார் இந்தத் தீவுகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பின்னர் அலிராஜா கேட்டுக் கொண்டதற்கு இணங்க ரூ. 1 லட்சத் துக்கு அவருக்கே அந்தத் தீவுகளை விற்றார்கள். அதிலிருந்து இந்தத் தீவுகள் லட்சத் தீவுகள் என்று அழைக்கப்பட்டு வருகின்றன.

மறுநாள் காலை டெல்லி பனி மூட்டத்தோடு விடிந்து கொண்டிருக்க, போர்வைக்குள் இருந்த விவேக்கை செல்போன் சுப்ரபாதம் பாடி எழுப்பியது. போனை எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான்.

விஷ்ணு.

''குட்மார்னிங் பாஸ்...''

''குட்மார்னிங்! என்ன ஏதாவது தகவல் உண்டா?''

''உண்டு பாஸ்...''

''சொல்லுடா...''

''இந்த லோடிபாக்ல ஒரு போஸ்டர் ஒட்டியிருக்காங்க பாஸ். அந்த போஸ்டரோட வாசகத்தைப் படிக்கறேன். கேக்கறீங்களா பாஸ்?''

''படி... படி...''

''ஹிந்தி போஸ்டர் அது. தமிழில் மொழி பெயர்க்கிறேன். *நாங்கள் கவிதையும் எழுது வோம். கண்ணி வெடிகளையும் பூமியில் விதைப்போம். ரத்தம் எங்களுக்கு சிவப்பு நீர். உயிர் எங்களுக்கு ஒரு விளையாட்டு பலூன். சட்டம் என்பது எங்களின் கால்களுக் குப் பொருந்தாத மிதியடிகள். எங்கள் புனிதப் பணிக்கு நீங்கள் இட்ட பெயர் தீவிரவாதம். நீங்கள் எப்படிப் பெயரிட்டு அழைத்தால் என்ன...? எங்களுடைய பணி தொடரும். ஒரு ரூஸோவை மட்டுமே உங்களால் கொல்ல முடிந்தது. எங்களிடம் இன்னமும் ஆயிரக்கணக் கான ரூஸோக்கள் இருக்கிறார்கள். உங்களால் அவர்களை என்ன செய்ய முடியும்? நாங்கள் எதைச் செய்தால் ரூஸோவின் ஆத்மா சாந்தி யடையும் என்று எங்களுக்கு நன்றாகவே தெரியும். அந்தப் பணியை நேற்றைய இரவி லிருந்தே ஆரம்பித்து விட்டோம்.*

*இப்படிக்கு*
*டபிள்யூ. ஹெச்.ஐ.*''

விவேக் கேட்டான்.

''இந்த ஒரு போஸ்டர் மட்டும்தானா...? இல்லை... லோடி பாக் ஏரியாவில் நிறைய போஸ்டர் ஒட்டியிருக் காங்களா?''

''காலையிலேயே ஒரு ரவுண்ட் போய்ட்டு வந்துட் டேன். நிறைய போஸ்டர் ஒட்டியிருக்காங்க பாஸ்.''

''சரி... உம்மேல யாரும் சந்தேகப்படலையே?''

''படலை பாஸ்... நான் தங்கியிருக்கிற லாட்ஜ் மேனே ஜர் என்கிட்டே என்ன கேட்டான் தெரியுமா பாஸ்?''

''சொல்லு...''

''டெல்லியில் இருக்கிற ராணே சாகிப் வீட்டுக் கல் யாணத்துல உங்களைப் பார்த்து இருக்கேன். நீங்க இந்த ஃபேமிலிக்கு சொந்தமா?'ன்னு கேட்டான்.''

''நீ அதுக்கு என்ன சொன்னே?''

''சொந்தமெல்லாம் கிடையாது. ஜஸ்ட் ஃபேமிலி ஃப்ரண்ட்'ன்னு சொன்னேன்.''

''விஷ்ணு! உன்கிட்டே ஒரு முக்கியமான பொறுப்பை ஒப்படைச்சிருக்கேன். வளவளன்னு பேசி உன்னை எக்ஸ்போஸ் பண்ணிக்காதே... உன்னோட கண்கள்தான் பேசணும்.''

''ஓகே... பாஸ்...''

''லோடி பாக் ஏரியாவில் சினிமா தியேட்டர்... ஏதாவது இருக்கா?''

''இருக்கு பாஸ்... 'தாஜ் பேலஸ்'ன்னு ஒரு பழைய தியேட்டர். ஷகிலா படம் போட்டிருக்கான்...! ஏன் பாஸ்?''

''தினமும் ராத்திரி செக்கண்ட் ஷோவுக்கு அந்த தியேட்டர்க்குப் போயிடு...''

''என்ன ஒரு இன்ப அதிர்ச்சி...? பாஸ்! சொல்றது நீங்கதானா...? என்னோட காதுகளையே என்னால நம்ப முடியலை...''

''டேய்...! சினிமா பார்க்கிறதுக்காக உன்னை அந்தத் தியேட்டர்க்குப் போகச் சொல்லலை...!''

''பின்னே எதுக்கு பாஸ்...?''

''தியேட்டரோட கடைசி சீட்ல உட்கார்ந்துட்டு படம் பார்க்க வர்றவங்களை நோட்டம் விடணும். படம் பார்த் துட்டு இருக்கும்போது யாருக்காவது செல்போன் வந்தா அந்த நபரோட ரியாக்ஷனைக் கவனிக்கணும். அப்புறம் படம் ஓடிட்டு இருக்கும்போது படத்தைக் கவனிக்காமே யாராவது குனிந்து ரகசியமாப் பேசிட்டிருந்தா அவங்க யார்ங்கிறதையும் நோட் பண்ணி - முடிஞ்சா அவங்க என்ன பேசிக்கறாங்கன்னும் கேட்கணும்.''

''மொத்தத்துல படம் பார்க்க முடியாதுன்னு சொல் லுங்க பாஸ்.''

''இதோ பார் விஷ்ணு...! சாய்தீப்பை தீவிரவாதி களிடமிருந்து மீட்கவே முடியாதுன்னு டெல்லி போலீஸ் நிர்வாகம் நினைச்சுட்டு இருக்கு. அதை நாம உடைச்சுக் காட்டணும். சாய்தீப்பை உயிரோடு மீட்டுக் காட்டியே ஆகணும்.''

''ஓ.கே. பாஸ்...''

''அந்தத் தீவிரவாதிகள் ஏதோ கோரிக்கைகளை வெச்சு அதை நிறைவேத்தறதுக்காக கெடு கொடுத்து இருக் காங்க. அந்தக் கெடு முடியறதுக்குள்ளே எனக்கு உன் கிட்டேயிருந்து ஏதாவது ஒரு உபயோககரமான தகவல் வரணும். வருமா...?''

''வரும் பாஸ்...''

''சரி... என்னோட லேண்ட் லைன் போன் ரிங் ஆயிட் டிருக்கு.... யாரோ கூப்பிடறாங்க... ரெண்டு மணி நேரம்

கழிச்சு மறுபடியும் பேசலாம்...'' விவேக் செல் போனை அணைத்துவிட்டு ஒலித்துக் கொண்டிருந்த டெலி போனின் ரிஸீவரை எடுத்தான்.

''எஸ்...''

''குட்மார்னிங் மிஸ்டர் விவேக்...'' மறுமுனையில் போலீஸ் கமிஷனர் அனில் கௌர் குரல் கொடுத்தார்.

''குட்மார்னிங் ஸார்...''

''விவேக்! நீங்க குளிச்சு ரெடியாயிட்டீங்களா?''

''நாட் யெட் ஸார்...''

''ஒரு அரை மணி நேரத்துக்குள்ளே நீங்கள் ரெடியாகி என்னோட ஆபீஸ் வர முடியுமா...?''

''ஸார்! எனிதிங்க்... இம்பார்ட்டண்ட்...?''

''எஸ்... உள்துறை அமைச்சர் மாணிக் பாண்டே உங்களையும் என்னையும் பார்த்துப் பேச விரும்பறார். செய்தி இப்பத்தான் வந்தது.''

''நோ ப்ராப்ளம் ஸார்...! இன்னும் அரை மணி நேரத் துக்குள்ளே ரெடியாகி உங்க முன்னாடி இருப்பேன்.''

# 11

**மோனாலிஸா ஓவியம் மிகவும் புகழ்பெற்ற ஓவியம். அந்த ஓவியத்தைப் பார்வையிட வரும் எவரும் அதைப் புகைப்படம் எடுக்க அனுமதிக் கப்படுவது இல்லை. ஃப்ளாஷ் ஒளிபட்டால் ஓவியம் நிறம் மங்கிவிடும் என்று மியூஸியம் அதிகாரிகள் கூறுவதே இதன் காரணம்.**

உள்துறை அமைச்சர் மாணிக் பாண்டே தன் வழுக்கைக்கு பின்புறம் இருந்த சொற்ப முடிக்கும் நேர்த்தியாய் டை அடித்து, உரித்த உருளைக்கிழங்கு நிறத்தில் இரட்டை நாடி உடம்போடு சோபாவை அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

கமிஷனர் அனில் கௌரும், விவேக்கும் அமைச் சர்க்கு சல்யூட் செய்துவிட்டு நின்றார்கள். அவர் தனக்கு முன்பாய் காலியாய் இருந்த இருக்கைகளைக் காட்டி னார்.

''ப்ளீஸ்... பீ... ஸீட்டட்...''

உட்கார்ந்தார்கள்.

உள்துறை அமைச்சர் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு தன்னுடைய மூக்கை நிரடிக் கொண்டே விவேக்கை ஏறிட்டார்.

''மிஸ்டர் விவேக்! கமிஷனர் உங்களிடம் எல்லா வற்றையும் சொன்னாரா?''

''எஸ்... சொன்னார்.''

''இளம் விஞ்ஞானி சாய்தீப்பை அந்த 'வீ ஹேட் இந்தியா' தீவிரவாதிகளிடம் இருந்து உயிரோடு மீட்க முடியும் என்று நினைக்கிறீர்களா?''

''எஸ்... ஐ... கேன்...!''

''அதற்கான திட்டம் ஏதாவது உங்களிடம் உள்ளதா?''

''இல்லை...''

''பின் எப்படி மீட்க முடியும் என்று நினைக்கிறீர்கள்?''

''ஸார்... நான் டெல்லி மண்ணை மிதித்து சில மணி நேரங்கள்தான் ஆகியுள்ளது. அந்தத் தீவிரவாதிகள் எந்தத்

திசையில் இருக்கிறார்கள் என்பதுகூட எனக்குத் தெரியாது. என்னுடைய உதவியாளர் விஷ்ணுவை தீவிரவாதிகளின் நடமாட்டம் அதிகமாக உள்ள லோடிபாக்கிற்கு வேவு பார்க்க அனுப்பியுள்ளேன். விஷ்ணுவிடமிருந்து ஏதாவது தகவல் வந்தால்தான் என்னுடைய அடுத்த ஸ்டெப் என்ன என்பதைத் தீர்மானிக்க இயலும்.''

அமைச்சர் மாணிக் பாண்டே கையமர்த்தினார்.

''மிஸ்டர் விவேக்! இப்படி உத்யோகப் பூர்வமாய் பேசுவதை விட்டுவிட்டு கொஞ்சம் பிராக்டிகலாய் பேசலாமா?''

''பேசலாம் ஸார்...''

''உங்கள் திறமையை நான் குறைத்து மதிப்பிடுவதாக நீங்கள் நினைக்கக் கூடாது. எனக்கு உளவுத் துறை அளித்த ரிப்போர்ட்படி 'வீ ஹேட் இந்தியா' என்று அழைக்கப்படும் இயக்கம் ஒரு கொடூரமான இயக்கம். அவர்கள் தெரிவித்த கோரிக்கைகளை நிறைவேற்றாத பட்சத்தில் கடத்தப்பட்ட நபர் உயிரோடு திரும்ப முடியாது. இதற்கு முன்னால் ஆப்கானிஸ்தானில் வேலை பார்த்த இரண்டு இந்திய அதிகாரிகளை அந்த கும்பல் கடத்திக் கொண்டு போய் அரசுக்கு இரண்டு கோரிக்கைகளை வைத்தார்கள். அந்த இரண்டு கோரிக்கைகளுமே நிறைவேற்ற முடியாத கோரிக்கைகள். 24 மணி நேரம் கெடு விதித்தார்கள். அரசு என்ன செய்வது என்று கைகளைப் பிசைந்து கொண்டு இருக்கும்போதே அந்த இரண்டு அதிகாரிகளின் தலைகளைத் துண்டித்து ஹைவேஸ் சாலையின் நடுவில் வைத்துவிட்டுப் போய் விட்டார்கள். இப்போது கடத்தப்பட்டுள்ள சாய்தீப்புக்கும் அதே நிலைமைதான் ஏற்படும் என்பது என் கருத்து.''

''ஸார்! சாய்தீப்பை விடுதலை செய்வதற்காக அந்த தீவிரவாதிகள் விதித்துள்ள கோரிக்கைகள் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?''

அமைச்சர் சில விநாடிகள் மௌனம் சாதித்துவிட்டு வாயைத் திறந்தார்.

''அந்த கோரிக்கைகளை வெளியே சொல்லக்கூட முடியாத அளவுக்கு ஆபத்தானவை.''

''அப்படியென்ன கோரிக்கைகள் ஸார்?''

''நீங்கள் வெளியே இதைத் தெரியப்படுத்தக் கூடாது மிஸ்டர் விவேக்.''

''உங்களுடைய தலையசைப்பு இல்லாமல் எந்த ஒரு விஷயமும் வெளியே போகாது ஸார்...''

மாணிக் பாண்டே தனக்குப் பக்கத்தில் இருந்த இன்ட் டர்காமைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண்டார். ஒரு பட்டனை அழுத்திவிட்டுப் பேசினார்.

''பகவன்தாஸ்...! அந்த கான்ஃபிடென்ஷியல் ஃபைலைக் கொண்டு வாருங்கள்...'' பேசிவிட்டு ரிஸீ வரை வைத்த பத்தாவது விநாடி அந்த ஃபைல் அமைச் சரின் கைக்கு வந்தது. அவர் அதைப் பிரித்து உள்ளே கோர்த்து வைத்து இருந்த அந்தத் தாளை எடுத்து நீட்ட, விவேக் வாங்கிக் கொண்டு அதில் பார்வையைப் போட்டான். கம்ப்யூட்டரில் பிரிண்ட் அவுட் எடுக்கப்பட்ட கடிதம் இது. சற்றே உடைபட்ட ஆங்கிலத்தில் வாச கங்கள் ஓடியிருந்தன.

இந்திய அரசுக்கு எச்சரிக்கையோடு கூடிய மூன்று நிபந்தனைகள்:

1. டெல்லியில் உள்ள எல்லா நாட்டு தூத்ரகங்களும் உடனடியாக மூடப்பட்டு அங்கே இருப்பவர்கள் தத்தம் நாட்டுக்கு அடுத்த விமானத்திலேயே புறப்பட்டுப் போய் விட வேண்டும்.

2. இந்தியாவில் ஒரு சில மாநிலங்களைத் தவிர மற்ற மாநிலங்களில் ஆட்சி சரியில்லை. அது எந்தெந்த மாநிலங்கள் என்பது உங்களுக்கே தெரியும். இந்த மாநில ஆட்சிகள் உடனடியாய் கலைக்கப்பட வேண்டும்.

3. இந்தியாவைச் சேர்ந்த பௌதீக விஞ்ஞானி 'பவுலோஸ்'க்கு அண்மையில் நோபல் பரிசு கொடுக்கப் பட்டது. அது எங்களுக்கு மகிழ்ச்சியான விஷயம் இல்லை. எனவே பவுலோஸ் அந்த நோபல் பரிசு எனக்கு வேண்டாம். அதற்கு நான் பொருத்தமானவன் இல்லை' என்று பகிரங்கமாக அறிவிக்க வேண்டும்.

விவேக் இந்த மூன்று நிபந்தனைகளையும் படித்து விட்டு இறுக்கமான முகத்தோடு நிமிர்ந்தான். அமைச்சர் கேட்டார்.

''இந்த நிபந்தனைகளைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் மிஸ்டர் விவேக்?''

''கடுமையானவை...''

''இவைகளை நிறைவேற்ற முடியாது என்பது ஒரு பக்கம் இருந்தாலும் தீவிரவாதிகள் இப்படிப்பட்ட நிபந்தனைகளை விதித்து இருக்கிறார்கள் என்பதை நாம் மீடியாக்களுக்கு தெரியப்படுத்தினாலே போதும்; எதிர்க் கட்சிக்காரர்கள் வேண்டாத பிரச்னைகளைக் கிளப்பி இந்தியா முழுவதும் ஒரு கலவரத்தையே உண்டாக்கி விடுவார்கள். அதனால்தான் பிரஸ்ஸுக்கு இதைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை...''

கமிஷனர் அனில் கெளர் விவேக்கிடம் திரும்பினார்.

“இப்போது சொல்லுங்கள் மிஸ்டர் விவேக்...! நிபந்தனைகள் இவ்வளவு கடுமையாய் இருக்கும்போது சாய்தீப்பை உங்களால் எப்படிக் காப்பாற்ற முடியும்? அந்தத் தீவிரவாதிகள் விதித்த கெடுவும் இன்னும் சில மணி நேரங்களில் முடியப் போகிறது...”

விவேக் பெருமூச்சு விட்டான். “இப்போது நிலைமை அந்த தீவிரவாதிகளுக்கு சாதகமாக உள்ளது. சாய்தீப்பைக் காப்பாற்றுவது இயலாத காரியம்தான். இருந்தாலும் வெற்றி என்பது கடைசி நிமிஷத்தில் கூடக் கிடைக்கலாம் இல்லையா...? அவர்கள் விதித்த கெடு முடிய இன்னும் எவ்வளவு நேரம் இருக்கிறது?”

“மூன்றே கால் மணி நேரம்.”

“அதாவது 195 நிமிடங்கள்?”

“ஆமாம்...”

விவேக் தீவிரமாய் யோசனைக்குள் விழுந்த விநாடி அமைச்சர் மாணிக் பாண்டேயின் உதவியாளர் உள்ளே வந்தார். கையில் ஒரு தாள். முகத்தில் இறுக்கம். கவலை.

“ஸார்...”

“என்ன...?”

“உங்களுக்கு ஒரு ஃபேக்ஸ் செய்தி.”

அமைச்சர் வாங்கிப் பார்த்துப் படித்துவிட்டு வெகுவாய் முகம் மாறி வியர்த்தார். விவேக்கை ஏறிட்டார்.

“இனிமேல் நாம் பேசிக் கொண்டிருப்பதில் ஒரு பயனும் இல்லை. இந்த ஃபேக்ஸ் செய்தியைப் படித்துப் பாருங்கள்.”

விவேக் வாங்கிப் பார்த்தான். மத்திய உளவுத் துறையிலிருந்து அந்த ஃபேக்ஸ் செய்தி அனுப்பப்பட்டு இருந்தது. படித்தான்.

உறுதி செய்யப்பட்ட செய்தி இது.

*டெல்லி - ஆக்ரா நெடுஞ்சாலையில் 'சிக்காரா' என்னும் இடத்தில் ஒரு புளிய மரத்துக்குப் பின்புறம் சாய்தீப்பின் தலை துண்டிக்கப்பட்டு கிடக்கிறது. நெற்றியில் ஒரு காகிதம் ஒட்டப்பட்டு இருப்பதாகவும் அதில் ஏதோ வாசகங்கள் காணப்படுவதாகவும் சிக்காரா போலீஸ் இன்ஸ்பெக்டர் அத்வாலே தகவல் கொடுத்துள்ளார். பிரஸ் மீடியாக்களுக்கு செய்தி கொடுப்பது பற்றிப் பேச பிரதமர் அலுவலகம் உங்களை எதிர்பார்க்கிறது.*

*- உளவுத்துறை.*

## 12

ஒரு நாட்டுக்கு ஒரு தேசிய கீதம் என்பது தான் மரபு. ஆனால் அமெரிக்க நாட்டுக்கு இரண்டு தேசிய கீதங்கள். 1931-ம் ஆண்டு வரை அமெரிக்காவுக்கு என தேசிய கீதம் எதுவும் இயற்றப்படவில்லை. அதற்குப் பிறகு தான் இரண்டு தேசிய கீதங்கள் இயற்றப்பட்டு இசைக்கப்பட்டு வருகின்றன.

டெல்லி - ஆக்ரா நெடுஞ்சாலையில் போக்குவரத்து ஸ்தம்பித்துப் போய் கிடக்க, விவேக்கும் போலீஸ்

கமிஷனர் அனில் கௌரும் சிரமப்பட்டு பயணம் செய்து சிக்காரா போய்ச் சேர்ந்தார்கள்.

அந்தப் புளிய மரத்தைச் சுற்றி போலீஸ் அரை வட்டம் போட்டு நின்றிருக்க, சிக்காரா போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் அத்வாலே விவேக்கையும் 'கமிஷனரையும் பார்த்ததும் ஒரு சல்யூட் அடித்து மரி யாதை கொடுத்துவிட்டு மரத்துக்குப் பின்புறம் கூட்டிப் போனார். ஒரு பாலிதீன் உறைக்குள் பத்திரப்படுத்தி வைத்து இருந்த சாய்தீப்பின் தலையைக் காட்டினார். மொட்டை அடிக்கப்பட்ட தலை.

கழுத்து தாறுமாறாய் வெட்டப்பட்டிருக்க, ரத்தத்தில் உறைந்து போன குரல் நாண்களும், ரத்தக் குழாய்களும் விறைத்துப் போய் கம்பிகள் மாதிரித் தெரிந்தன. முகம் முழுவதும் காய்ந்து போன ரத்தப் புள்ளிகள். மரணத் தின்போது பல்வரிசை பயத்தில் கிட்டித்துப் போயிருக்க, பற்களுக்கு நடுவில் நாக்கு மாட்டி கொஞ்சமாய் வெளியே தெரிந்தது. இடது பக்கக் காது பாதி அறுபட்டிருந்தது. நெற்றிப் பரப்பில் ஒரு காகிதத் துண்டு ஒட்டப்பட்டு இருக்க - அதில் ஏதோ வாசகங்கள்.

விவேக் உற்றுப் பார்த்தான்.

வாசகங்கள் ஹிந்தியிலோ ஆங்கிலத்திலோ இல்லை. ஏதோ ஒரு புரியாத மொழி.

'அது என்ன மொழி...?'

பிடிபடவில்லை.

விவேக் அந்த இன்ஸ்பெக்டர் அத்வாலேவை ஏறிட்டார்.

''புளிய மரத்துக்குப் பின்னால் தலை கிடப்பது உங் களுக்கு எப்படி, யார் மூலம் தெரிந்தது?''

“எனக்கு ஒரு போன் வந்தது ஸார். அந்தப் போனில் பேசிய நபர் ‘இன்ஸ்பெக்டரா...? சிக்காராவில் உள்ள நெடுஞ்சாலைப் புளிய மரத்துக்குப் பின்னால் போய்ப் பாருங்கள். நீங்கள் தேடிக் கொண்டிருக்கிற ஒரு நபர் கிடைப்பார்’ என்று சொல்லிவிட்டு ரிஸீவரை வைத்து விட்டார். நான் உடனே ஜீப்பில் கான்ஸ்டபிள்களை அழைத்துக் கொண்டு வந்து பார்த்தேன். சாய்தீப்பின் தலை இந்தப் பாலிதீன் உறையில் கிடந்தது. உடனே டெல்லிக்கு தகவல் கொடுத்தேன்.”

விவேக் அந்தத் தலையை மறுபடியும் பார்த்துவிட்டு ஒரு புன்னகையுடன் இன்ஸ்பெக்டரை ஏறிட்டான்.

“உங்களுக்கு போனில் தகவல் கிடைத்ததும் இந்த ஸ்பாட்டுக்கு வந்து சேர எவ்வளவு நேரம் பிடித்தது...?”

“கிட்டத்தட்ட அரை மணி நேரம்.”

“அந்த அரைமணி நேரமும் தலை இதே இடத்தில் தான் கிடந்து இருக்க வேண்டும் இல்லையா?”

“மே... பி... ஸார்...”

“நீங்கள் இந்த ஸ்பாட்டுக்கு வந்து பார்த்தபோது பாலிதீன் உறையில்தானே இந்தத் தலை இருந்தது?”

“ஆமாம் ஸார்.”

“அப்போது பாலிதீன் உறையின் வாய் திறந்து இருந்தது இல்லையா...?”

“திறந்துதான் இருந்தது.”

“ஓ.கே...! இந்த தலை விழுந்து கிடந்த இடத்தைச் சுற்றிலும் என்ன இருக்கிறது என்று கொஞ்சம் பாருங்கள்.”

இன்ஸ்பெக்டர் பார்வையைச் சுழற்றிப் பார்த்துவிட்டு குழப்பமான முகத்தோடு ''எதுவும் இல்லையே!'' என்றார்.

விவேக் புன்னகைத்தபடி, ''நீங்கள் சரியானபடி கவனிக்கத் தவறி விட்டீர்கள் மிஸ்டர் அத்வாலே. இந்தத் தலை கிடந்த இடத்தைச் சுற்றிலும் எத்தனை எறும்புப் புற்றுக்கள் இருக்கின்றன என்று பார்த்தீர்களா? ஒரு மனிதத் தலை ரத்தக் கறையோடு விழுந்து கிடக்கும் போது ஒரு எறும்புகூட அந்தப் பக்கம் போகவில்லையே... ஏன்? ஒரு சிறிய பூச்சி செத்துக் கிடந்தாலும்கூட நூற்றுக் கணக்கான எறும்புகள் ஒரு நிமிஷ நேரத்துக்குள் மொய்த்துக் கொண்டு விடுமே...? ஒரு மனிதத் தலை கிடக்கும்போது எறும்புகள் ஏன் பக்கத்தில் வர வில்லை?''

''அ... அ... அதுதானே?'' கமிஷனர் அனில் கௌர் திகைப்போடு விவேக்கைப் பார்த்தார். ''ரத்தக் கறை யோடு கிடக்கும் மனிதத் தலைக்குப் பக்கத்தில் ஒரு எறும்புகூட வரவில்லையே ஏன்...?''

விவேக் மெல்லச் சிரித்தான். ''ஏனென்றால் அது மனிதத் தலையே கிடையாது. அந்த முகமும் பொய். ரத்தமும் பொய். மனிதச் சதை போன்ற ஒரு வகை ஜெல்லினால் சாய்தீப்பின் முகத்தையும், தலையையும் உருவாக்கியிருக்கிறார்கள் அந்தத் தீவிரவாதிகள். வேண்டு மானால் அந்தத் தலையை எடுத்துத் தொட்டு அழுத்திப் பாருங்கள்.''

கமிஷனர் ஒரு நம்பாத பார்வையோடு பாலிதீன் உறைக் குள் இருந்த அந்தத் தலையைத் தொட்டு எடுத்தார். அது விரல்களுக்குக் கடினமாய் இடறியது. உறைந்த ரத்தம்

போன்ற அந்த சாயப் பொருள் பிசுபிசுப்பாய் கையில் ஒட்டியது.

''மிஸ்டர் விவேக்...! என்னால் இதை நம்பவே முடிய வில்லை... இப்படியும் ஒரு மனிதத் தலையை செயற்கை ஜெல்லினால் வடிவமைக்க முடியுமா என்ன...?''

''எல்லாவற்றுக்கும் ஆட்கள் இருக்கிறார்கள் ஸார். நமக்கு ஒரு அதிர்ச்சி வைத்தியம் கொடுப்பதற்காக சாய்தீப்பின் தலையை வடிவமைத்து இப்படிக் கொண்டு வந்து போட்டுள்ளார்கள். நெற்றியில் ஒட்டப்பட்ட காகிதத்தில் ஏதோ எழுதியிருக்கிறார்கள். அது என்ன மொழி என்று தெரியவில்லை.''

''ஃபாரன்ஸிக்கில் கொடுத்துப் பார்த்தால் அது எந்த நாட்டின் மொழி என்பது தெரிந்துவிடும்.'' கமிஷனர் சொல்லிக் கொண்டே தன் கையில் வைத்து இருந்த தலையை மறுபடியும் பாலிதீன் உறைக்குள் போட முயல, விவேக் இடைமறித்தான்.

''ஸார்! ஒரு நிமிஷம்...!''

''எஸ்...''

''அந்தத் தலையை என்னிடம் கொடுங்கள்.''

கமிஷனர் கொடுக்க - அதை வாங்கிய விவேக் தலை யின் கழுத்து பாகத்தை உற்றுப் பார்த்து மண்டையின் பின் பக்கத்துக்கு வந்தான்.

''என்ன விவேக்! எனிதிங்க் இம்பார்ட்டன்ட்...?''

''ஸார்! மண்டையோட்டின் பின் பகுதியைப் பாருங் கள். ஒரு மெல்லிய கோடு அரை வட்டம் போட்ட மாதிரி தெரியவில்லை?''

''ஆமாம்... தெரிகிறது...! கோட்டின் ஒரு முனையில் ரோம முடிச்சு போல் தூக்கி நிற்கிறது. ஒரு மணி பர்ஸின் 'ஜிப்'க்கு இருப்பது போல்.''

விவேக் அந்த ரோம முடிச்சை வலது கையின் ஆட்காட்டி விரலால் கிள்ளி இழுத்தான். அது ஒரு ஜிப்பைப் போல் இழுபட்டது.

மண்டையின் தோல் பாகம் திறந்துகொள்ள -

உள்ளே சி.டி. ஒன்று பிளாஸ்டிக் உறைக்குள் தூங்கிக் கொண்டிருந்தது.

## 13

**சாக்ரட்டீஸ் மிகப்பெரிய தத்துவஞானி. ஆனாலும் அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. பலதரப்பட்ட மனிதர்களைப் படித்தே தத்துவ ஞானியானவர்.**

டெல்லி உள்துறை அமைச்சர் மாணிக் பாண்டேயின் பங்களா. அவருடைய பிரத்யேக அறை.

கம்ப்யூட்டர் திரைக்கு முன்னால் அமைச்சர், விவேக், போலீஸ் கமிஷனர் உட்கார்ந்திருக்க, சி.டி.யை விழுங்கிக் கொண்ட கம்ப்யூட்டர் அதன் பதிவுகளை மானிட்டரில் பிரசவித்துக் கொண்டிருந்தது.

காமிரா இருட்டான அறைக்குள் நுழைந்து ஒவ்வொரு பொருளாய் காட்டிக் கொண்டே போய் திடும்மென்று நாற்காலியோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்த சாய்தீப்பை க்ளோசப்பில் காட்டியது.

சாய்தீப் சோர்ந்து போயிருந்தான். கண்களில் மரண பயம். 'கில் சம் வாட்டர்' என்று வாய் அரற்றிக் கொண்டிருந்தது. அவனுக்கு முன்னால் ஸ்டூலின் மேல் வைக்கப்பட்ட பட்டாக்கத்தி வீடியோ காமிரா வெளிச்சத்தில் பளபளத்தது.

எல்லோரும் அந்தக் காட்சியை உன்னிப்பாய்ப் பார்த்துக் கொண்டு இருக்கும்போதே பின்னணியில் ஒரு ஆண் குரல் ஹிந்தியில் ஒலித்தது.

*சி.டி.யைப் பார்த்துக் கொண்டிருக்கும் அதிகாரிகள் அனைவர்க்கும் எங்களுடைய 'வீ ஹேட் இந்தியா'வின் சிவப்பு வணக்கம். நீங்கள் எங்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றா விட்டால் அதன் விளைவு எப்படி இருக்கும் என்று காட்டுவதற்காகவே சாய்தீப்பின் தலையைப் போலவே வடிவமைத்து அதை டெல்லி ஆக்ரா நெடுஞ்ச[illegible]லையில் உள்ள சிக்காரா பகுதியில் உள[illegible]பமரத்துக்குப் பின்னால் கொண்டு போ[illegible] வைத்தோம். அது உண்மையான மனிதத் தலை அல்ல என்பதை சில நிமிஷங்களிலேயே கண்டு பிடித்து விடுவீர்கள் என்று எங்களுக்குத் தெரியும். நாங்கள் எதையும் செய்யக் கூடியவர்கள் என்பது இப்போது உங்களுக்குப் புரிந்து இருக்கும் என்று நம்புகிறோம். நாங்கள் விதித்துள்ள மூன்று கோரிக்கைகளும் கடினமானவை போல் தோன்றினாலும் இந்திய அரசு நினைத்தால் அதை ஒரே நாளில் நிறைவேற்ற முடியும். நீங்கள் யோசிக்க வேண்டும் என்பதற்காகவும்,*

*கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும் என்பதற்காகவும் நாங்கள் முன்பு விதித்த கெடுவை வாபஸ் வாங்கிக் கொண்டு மேலும் ஒரு 24 மணி நேரத்தை நீட்டித்துக் கொடுக்க முடிவு செய்து விட்டோம். இந்த முடிவின் படி நாளை மதியம் இரண்டு மணிக்குள் எங் களுடைய மூன்று கோரிக்கைகளையும் இந்திய அரசு நிறைவேற்றி வைக்க வேண்டும். அப்படி நிறைவேற்றாத பட்சத்தில் சாய்தீப்பின் உண்மையான தலையை வெட்டி எடுத்து டெல்லி ஆக்ரா நெடுஞ்சாலையில் ஏதாவது ஒரு புளிய மரத்துக்குப் பின்னால் கொண்டு போய் போட வேண்டியிருக்கும்.''*

குரல் நின்ற அடுத்த விநாடியே சாய்தீப்பின் உருவமும் கம்ப்யூட்டரின் மானிட்டர் திரையிலிருந்து மறைந்தது.

உள்துறை அமை[illegible] கனமான பெருமூச்சொன்றை வெளியேற்றியபடி [illegible]புக்கை ஏறிட்டார்.

''மிஸ்டர் விவேக்...! எதிரிகள் நாம் நினைப்பது போல் இல்லை. கோரிக்கைகளை நிறைவேற்ற எப்படி நெருக்கடி கொடுக்கிறார்கள் பார்த்தீர்களா...? இனியும் சாய்தீப்பின் உயிரைக் காப்பாற்ற முடியும்; அவரை உயிரோடு மீட்க முடியும் என்று நினைக்கிறீர்களா?''

''நிலைமை சிக்கலாகி விட்டது என்பது உண்மை தான்! ஆனாலும் நான் நம்பிக்கை இழக்கவில்லை ஸார். தீவிரவாதிகள் இன்னமும் நமக்கு இருபத்தி நாலு மணி நேரம் கெடு கொடுத்துள்ளார்கள். அதற்குள்ளாக ஏதாவது க்ளூ கிடைக்கலாம்.''

"க்ளு கிடைக்காமல் போனால்...?"

"ஸாரி ஸார்...! நான் எப்போதுமே பாஸிட்டீவாய் நினைத்துப் பழக்கப்பட்டவன். நெகட்டீவ்வாய் நினைப்பது எனக்குப் பிடிக்காத ஒன்று. முழுதாய் இன்னமும் 24 மணி நேரம் இருக்கிறது. நம்மிடம் உள்ள போலீஸ் பவரை முறையாகப் பயன்படுத்தினால் தீவிரவாதிகளைப் பிடித்து விடலாம்..."

"மிஸ்டர் விவேக்...! உங்களுடைய நம்பிக்கையான பேச்சு மனதுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. சாய்தீப்பை நீங்கள் இந்தத் தீவிரவாதிகளிடமிருந்து உயிரோடு மீட்டு விட்டால் இந்த நாடு என்றென்றைக்கும் உங்களுக்கு கடமைப்பட்டிருக்கும்..." உள்துறை அமைச்சர் சொல்லிக் கொண்டு இருக்கும்போதே அமைச்சரின் உதவியாளர் உள்ளே வந்து தயக்கமாய் நிற்க, அமைச்சர் என்ன என்பது போல் அவரைப் பார்த்தார்.

"ஸார்! உங்களைப் பார்த்து பேசுவதற்காக ஃபாரன்ஸிக் பிரிவின் உயர் அதிகாரி நவந்தர் வந்து இருக்கிறார்."

"அனுப்புங்கள்..."

உதவியாளர் வெளியேறிய இரண்டாவது நிமிடம் அந்த உயரமான ஃபாரன்ஸிக் அதிகாரி நவந்தர் உள்ளே வந்தார். வணக்கம் சொன்னவர்க்கு, எதிரிலிருந்த நாற்காலியைக் காட்டினார் அமைச்சர். பின்பு கேட்டார்.

"சொல்லுங்க மிஸ்டர் நவந்தர்... என்ன விஷயம்? சரியான காரணம் இல்லாத பட்சத்தில் என்னைத் தேடி வரமாட்டீர்களே...?"

''எஸ்... ஸார்...!'' என்றவர் சில விநாடிகளுக்குப் பிறகு பேச்சை மெல்ல ஆரம்பித்தார்.

''செயற்கை சாய்தீப் தலையின் நெற்றி பாகத்தில் ஒட்டப்பட்டிருந்த பேப்பரையும் அதில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்களையும் ஆய்வு செய்ததில் ஒரு உண்மை புலப்பட்டது ஸார். அந்தை உங்களிடம் சொல்லிவிட்டுப் போகவே வந்தேன்.''

அமைச்சர், கமிஷனர், விவேக் மூன்று பேர்களின் உடம்புகளிலும் ஒருவித பரபரப்பு தொற்றிக் கொள்ள ஃபாரன்ஸிக் அதிகாரி தொடர்ந்தார்.

''ஸார்...! அந்த பேப்பரில் எழுதப்பட்டிருக்கும் எழுத்துக்கள் எந்த ஒரு மொழிக்கும் சொந்தமானது அல்ல. உண்மையைச் சொல்லப் போனால் அப்படி ஒரு மொழியே உலகத்தின் எந்த நாட்டிலும் இல்லை. அது ஒரு குழந்தையின் கிறுக்கல்.''

''எதற்காக அப்படி எழுத வேண்டும்?''

''நம்மைக் குழப்புவது அவர்களுடைய நோக்கமாய் இருக்கலாம்.''

விவேக் குறுக்கிட்டான்.

''ஸாரி மிஸ்டர் நவந்தர்...! நீங்கள் சொல்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. காரணமில்லாமல் தீவிரவாதிகள் எதையும் செய்ய மாட்டார்கள். நீங்கள் அது ஒரு மொழியில்லை என்று சொன்னீர்கள். அது ஒரு வேளை உண்மையாய் இருக்கலாம். ஆனால் அந்த எழுத்துக்கள் ஏன் ஒரு சங்கேத மொழியாய் இருக்கக் கூடாது...?''

''மே... பி...''

''அதைக் கண்டு பிடியுங்கள் முதலில்...''

# 14

**அடுத்த தலைமுறை செல்போன்கள் எப்படி இருக்கும் என்ற கற்பனை நமக்குள் எழுவது இயற்கை. அனலாக் வகையைச் சேர்ந்தது. முதல் தலைமுறை செல்போன்கள். டிஜிட்டல் வகையைச் சேர்ந்தவை. இரண்டாவது தலை முறை செல்போன்கள். இவை இரண்டையும் தாண்டி மூன்றாவது தலைமுறைக்கு வரப் போகும் செல்போன்களுக்கு 3 ஜி செல் போன்கள் என்று பெயரிடப்பட்டுள்ளன. அந்த செல்போன்களின் செயல்பாடுகள் எப்படி இருக்கும்?**

ராத்திரி ஒன்பது மணி.

லோடி பாக்கில் இருந்த அந்த ஹோட்டலில் விஷ்ணு இரண்டு இட்லியையும் ஒரு வடையையும் சாம்பாரோடு சேர்த்து வயிற்றுக்கு அனுப்பிவிட்டு மசாலா தோசைக் காக காத்துக் கொணடிருந்தபோது அந்த இளைஞன் பரட்டைத் தலையோடு எதிரில் வந்து உட்கார்ந்தான். கண்ணாடி டம்ளரில் ததும்பிக் கொண்டிருந்த தண் ணீரில் தன் ஆட்காட்டி விரலை நுழைத்து அதில் ஒட்டியிருந்த தண்ணீரை விஷ்ணுவின் மேல் தெளித்துக் கொண்டே விஷ்ணுவை ஏறிட்டான். ஹிந்தியில்

கேட்டான். ''உன்னை ரெண்டு நாளா இந்த ஏரியாவில் பார்த்துட்டு இருக்கேன். நீ யாரு...?''

விஷ்ணு உள்ளுக்குள் ஜாக்ரதையாகி - வெளியே புன் னகைத்தான்.

''நான் யாராய் இருந்தா உனக்கென்ன...? என்கிட்டே எதுக்காக இந்த விசாரணை...?''

''இப்படியெல்லாம் எதிர்க்கேள்வி கேட்டா எனக்கும் பிடிக்காது. இவர்க்கும் பிடிக்காது...'' அவன் சொல்லிக் கொண்டே தன் இடுப்புப் பகுதிக்கு கையைக் கொண்டு போய் அந்த வெளிநாட்டு ரிவால்வரை எடுத்து மேஜை யின் மேல் வைத்தான்.

விஷ்ணு சற்றே கலவரமாகி சுற்றும் முற்றும் பார்க்க அவன் உதடு பிரியாமல் சிரித்தான்.

''என்ன பார்க்கிறே...? இப்போ ஹோட்டலில் சாப் பிட்டுகிட்டு இருக்கிற பதினேழு பேரில் பதினோரு பேர் என்னோட ஆட்கள். எல்லார்கிட்டேயும் ரிவால்வர் இருக்கு. நீ கொஞ்சம் முரண்டுத்தனம் பண்ணினாலும் அஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடி நீ ஆர்டர் பண்ணின மசால் தோசையை சாப்பிட நீ உயிரோடு இருக்க மாட்டே!''

விஷ்ணு மறுபடியும் தன்னுடைய பார்வையை சுற்றிலும் துரத்திப் பார்க்க, சாப்பிட்டுக் கொண்டிருந்த சிலர் அவனையே முறைத்துப் பார்த்தபடி தெரிந்தனர். பார்த்த பார்வையிலேயே நாங்கள் நல்லவர்கள் இல்லை' என்று சொன்னார்கள்.

விஷ்ணு சுதாரிப்புக்கு வந்தான்.

"ஒகே...! உனக்கு இப்ப என்ன வேணும்?"

"நீ யார்... உன்னோட பேர் என்ன?"

"நான் பன்ஸிலால்... சொந்த ஊர் ஜான்ஸி.."

"நீ மராட்டியனா?"

"ஆமாம்..."

"பொய் பேசாதே...! நீ மராட்டியனாய் இருக்க முடியாது... ரெண்டு நாளா உன்னை வாட்ச் பண்றோம்... நீ இந்த ஹோட்டலுக்கு வந்தால் இட்லி, தோசை, அரிசி சாப்பாட்டுக்கு மட்டும் ஆர்டர் தர்றே... உன்னோட உணவுப் பழக்கத்தை மட்டும் வெச்சுப் பார்த்தா நீ ஒரு மதராஸியாய்த்தான் இருக்கணும். உண்மையைச் சொல்லு... நீ... ஒரு மதராஸிதானே...?"

"இல்லை..."

"பொய் சொல்லாதே..."

"நான் எதுக்குப் பொய் சொல்லணும்?"

"உன்கிட்டே இப்படியெல்லாம் பேசிட்டிருந்தா உண்மை வெளியே வராது. உன்கிட்ட இருக்கிற உண் மையை எப்படி வெளியே வரவழைக்கிறதுன்னு எனக்குத் தெரியும். என்கூட எந்திரிச்சு வா..."

"எங்கே...?"

"அங்கே போனதும் தெரியும்... ம்... எந்திரி... ஹோட்டலுக்கு முன்னாடி ஒரு வேன் நின்னுட்டிருக்கு...! அதுல போய் ஏறு... ம்... ம்... எந்திரி..."

விஷ்ணு அசையாமல் உட்கார்ந்திருக்க அவன் தன் கையில் வைத்து இருந்த ரிவால்வரை உயர்த்தினான்.

"இதோ... பார்! இந்த லோடிபாக் ஏரியாவில் நாங்க தான் போலீஸ், வக்கீல், கோர்ட், ஜட்ஜ் எல்லாமே...! உன்னை சுட்டுத் தள்ளினா இங்கே இருக்கிறவங்க யாரும் கண்டுக்க மாட்டாங்க. இந்த ஹோட்டல் முத லாளி ஒரு செத்த எலியைத் தூக்கி குப்பைத் தொட்டி யில் வீசற மாதிரி உன்னோட பாடியைத் தூக்கி வீசிட்டுப் போயிடுவான். உனக்கு எப்படி வசதி...? செத்துப் போயிடறியா... இல்லை... என்கூட வெளியே வந்து வேன்ல ஏறிக்கிறியா?"

விஷ்ணு அவனையே பார்த்தான் 'இவன் செய்யக் கூடியவன்தான்...! முரண்டு பிடிப்பதில் பயனில்லை.'

விஷ்ணு எழுந்தான்.

"வா... போலாம்."

"ஒரு நிமிஷம்! உன்னோட செல்போனைக் கொடு..."

தயக்கமாய் விஷ்ணு எடுத்துக் கொடுக்க, வாங்கிக் கொண்ட அவன் அதைப் பக்கத்து மேஜையில் உட் கார்ந்திருந்த ஒரு மொட்டைத் தலையனிடம் வீசினான்.

"ஷபி! சிம்கார்டை எடுத்து அழிச்சிடு."

## 15

மூன்றாவது தலைமுறையில் வர இருக்கும் 3 ஜி செல்போன்கள் குறைந்த பட்சம் 144 கிலோ பைட்ஸ் தகவல்களை ஒரு நொடியில் அனுப்பும் திறன் பெற்றிருக்கும். ஆடியோ, வீடியோ, இன்டர்நெட், ரேடியா, வீடியோ கான்பரன்

ஸிங், வீடியோ ஈ-மெயில், மியூஸிக் டவுன் லோட் போன்றவற்றை 3 ஜி செல்போன் மூலம் செய்து கொள்ளலாம்.

விவேக் உள்துறை அமைச்சரிடம் பேசிவிட்டு கமிஷனர் அனில் கௌருடன் வெளியே வந்து ஜீப்பில் ஏறிக் கொண்டான்.

ஜீப் புறப்பட்டது. கமிஷனர் நிறம் இறந்து போன முகத்துடன் விவேக்கை பெருமூச்சோடு பார்த்தார்.

''மிஸ்டர் விவேக்! நான் கேட்கிறேன் என்று தப்பாய் நினைத்துக் கொள்ளாதீர்கள். இருபத்தி நாலு மணி நேரக் கெடுவுக்குள் சாய்தீப்பை நாம் மீட்க முடியுமா? இதை உள்துறை அமைச்சரிடம் சம்பிரதாயத்துக்காக சொன்னீர களா...? இல்லை... முடியும் என்ற நம்பிக்கையில் சொன்னீர்களா?''

விவேக் புன்னகைத்தான். ''கமிஷனர் ஸார்...! ஒரு வெற்றி கிடைக்க வேண்டுமென்றால் உன்னை நீயே நம்ப வேண்டும்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். இப்போது நாம் குழப்பம் என்ற பனிப்புகைக்குள் இருக் கிறோம். இந்தப் பனிப் புகை அடுத்த இருபத்தி நாலு மணி நேரத்துக்குள் கலைந்து போய்விடும் என்கின்ற நம்பிக்கை எனக்கு உள்ளது.''

''லோடி பாக்கில் தங்கியிருக்கும் உங்களுடைய உதவியாளரிடமிருந்து ஏதாவது தகவல் வந்ததா மிஸ்டர் விவேக்?''

''நேற்று இரவிலிருந்தே எந்தத் தகவலும் இல்லை. என்னுடைய உதவியாளர் விஷ்ணுவுக்கு இரண்டு தடவை போன் செய்து பார்த்தேன். எந்த ஒரு ரெஸ்

பான்ஸும் இல்லை... விஷ்ணுவிடமிருந்து போன் வரவில்லையென்றால் 'சம்திங் ஈஸ் கோயிங் ஆன் தேர்' என்றுதான் அர்த்தம்.'' விவேக் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவனுடைய செல்போன் ரிங்டோனை வெளியிட்டது.

''இது அநேகமாய் விஷ்ணுதான்!'' என்று சொல்லிக் கொண்டே செல்போனை எடுத்து டிஸ்ப்ளேயில் நம்பர் பார்த்த விவேக் லேசாய் முகம் மாறினான்.

வேறு ஏதோ புது நம்பர்.

செல்போனை காதுக்குப் பொருத்தி குரல் கொடுத்தான். ''எஸ்...!''

''மிஸ்டர் விவேக்...?''

''ஸ்பீக்கிங்...''

''நான் மூசா... W.H.I. இயக்கத்தின் ஒரு சல்லிவேர். காசட் பார்த்து விட்டீர்களா...?''

''......''

''என்ன பேச்சையே காணோம்...? 'உன்னுடைய கோரிக்கைகள் பரிசீலனையில் உள்ளன...' என்று ஏதாவது சொல்லேன்...''

விவேக் கோபத்தில் வெடித்தான். ''இதோ பார்! நீ யார் என்று எனக்குத் தெரியாது. உன்னுடைய முகம் எப்படியிருக்கும் என்றும் எனக்குத் தெரியாது. இருந்தாலும் உன்னிடம் சிறிதளவாவது மனிதாபிமானம் இருக்கும் என்கின்ற நம்பிக்கையில் ஒரு உண்மையைச் சொல்லட்டுமா?''

''சொல்! கேட்டுவிட்டு அது உண்மையா இல்லை பொய்யா என்று நான் சொல்கிறேன்.''

''உன்னைப் போன்ற தீவிரவாதிகளுக்கு இருதயம் இருக்க வேண்டிய இடத்தில் இரும்பு குண்டோ அல்லது கருங்கல்லோதான் இருக்கும் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் சொல்கிறேன் கேட்டுக் கொள். சாய்தீப் போன்ற இளம் மருத்துவ விஞ்ஞானிகள் நம் நாட்டுக்குத் தேவை. அவர் தன்னுடைய ஜீன் தெரபி ஆராய்ச்சியின் விளைவாய் பயன் பெறப் போவது நம் இந்திய மக்கள் மட்டும் இல்லை. உலகத்தில் உள்ள அனைத்து மக்களும்தான். பொதுவாகவே ஒரு மனிதனின் உயிர் மதிப்பு மிக்கது. அதிலும் இது போன்ற விஞ்ஞானிகளின் உயிர் மிக மிக மதிப்பு வாய்ந்தது. இதை நீ உணர்ந்து கொண்டு...''

''அந்த சாய்தீப்பை விடுதலை செய்ய வேண்டு மாக்கும்?''

''ஆமாம்...''

''உன்னுடைய கோரிக்கைக்கு ஒரு பெரிய ஸாரி... விவேக்...! நாங்கள் வைத்துள்ள மூன்று கோரிக்கை களுக்கு இந்திய அரசு பச்சைக் கொடி காட்டினால் எங்கள் பக்கம் இருந்தும் பச்சைக் கொடி பறக்கும். இல்லாவிட்டால் சிவப்புக் கொடிதான்!''

''உன்னுடைய இயக்கம் வைத்துள்ள கோரிக்கையில் ஏதாவது நியாயம் இருக்கிறதா...?''

''எது நியாயம்... எது அநியாயம் என்று எங்களுக்குத் தெரியும். எதையும் எடை போட்டுப் பார்க்க வேண்டிய தேவை எங்களுக்கு இல்லை... மூன்று கோரிக்கைகளும் நிறைவேறாதபோது சாய்தீப் உயிரோடு திரும்புவது சாத்தியமே கிடையாது. இதில் பலியாகப் போவது

சாய்தீப் மட்டும் இல்லை. உனக்குப் பிரியமான இன் னொரு நபரும்தான்...''

விவேக் திடுக்கிட்டான்.

''இ... இ... இன்னொரு நபரா...? நீ... யாரைச் சொல் கிறாய்...?''

''உனக்கு உதவியாளனாய் இருப்பானே ஒரு ஆள் பெயர் விஷ்ணு. அவன் இப்போது எங்கள் கைகளில்...! லோடி பாக்கில் வேவு பார்க்க வந்தவன் இருட்டறைக்குள் முட்டி போட்டு உட்கார்ந்திருக்கிறான். சாய்தீப்பின் தலை உருளும்போது அவனுடைய தலையும் இருக் காது.''

''ஏ... ஏ... ஏய்ய்...!''

விவேக் அதிர்ந்துபோய் கத்திக் கொண்டிருக்கும் போதே மறுமுனையில் இணைப்பு அறுபட்டது.

# 16

நம் உடலைப் பற்றிய சின்னச் சின்ன உண் மைகள்:

1. ஒரு நிமிடத்துக்கு 10 முறை கண் சிமிட்டு கிறோம்.

2. நாம் ஒரு வார்த்தை பேசும்போது 72 தசைகள் அசைகின்றன.

3. நம் உடலில் 20 லட்சம் வியர்வைச் சுரப்பிகள் உள்ளன.

4. நம் நாக்கில் 3000 சுவை அரும்புகள் உள்ளன.

5. மனித மூளை 100 கோடி உயிரணுக்களால் உருவாக்கப்பட்டது.

விஷ்ணுவுக்கு சுய உணர்வு திரும்பியபோது தான் ஒரு அரையிருட்டான அறைக்குள் இருப்பதை உணர்ந் தான்.

பின்னந்தலை ஒரு பாறாங்கல்லைப் போல் கனத்தது. கண்களில் எரிச்சல். இடது கை தோள்பட்டையில் வலி. இந்த அவஸ்தைகளை எல்லாம் மீறிக் கொண்டு வயிறு பசித்தது.

விஷ்ணு மெல்ல எழுந்து நின்று சுற்றும் முற்றும் பார்த்தான். சிறிய அறை. உயரத்தில் ஜன்னல். அதில் சூரியனின் ஜீரோ வாட்ஸ் வெளிச்சம். 'இது காலையா... மாலையா?'

விஷ்ணு ஜன்னலை அண்ணாந்து பார்த்து யோசித்துக் கொண்டிருக்கும்போதே அறையின் கதவு திறக்கப்பட்டு ஒருவன் உள்ளே நுழைந்தான். கையில் ரிவால்வர்.

விஷ்ணுவின் நெற்றிப் பொட்டை ரிவால்வரின் முனை மெல்ல முத்தமிட்டது.

''வெளியே வா...!''

விஷ்ணு அவனோடு நடந்து அறையை விட்டு வெளியே வந்தான். அழுக்கான ட்யூப்லைட் வெளிச் சத்தில் ஒரு ஹால் தெரிந்தது. ஹாலின் இரண்டு பக்கங் களிலும் சின்னச் சின்னதாய் அறைகள் தெரிய அதற் குள்ளே ஆட்கள் நடமாட்டம் தெரிந்தது.

விஷ்ணு - இந்த அறையில் இருப்பவர்கள் யார் என்று தெரிந்து கொள்வதற்காக தலையைத் திருப்பிப் பார்க்க - அவனுடைய மண்டையின் பின்பக்கத்தில் ஒரு அடி விழுந்தது.

''நேராய் நட!''

நடந்தான்.

காற்றில் இப்போது புளிச்ச சாராய நெடி.

ஏதோ ஒரு அறையில் செல்போன் ரிங்டோனை வெளி யிட்டுக் கொண்டிருக்க, இன்னொரு அறையில் இரண்டு பேர் ஒரு பெண்ணிடம் சில்மிஷம் செய்து கொண்டிருந் தார்கள்.

ரிவால்வர் பேர்வழி விஷ்ணுவைத் தள்ளிக் கொண்டு ஹாலுக்குப் பின்புறமாய் இருந்த அறைக்குள் நுழைந் தான்.

ஒரு கையில் பீர் பாட்டிலையும், இன்னொரு கையில் பீஃப் சதைத் துண்டையும் வைத்தபடி ஒருவன் டி.வி. பார்த்துக் கொண்டிருக்க, விஷ்ணுவை அவனுக்கு முன்பாய் கொண்டு போய் நிறுத்தினான் ரிவால்வர் பேர்வழி.

''மூசா...!''

''ம்...''

''நீ சொன்னபடியே நான் அறைக்குள் நுழைந்து பார்த்தபோது இவனுக்கு சுய உணர்வு திரும்பியிருந்தது.''

அந்த மூசா சிரித்தான்.

''எனக்குத் தெரியாதா என்ன...? ஒரு ஆம்பியூல் மயக்க மருந்து சரியாய் பதினோரு மணி நேரம்தான்

வேலை செய்யும்.'' சொன்னவன் விஷ்ணுவை ஏறிட் டான். ''என்ன... பின்னந்தலை பாறாங்கல் மாதிரி கனக் குதா?''

விஷ்ணு பதில் சொல்லாமல் அந்த அறையைத் தன் பார்வையால் கழுவிக் கொண்டிருக்க - மூசா எழுந்து வந்தான்.

''இதோ பார்...! எங்க இருப்பிடத்துக்கு வந்த எவருமே இதுவரையிலும் திரும்பிப் போனதாய் சரித்திரம் இல்லை. நீ யாரு? எதுக்காக லோடி பாக்குக்கு வந்தே என் கிற எல்லா விபரமும் எனக்குத் தெரியும். உன்னுடைய பாஸ் விவேக்கிட்டே இப்பத்தான் பேசினேன். சாய்தீப் போட உயிர் மதிப்பு வாய்ந்த உயிராம்... அவரை நான் கொல்லக் கூடாதாம்... அவராலே இந்த மனித குலத் துக்கு எவ்வளவோ நன்மைகள் கிடைக்குமாம் . மருத் துவத் துறையில் பெரிய புரட்சியையே பண்ணப் போறாராம். இப்படியெல்லாம் உன்னோட ... உப தேசம் பண்ணினான். ஆனா நாங்க வெச்ச மூணு கோரிக்கைகளுக்கு எந்த விதமான பதிலும் இல்லை. சாய்தீப்போட தலையை செயற்கையாய் உருவாக்கி அதை டெல்லி - ஆக்ரா நெடுஞ்சாலையில் போட்டு போலீஸுக்கு அதிர்ச்சியைக் கொடுத்துப் பார்த்தோம். அந்த அதிர்ச்சியை ஜீர்ணம் பண்ணி ஏப்பம் விட்ட போலீஸ் எங்களைப் பிடிக்கிற முயற்சியில் முழு மூச்சாய் இறங்கியிருக்காங்க. அதனால இந்தத் தடவை போலீ ஸுக்கு நிஜமாவே அதிர்ச்சி கொடுக்க முடிவு பண் ணித்தான் உன்னை இங்கே கடத்திக் கொண்டு வந் தோம். கிராமத்தில் இருக்கிற சில கோயில்களில் ஆட் டையும், மாட்டையும் பலி கொடுக்கிறதுக்கு முன்பு

பூசணிக்காயைப் போட்டு உடைப்பாங்க. அந்தப் பூசணிக் காய் வேறு யாருமில்லை. நீதான்...! அதுக்கப்புறம் சாய்தீப்பை தலை இல்லாத உடம்போடு ஹைவேஸில் கொண்டு போய் போடப் போறோம். நீயும் உயிர் பிழைத்து சாய்தீப்பும் உயிர் பிழைக்கணும்ன்னா அதுக்கு ஒரே ஒரு வழிதான் இருக்கு. அந்த வழி எங்களுடைய மூணு கோரிக்கைகளும் உடனடியாக ஒரு மணி நேரத்துக்குள் நிறைவேற்றப்படணும்...!'' பேச்சை நிறுத்திய மூசா தனக்குப் பக்கத்தில் நின்றவனைப் பார்த்தான். ''அமர்...! அந்த சாய்தீப்பைக் கொண்டு வா... கை விலங்குகள் அப்படியே இருக்கட்டும்...!''

அந்த அமர் தலையாட்டிவிட்டு அறையினின்றும் வேகமாய் வெளியேறிப் போனான்.

# 17

இந்திய நாடு பரந்த நாடு என்று எல் லோர்க்கும் தெரியும். அதன் மொத்த பரப்பளவு எவ்வளவு தெரியுமா? 32 லட்சத்து 87 ஆயிரத்து 263 சதுர கிலோ மீட்டர். வடக்கு தெற்காக 3200 கிலோ மீட்டர். கிழக்கு மேற்கு 1700 கிலோ மீட்டர். இந்தியாவின் மக்கள் தொகை 2015-ம் வருடம் 122 கோடியாகவும் 2031-ம் வருடம் 200 கோடியாகவும் இருக்கும்.

டெல்லி போலீஸ் அதிகாரிகளின் அவசரக் கூட் டத்தை முடித்துக் கொண்டு விவேக் காருக்கு வந்த விநாடி - அவனுடைய இடது கையில் இடம் பிடித்து

இருந்த செல்போன் வைப்ரேஷனில் கூப்பிட்டது. டிஸ்ப்ளேயில் பெயர் பார்க்க - ரூபலா.

"என்ன ரூபி...?"

ரூபலா பதட்டப்பட்டாள்.

"என்னங்க... டி.வி. நியூஸ் உண்மையா?"

"விஷ்ணு கடத்தப்பட்டதுதானே...?"

"ஆமாம்..."

"உண்மைதான் ரூபி... நான் இதை எதிர்பார்க்கலை... சாய்தீப்பையும் விஷ்ணுவையும் மீட்கத் தேவையான எல்லா முயற்சிகளையும் டெல்லி போலீஸ் எடுத்துட்டிருக்கு..."

"மீட்டுருவாங்களா...? எல்லார்க்கும் சொல்ற பதிலை எனக்குச் சொல்லாதீங்க..."

"இதோ பார் ரூபி...! வீ ஹேட் இண்டியா என்கிற தீவிரவாத இயக்கம் மிகவும் கொடூரமான இயக்கம்தான். கடந்த சில வருடங்கள்ல அவங்களோட நடவடிக்கைகள் குழப்பமாகவும் பயத்தை ஏற்படுத்தக் கூடியதாகவும் அமைந்துள்ளது. அவங்களுடைய முக்கியமான குறி இந்தியர்கள்தான். இந்தியர்கள் எந்த நாட்டில் இருந்தாலும் சரி; அவங்களைக் கடத்திட்டுப் போக வேண்டியது - சில கோரிக்கைகளை வைக்க வேண்டியது - கோரிக்கைகள் நிறைவேற்ற பேச்சு வார்த்தை நடந்துட்டு இருக்கும்போதே கடத்திட்டுப் போனவங்களைக் கொலை பண்ணி தலை வேறு; உடம்பு வேறாய் ஏதாவது ஒரு பக்கம் கொண்டு போய் போட்டுட வேண்டியது. அது ஒரு வெறி பிடித்த இயக்கம். எந்த நிமிஷம் எப்படி செயல்படுவாங்கன்னு யார்க்கும் தெரியாது."

''என்னங்க... இப்படிப் பேசறீங்க...? நீங்க பேசறதைப் பார்த்தா சாய்தீப்பையும் விஷ்ணுவையும் காப்பாற்ற முடியாது போலிருக்கே?''

''நான் இன்னமும் நம்பிக்கை இழக்கலை ரூபி...! போலீஸ் அதிகாரிகள் கூட்டத்தில் இப்போ சில அதிரடியான முடிவுகளை எடுத்து இருக்கோம். அதை உடனே செயல்படுத்தவும் போறோம்.''

''தீவிரவாதிகள் இருக்கிற இடத்தை ஸ்மெல் பண்ணிட்டீங்களா?''

''இல்லை...''

''இடமே தெரியாத போது என்ன நடவடிக்கை எடுத்து என்ன பிரயோஜனம்?''

''ரூபி...! டெல்லி மிகப் பெரிய ஏரியா. இவ்வளவு பெரிய ஏரியாவில் அந்தத் தீவிரவாதிகள் சாய்தீப்பையும், விஷ்ணுவையும் எங்கே கடத்திகிட்டு போய் மறைச்சு வெச்சிருக்காங்கன்னு தெரியலை. அதை ஸ்மெல் பண்ணத்தான் உளவுத்துறை முயற்சிகளை எடுத்துகிட்டு இருக்கு.''

''எல்லாமே முயற்சிதானா...?''

''வேற என்ன பண்ண முடியும் ரூபி...! தீவிரவாதிகள் இருபத்தி நாலுமணி நேரம் டயம் கொடுத்து இருக்காங்க... அதுக்குள்ளே சாய்தீப்பையும் விஷ்ணுவையும் மீட்டுடலாம்ங்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு...''

''எனக்கு பயமாயிருக்குங்க...''

ரூபலாவின் குரலில் எவரெஸ்ட் குளிர்.

# 18

இந்திய அமைப்பு சட்டப்படி அதிகாரம் படைத்தவர் பிரதமரா இல்லை ஜனாதிபதியா? ஜனாதிபதி மத்திய அரசின் மிக உயர்ந்த நிர்வாக அதிகாரங்கள் கொண்டவர். ராணுவத்தின் முப்படைகளுக்கும் இவர்தான் தலைவர். இருந்த போதும் மத்திய மந்திரி சபையின் தலைவராக இருக்கும் பிரதமரின் ஆலோசனைப் படியே ஜனாதிபதி செயல்படுவார். எனவே பவர்ஃபுல் பதவி பிரதமரோடதுதான். ஜனாதிபதி சந்திரன் என்றால் பிரதமர் சூரியன்.

கைகளில் விலங்கோடு இருந்த சாய்தீப்பை அமர் தள்ளிக் கொண்டு வந்து மூசாவின் முன்பாக நிறுத்தி னான்.

மூசா சிரித்தான்.

''இந்தியாவின் இளம் விஞ்ஞானிக்கு வணக்கம். இவர் யார்ன்னு உங்களுக்குத் தெரியுதா...?'' விஷ்ணுவை சுட்டிக் காட்டினான்.

சாய்தீப் சோர்வடைந்த கண்களால் விஷ்ணுவைப் பார்த்துவிட்டு 'தெரியாது' என்ற பாவனையில் தலை யாட்டிவிட்டுக் குனிந்து கொண்டான்.

மூசா செல்ப்புக்கு நடந்து போய் இன்னொரு புது பீர் பாட்டிலைக் கையில் எடுத்துக் கொண்டே சொன்னான்.

''இவன் பேரு விஷ்ணு...! க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக்குக்கு அஸிஸ்டெண்ட்... ஜாலியா பேசிகிட்டே

குற்றவாளிகளை 'ஸ்மெல்' பண்றதுல கில்லாடி. கொஞ் சம் ஜொள்ளு பேர்வழி... துணிச்சலாய் லோடிபாக்குக்கு வந்து எங்க இயக்கத்தை வாசனை பிடிக்க நினைச்சான். இங்கே கொண்டாந்துட்டோம்... இந்திய அரசாங்கம் எங்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றாத பட்சத் தில் இந்த விஷ்ணு உன்னோட மரணத்துக்கு கம்பெனி கொடுப்பான்...''

''என்ன சாய்தீப்...! நான் சொன்னது உனக்குப் புரியலையா...? உன்னோட தலை வெட்டப்படுவதற்கு முன்னால் இவனுடைய தலை கீழே உருளும்ன்னு சொல்றேன்...''

மூசா சொல்லிக் கொண்டிருக்கும்போதே இயக்கத் தைச் சேர்ந்த ஒருவன் வேகமாய் உள்ளே வந்தான். உடம்பில் பதட்டம். மூசா அவனிடம் நிமிர்ந்தான்.

''என்ன ஷபி...?''

''ஒரு நிமிஷம்... இப்படி வா மூசா...''

''என்ன...?''

''வா... சொல்றேன்...''

மூசா அமரிடம் திரும்பினான். ''ரெண்டு பேரையும் பார்த்துக்க...! ரெண்டு பேர்ல யாரு ஓரடி நகர்ந்தாலும் சரி; தயவு தாட்சண்யம் பார்க்காமே சுட்டுடு...'' சொல்லி விட்டு ஷபியைத் தொடர்ந்து போனான் மூசா. ''என்ன ஷபி...! என்ன விஷயம்...?''

''நாம் எதிர்பாராத ஒரு விஷயம் நடந்து விட்டது.''

''என்ன...?''

''உண்மையான 'வி ஹேட் இந்தியா' இயக்கத் தலை வன் ராபின் தனது ஐந்து கூட்டாளிகளோடு வந்து நமது ஆட்களை துப்பாக்கி முனையில் மிரட்டி ஒரு அறையில்

உட்கார வைத்துள்ளான். உன்னை அழைத்து வரச் சொன்னான்...''

மூசாவின் முகம் மாறி கறுத்தது.

''ராபினுக்கு எப்படி நம்முடைய இந்த ரகசிய இடம் தெரிந்தது...?''

''தெரியவில்லை மூசா...! எப்படியோ வந்து விட்டான். அவனுடைய இயக்கத்தின் பெயரை நாம் உபயோகித்து சாய்தீப்பையும், விஷ்ணுவையும் கடத்தியதில் ராபினுக்கு ஏகப்பட்ட கோபம்...''

''என்ன செய்யலாம் ஷபி...? சொல்...!''

''எனக்குத் தெரியவில்லை. நீயே வந்து பேசு...'' இரண்டு பேரும் ஹாலைக் கடந்து கார்னரில் இருந்த அந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

மூசாவின் ஆட்கள் ஒன்பது பேரும் தலைகளுக்குப் பின்னால் கைகளைக் கோர்த்துக் கொண்டு தரையில் மண்டியிட்டு உட்கார்ந்திருக்க - எதிரே போடப்பட்டிருந்த நாற்காலியில் ராபினும் அவனுடைய கூட்டாளிகளும் உட்கார்ந்திருந்தார்கள். அதில் இரண்டு பேர்களின் கைகளின் மெஷின் கன்கள் ஏ.கே. 47 இடம் பிடித்து தயார் நிலையில் தோட்டாக்களை உமிழக் காத்திருந்தன.

மூசாவும் ஷபியும் நடுக்கத்துடன் ராபினுக்கு முன்பாய் நின்றார்கள். ராபினின் நெருப்புப் பார்வை மூசாவைக் குளிப்பாட்டியது.

''என்ன மூசா...! ஆட்டைக் கடிச்சு, மாட்டைக் கடிச்சு கடைசியில் என்னையே கடிக்க ஆரம்பிச்சுட்டே போலிருக்கே...?''

''அது... அது... வந்து தலைவரே...!''

''நாயே! என்னடா... வந்து... போயி... என்னோட ரேன்ஞ் என்ன... உன்னோட ரேன்ஞ் என்ன...?'' ராபின்

கத்திக் கொண்டே எழுந்து போய் மூசாவின் இடுப்பில் ஓங்கி உதைத்தான்.

மூசா கிட்டத்தட்ட பறந்து போய் அறையின் மூலை யில் போய் விழுந்தான். முன்தலை இடித்துக் கொண்டதில் நெற்றியில் லேசாய் புடைப்பு. கைகள் நடுங்க கும்பிட்டான்.

''என்னை மன்னிச்சுக்க ராபின்...! இப்போ இருக்கிற மத்திய அரசு நீடிக்கக் கூடாதுங்கிறதுக்காக எதிர்க்கட்சித் தலைவர்கள் எங்களுக்கு பத்து கோடி ரூபாய் கொடுத்து சில அரசியல் நெருக்கடிகளை உருவாக்கச் சொன் னாங்க...! எங்க இயக்கத்துக்கு மேல் உளவுத் துறைக்குச் சந்தேகம் வந்துடக் கூடாதுங்கிறதுக்காக உங்க இயக்கத் தோட பேரை யூஸ் பண்ணிட்டோம். அது தப்புதான்...! இருந்தாலும் எங்களுக்கு வேற வழி தெரியலை.''

''சாய்தீப் இப்போ உயிரோடு இருக்கானா?''

''இருக்கான்...''

''அந்த விஷ்ணு?''

''அவனும் உயிரோடு இருக்கான்...''

''எதிர்க்கட்சித் தலைவர்கள் இந்தக் காரியத்தை செய்ய எவ்வளவு பணம் கொடுத்ததாய் சொன்னே?''

''பத்து கோடி...''

''பொய் சொல்லாதே!''

''இதுல பொய் சொல்ல ஒண்ணுமேயில்லை ராபின்... அவங்க எனக்குக் கொடுத்தது பத்து கோடிதான்!''

ராபினின் பார்வை ஷபியின் பக்கம் திரும்பியது.

''ஷபி! நீ சொல்லு...! எதிர்க்கட்சித் தலைவர்கள் எவ்வளவு பணம் கொடுத்தாங்க?''

''அம்பது கோடி...?''

மூசா ஷபியை கோபமாய்ப் பார்க்க - ராபின் சிரித்தான். ''அவனை ஏன் முறைக்கிறே மூசா...? அவன் உண்மையைத்தான் சொல்வான். ஏன்னா ஷபி என்னோட ஆள். இந்தியா பூராவும் இருக்கிற ஒவ்வொரு தீவிரவாத இயக்கத்திலும் என்னோட 'வீ ஹேட் இந்தியா' இயக்கத்தைச் சேர்ந்த ஒரு ஆள் இருப்பான்.

அந்த ஆட்கள் மூலமா நான் எல்லா விஷயங்களையும் இருந்த இடத்திலிருந்தே தெரிஞ்சுக்குவேன். மத்தியில் ஆளும் கட்சி ஒரு நாள் கூட நிம்மதியாக இருக்கக் கூடாது என்பதற்காக நீ பண்ணப் போற சதிகளுக்கு பேசப்பட்ட கட்டணம் அம்பது கோடி.''

மூசா முகம் வியர்த்தான். ''ஸ... ஸ... ஸாரி... ராபின்! நா... நா... நான் தெரியாமே சொல்லிட்டேன்... அவங்க... அவங்க கொ... கொ... கொடுத்தது அம்பது கோடிதான்...''

ராபின் சிரித்தான்.

''அட...! ஏன்... இப்படி... பயப்படறே... மூசா...? நம்மை மாதிரியானவங்க உண்மை பேசினாத்தான் தப்பு... பொய் தாராளமாய் பேசலாம். ஆனா அந்தப் பொய்யை என்னை மாதிரியான ஆட்கள்கிட்டே பேசக்கூடாது. சரி...! அந்த அம்பது கோடி ரூபாய் பணம் எங்கே...?''

''என்கிட்டே தான் இருக்கு.''

''கொண்டு வந்து முன்னாடி வை...''

''என்ன...?''

''அந்த ஐம்பது கோடி ரூபாய் பணத்தை பாதி பாதியா பிரிச்சுக்குவோம். உனக்கு இருபத்தஞ்சு கோடி. எனக்கு இருபத்தஞ்சு கோடி...''

ராபின் கோணலாய் புன்னகைத்தான். "இதோ பார் மூசா...! நீ பண்ணின காரியத்துக்கு உன்னைப் பார்த்த உடனே சுட்டுத் தள்ளியிருப்பேன். நீ உயிரோடு இருக்கிறதுக்கு என்ன காரணம் தெரியுமா? நீயும் என்னோட இனம். அதாவது தீவிரவாத இனம். நீயும் உன்னோட இயக்கத்தின் மூலமா நிறைய பிரச்னைகளை உண்டு பண்ணி இந்தியாவுக்கு தலைவலி கொடுத்திருக்கே... அந்த ஒரு காரணத்துக்காகத்தான் உன்னை உயிரோடு விடறேன். ஆனா என் இயக்கத்தோட பேரை வெச்சுக் கிட்டு நீ வியாபாரம் பண்ணியிருக்கிறதால - அந்த அம்பது கோடி இப்பவே வேணும். கொண்டு வந்து பணத்தை வை... பணம் இதே வீட்டுக்குள்ளேதானே இருக்கு?"

"ஆமாம்..."

"ஷபிக்கு பணம் இருக்கிற இடம் தெரியுமா?"

ஷபி குறுக்கிட்டான். "எனக்குத் தெரியும்... ராபின்...! மூசாகிட்டே சாவி இருக்கு. வாங்கிக் கொடுங்க... நான் போய் பணத்தை எடுத்துட்டு வர்றேன்."

"மூசா! ஷபி கிட்டே சாவியைக் குடு..."

மூசா சில விநாடிகள் தயங்கிவிட்டு ஒரு பெருமூச் சோடு இடுப்பு பாகத்துக்கு கையைக் கொண்டு போய் அங்கே பெல்ட்டில் ஒளித்து வைத்து இருந்த சாவியை எடுத்துக் கொடுத்தான்.

சாவியை வாங்கிக் கொண்டு ஷபி வெளியேறிப் போய் அடுத்த ஐந்தாவது நிமிஷம் ஒரு சூட்கேஸோடு உள்ளே வந்தான்.

# 19

**இந்தியாவின் 102 கோடி மக்கள் தொகை யில் சுமார் இரண்டரைக் கோடி மக்கள்தான் வருமானவரி கட்டுகிறார்கள்.**

**ஷ**பி சூட்கேஸைத் திறக்க, உள்ளே கட்டுக் கட்டாய் ஆயிரம் ரூபாய் நோட்டுகள் நெருக்கியடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தன.

ராபின் கண்கள் வியப்பிலும் மகிழ்ச்சியிலும் விரிந்தது. ''மூசா...! நீ என்னைக் காட்டிலும் பிரமாதமாய் பிசினஸ் பண்ணியிருக்கே... நீ இதிலிருந்து ஒரு கோடி ரூபாய் எடுத்துக்க... அதே சமயத்துல அந்த சாய்தீப் பையும் விஷ்ணுவையும் என்கிட்டே ஒப்படைச்சுடு... நான் அவங்களை வெச்சுகிட்டு இந்த இந்திய அரசு கிட்டே இன்னொரு தடவை பிசினஸ் பண்ணிடறேன்...''

''இது அநியாயம் ராபின்...''

மண்டி போட்டு தலைக்குப் பின்னால் கைகளைக் கோர்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த மூசா ஆட்களில் ஒருவன் குரல் கொடுக்க - ராபின் கோபமாய் பார் வையை உயர்த்தினான்.

''பேசினது யார்?''

பரட்டைத் தலையும் தாடி மீசையுமாய் இருந்த அந்த ஆள் தலைக்குப் பின்னால் கைகளைக் கோர்த்தபடி எழுந்து நின்றான்.

''நான்தான் ராபின்...! என்னோட பேர் ஷகீல். மூசாவோட இயக்கத்துல பத்து வருஷமாயிருக்கேன். மூசா ராஜான்னா நான் மந்திரி. என்னைக் கலந் தாலோசிக்காமே மூசா எதையும் பண்ண மாட்டான்.''

''சரி... இப்ப எதை அநியாயம்ன்னு சொன்னே?''

''மூசாவுக்கு ஒரு கோடி ரூபாய் தர்றதைத்தான் சொன்னேன்... நியாயப்படி அந்தப் பணம் எனக்குத் தான் வரணும். காரணம்... எல்லாமே நான் போட்டுக் கொடுத்த திட்டங்கள்.''

ராபின் மூசாவை ஏறிட்டான்.

''என்ன மூசா...! இந்த ஷகீல் சொல்வது உண் மையா?''

''பொய் ராபின்... பொய்...! எல்லாமே என்னோட மூளையில் உதித்த யோசனைகள்... அந்த ஷகீல் ஒரு துரும்பைக்கூட கிள்ளிப் போடலை... அவன் ஒரு உதவாக்கரை... துப்பாக்கியை கையில் பிடிச்சு சரியா சுடக்கூடத் தெரியாது...''

''என்ன சொன்னே...! எனக்கு சரியா துப்பாக்கியைப் பிடிக்கத் தெரியாதா...? உனக்குத் தான்டா தெரியாது...'' ஷகீல் ஆவேசமாய்க் கத்திக் கொண்டே மூசா மீது பாய்ந்தான்.

மூசா நிலை குலைந்து கீழே விழ, ஷகீலும் தடுமாறி சரிந்தான். இருவரும் கட்டிப் பிடித்து உருண்டார்கள். ஒருவரையொருவர் உதைத்துக் கொண்டார்கள்.

சண்டை பத்தே விநாடிகள்தான்!

பதினோராவது விநாடி - சண்டையிலிருந்து விலகி துள்ளி எழுந்த ஷகீலின் கையிலிருந்த, பென் டார்ச் போன்ற சிறிய துப்பாக்கியிலிருந்து, சீறிய இரண்டு தோட்டாக்கள், ஏ.கே. 47 துப்பாக்கிகளைப் பிடித்தபடி ராபினுக்கு இரண்டு பக்கங்களிலும் உட்கார்ந்திருந்த ராபினின் அடியாட்கள் இரண்டு பேர்களின் அடி வயிற் றில் பாய்ந்தது. கண்கள் நிலை குத்தி அதிர்ந்தவர்கள்

அப்படியே இரண்டாய் மடங்கி விழுந்தார்கள். பீறிட்ட ரத்தத்தில் நனைந்தார்கள்.

'இங்கே என்ன நடக்கிறது!' என்று ராபின் ஊகிப்ப தற்கும் மூசாவும் ஷகீலும் பாய்ந்து அந்த ஏ.கே. 47 ரக துப்பாக்கிகளை கைகளில் எடுத்துக் கொண்டார்கள். இருவரும் ஜோடியாய் நின்று -

ராபினைக் குறி பார்த்தார்கள்.



**2025-ம் ஆண்டு இந்தியா தண்ணீர் பஞ்சத்தில் கடுமையாக தத்தளிக்கப் போகிறது என்கிறார் டெல்லி ஐ.ஐ.டி. தொழில் நுட்பக் கல்லூரியில் பணிபுரியும் பயோ மெடிக்கல் என்ஜினீரிங் பேராசிரியர் கே.பி.ஷகாய்.**

ராபின் விதிர்விதிர்த்துப் போய், இருக்கையினின்றும் எழ, ஷகீல் சிரித்தான்.

மெல்லிய குரலில் சொன்னான்.

''இப்படிப்பட்ட ஒரு காட்சிக்காகத்தான் கடந்த நான்கைந்து நாட்களாய் காய்களை நகர்த்திக்கிட்டு இருந்தேன் ராபின்...! 'வீ ஹேட் இந்தியா' இயக்கத்தின் மூளையாய் செயல்பட்ட உன்னைப் பிடிக்க இன்னொரு தீவிரவாத இயக்கத்தின் தலைவனாய் இருந்த மூசாவோட உதவியைக் கேட்டபோது மூசா கொடுத்த ஒத்துழைப்பு மறுக்க முடியாதது. முள்ளை முள்ளால்தான் எடுக்கணும். வைரத்தை வைரத்தால்தான் அறுக்கணும்ன்னு பெரிய வங்க சொன்னதை நான் செயல்படுத்தியிருக்கேன்...''

ராபின் முகம் வியர்த்து வாய் குழறினான்.

"நீ... நீ...?"

"யார்ன்னு கேட்கறியா...? சொல்றேன்... இனி என்ன ஒளிவு மறைவு வேண்டியிருக்கு...? அதுதான் க்ளைமாக்ஸுக்கு வந்துட்டோமே...! நான் ஷகீல் கிடையாது..." சொன்னவன் பரட்டைத் தலை விக்கையும், தாடி மீசையையும், தோலின் நிறத்திலேயே இருந்த ரப்பர் மூக்கையும், காதுகளையும் ஒவ்வொன்றாய் அகற்ற -

விவேக்!

இப்போது மூசா சிரித்தான். "என்ன ராபின்...! அவர் யார்ன்னு தெரியுதா...? சென்னை க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக். நான்கைந்து நாட்களுக்கு முன்னால் சென்னையில் உன்னுடைய 'வீ ஹேட் இந்தியா' இயக்கத்தைச் சேர்ந்த ரூசோ என்பவன் சாலை விபத்தில் செத்துப் போனான். அவன் உயிர்க்குப் போராடிக்கிட்டு இருக்கும்போது அந்த வழியாய் காரில் வந்த டாக்டர் அனந்தகிருஷ்ணன் ரூசோவை தன்னோட காரிலேயே போட்டுகிட்டு அவரோட ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு வந்தார். ட்ரீட்மெண்ட் கொடுத்தார். காப்பாத்த முடியலை. ரூசோ இறந்ததும் அவனுடைய உடம்பை போஸ்ட் மார்ட்டம் செய்ய முயன்றபோதுதான், ரூசோவின் ஒரு கை செயற்கை என்பதும் அதில் ஹைடெக் முறையில் வெடிகுண்டுகள் செட் செய்யப்பட்டு இருப்பதும் தெரிஞ்சுது. உடனே டாக்டர் ஆனந்தகிருஷ்ணன் விவேக்கிற்கு தகவல் கொடுக்க அவர் வந்து பார்த்தார். ரூசோவின் இடது பக்க மார்பில் 'வீ ஹேட் இந்தியா' என்ற வாசகம் பொடிப் பொடியான எழுத்துக்களில் பச்சை குத்தப்பட்டு இருப்பதைப் பார்த்ததும் அவருக்கு அதிர்ச்சி.

உன்னை மாதிரியான ஒரு சர்வதேச தலைவனைப் பிடிக்க என்ன வழின்னு யோசனை பண்ணினார்...''

''விளைவு...?'' விவேக் தொடர்ந்தான். ''முள்ளை முள்ளால் எடுக்கத் திட்டம் போட்டேன். இரண்டு மாதங்களுக்கு முன்பு மூசா எனக்கு எழுதியிருந்த ஒரு கடிதத்தில் 'தான் தீவிரவாத நடவடிக்கைகளைக் கைவிட்டு திருந்தி வாழ விரும்புவதாகவும் ஆனால் போலீஸ் என்கௌண்ட்டரில் தன்னை சுட்டுக் கொல்ல நினைப்பதாகவும் குறிப்பிட்டிருந்தான். திருந்தி வாழ விரும்பும் மூசாவை இந்தத் திட்டத்துக்கு பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தேன். டெல்லிக்கு உடனடியாகப் புறப்பட்டு வந்து பயன்படுத்தியும் கொண்டேன். என்னோட திட்டம் இதுதான். உன்னோட 'வீ ஹேட் இந்தியா' இயக்கத்தின் பெயரை உபயோகப்படுத்தி இளம் விஞ்ஞானி சாய்தீப்பைக் கடத்தியது மூசாவின் ஆட்கள்தான். சாய்தீப்பின் அந்த செயற்கைத் தலை, அந்த சி.டி. காஸட், லெட்டர்கள் எல்லாமே என்னோட யோசனையில் பிறந்து மூசாவோட ஆட்களால் நிறைவேற்றப்பட்டவை. அதே போல் விஷ்ணு கடத்தப்பட்டதும் என்னோட திட்டத்தின் ஒரு பகுதிதான். இதெல்லாம் உன்னைக் கலவரப் படுத்தவும், உன்னை உன்னோட இருப்பிடத்திலிருந்து வெளியே வரச் செய்யவும் நாங்கள் மேற்கொண்ட வழிகள். உன்னோட இயக்கத்தின் பேரைப் பயன்படுத்தி மூசா செய்கிற இந்தக் காரியங்கள் எப்படியும் யார் மூலமாவது உன் காதுகளை எட்டும். உனக்குக் கோபம் வரும். அந்த கோபத்தின் காரணமாய் மூசாவைப் பார்க்க உன் ஆட்களோடு வருவாய் என எதிர்பார்த்தேன். என்னோட எதிர்பார்ப்பு வீண் போகலை... உன்னை மாதிரியான சர்வதேச ஹைடெக் தீவிரவாதிகளைக் களை

யெடுக்கணும்ன்னா போலீஸ் இது மாதிரியான ரிஸ்க்கையும் எடுக்க வேண்டியிருக்கு... இந்த திட்டம் எனக்கும் டெல்லியின் சில உயர் போலீஸ் அதிகாரிகளுக்கும் மட்டுமே தெரியும். உள்துறை அமைச்சர்க்குக் கூட இப்படியொரு திட்டம் இருப்பது தெரியாது. காரணம், இப்ப இருக்கிற அரசியல்வாதிகளில் பாதி பேர் தீவிர வாதிகளுக்கு நண்பர்களாகவே இருப்பதுதான்.''

ராபின் தான் பிடிபட்ட அதிர்ச்சியையும் மறந்து மெல்ல புன்னகைத்தான். ''விவேக்...! என்னோட கை விரலை வெச்சு என் கண்ணையே குத்தின முதல் ஆள் நீதான். உன்னைப் போலவே ஒவ்வொரு போலீஸ் ஆபீஸரும் இருந்துட்டா எங்களைப் போன்ற ஆட்கள் தலையெடுக்க முடியாது. ஒரு புத்திசாலித்தனமான எதிரிகிட்டே நான் தோத்துப் போனதில் எனக்கு சந்தோஷம்தான். எனக்கு ஒரு சின்ன ஆசை... அதை உன்னால நிறைவேத்தி வைக்க முடியுமா...?''

''சொல்லு...''

''உன் கையைப் பிடிச்சுக் குலுக்கணும்...''

''நான் கையைக் கொடுக்கணும்ன்னா ஒரு நிபந்தனை.''

''என்ன?''

''உன்னோட 'வீ ஹேட் இந்தியா' இயக்கத்தைப் பற்றிய எல்லா உண்மைகளையும் போலீஸ் விசாரணையின் போது சொல்லணும்.''

''கண்டிப்பா சொல்றேன்... வெளியில் இருக்கிற என்னுடைய ஆட்களையும் சரணடையச் சொல்றேன். போதுமா?''

விவேக் கையை நீட்டினான்.



# அது இது எது?

## 1

**பாம்புக்கும் கீரிக்கும் மட்டும் ஏன் பகை...?**

பாம்பிடம் எக்குத் தப்பாய் மாட்டிக் கொள்ளும் எத்தனையோ ஜீவராசிகள், அதனுடன், உயிர் தப்பிக்கும் ஆசையில் ஆக்ரோஷமாய் சண்டை யிடுகின்றன. எனினும் இத்தகைய ஜீவமரணப் போராட்டங்களில் இறுதியில் வெற்றி பெறுவது பாம்புகள் மட்டுமே. ஆனால், பாம்புகள் தோற்பது கீரியிடம் மட்டுமே! பாம்பு கடித்து கீரி இறந்த சம்பவம் அநேகமாய் இல்லை. கீரி மட்டும்

வெற்றிவாகை சூட என்ன காரணம்? இரண்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் காரணம் காத்திருக்கின்றது.

'ஓம் தத் புருஷா வித்மஹே... வக்ர துண்டாய தீமஹி... தந்நோ தந்தி ப்ரஸோதயாத்.'

- விநாயகர்க்குரிய காயத்ரி மந்திரத்தை சொல்லி விட்டு பூஜை அறையினின்றும் வெளிப்பட்டாள் குமுதா.

தாழ்வார அறையில் உட்கார்ந்து, எதிர் வீட்டிலிருந்து வாங்கி வந்த ஓஸி பேப்பரை வரி விடாமல் படித்துக் கொண்டிருந்த அவளுடைய அப்பா ரங்கநாதன் குரல் கொடுத்தார்.

"அம்மா... குமுதா..."

"என்னப்பா...?"

"சர்க்கரை ஜாஸ்தியாய் போட்டு ஒரு வாய் காப்பி குடேன்..."

"அக்கா... அப்பாவுக்கு காப்பி குடுக்காதே... காலையிலிருந்து இது மூணாவது காப்பி..." கல்லூரிக்குப் புறப்பட்டுப் போகத் தயாராய் இருந்த முதல் தங்கை ஹேமா எதிர்ப்புக் குரல் கொடுத்தாள்.

ரங்கநாதன் உடனே பதில் மனு தாக்கல் செய்தார். "அம்மா! ஹேமா பொய் சொல்றா...! நான் காப்பி கேட்கிறது ரெண்டாவது தடவை. முதல் தடவை காப்பி கொடுத்தப்ப அரை டம்ளர்தான் இருந்துச்சு... கேட்டதுக்கு பால் இல்லைன்னு சொல்லிட்டா."

குமுதா, தங்கை ஹேமாவை ஒரு கோபப் பார்வை பார்த்தாள். "ஏன்டி! அப்பாவுக்கு அரை டம்ளர் காப்பி தான் கொடுத்தியாமே?"

''அய்யோ... அக்கா...! அப்பா பொய் சொல்றார். உனக்குத்தான் அப்பாவைப் பத்தித் தெரியுமே...? காலையில் ஏழு மணியிலிருந்து அதே இடத்துலதான் உட்கார்ந்துட்டு இருக்கார். எதிர் வீட்லயிருந்து தின மலரையும், பக்கத்து வீட்ல இருந்து தினத்தந்தியையும் வாங்கி ஒரு வரி விடாமே படிச்சிட்டார். அரை டம்ளர் காப்பி கொடுத்தா அப்பா ஒத்துக்குவாரா...? இப்ப அவர் அடி போடறது மூணாவது காப்பிக்கு... நான் சொல்றது நிஜம்.''

இரண்டு பேரில் யார் சொல்வது உண்மை என்று குமுதா திணறிக் கொண்டு இருக்கும் போதே, சமைய லறையிலிருந்து [illegible]டாவது தங்கை ஜமுனா வெளிப் பட்டாள். அவள் [illegible]ாப்பி டம்ளர். படபடவென்று பொரிந்தாள்.

''அக்கா...! அப்பாவைப் பத்தித்தான் உனக்குத் தெரியுமே? அவர் சந்தோஷமான மூடில் இருந்தா ஒரு மணி நேரத்துக்குள்ளே மூணு கப் காப்பி சாப்பிடுவார். இன்னிக்கும் அதுதான் நடந்துட்டு இருக்கு... நான் போய் அப்பாவுக்கு காப்பியைக் கொடுத்துட்டு வர்றேன். யாரும் சண்டை போட்டுக்க வேண்டாம்.''

''அப்பா இன்னிக்கு சந்தோஷமாய் இருக்கார்ன்னு உனக்கு எப்படித் தெரியும்?''

''இன்னிக்கு... உனக்கு 'ரெய்ன் ட்ராப் சாஃப்ட்வேர் கம்பெனி'யில் இண்ட்டர்வ்யூ! இல்லையா?''

''ஆமா...''

''அதுதான் சந்தோஷம்.''

''இண்ட்டர்வ்யூதானே...? - வேலை கிடைக் கலையே?''

''கண்டிப்பாய்க் கிடைச்சுடும்ன்னு அப்பா சொன் னார்.''

குமுதா பெருமூச்சு விட்டாள். ''கொண்டா காப்பியை... நான் போய்க் கொடுத்துட்டு அப்பாகிட்டே பேசிட்டு வர்றேன்.''

''அக்கா...! நீ அப்பாகிட்டே போய்ப் பேசு... ஆனா அவரோட நம்பிக்கையை 'பஞ்ச்சர்' பண்ற மாதிரி பேசிடாதே! அவர் எக்கச்சக்க நம்பிக்கையோடு இருக் கார்.''

குமுதா காப்பி டம்ளரோடு - [illegible]ா திண்ணையில் உட்கார்ந்து இருந்த அப்பா[illegible]ந்தனை நோக்கிப் போனாள்.

பேப்பருக்குள் தலையை விட்டிருந்த அவர், வளை யோசை கேட்டு நிமிர்ந்தார். ''நீயே வந்துட்டியாம்மா?'' மலர்ந்து போனவராய் பத்திரிகையை மடித்தார். மகள் குமுதா நீட்டிய காப்பி டம்ளரை ஏதோ ஒரு பரிசுக் கோப்பையைப் போல் பரவசமாய் வாங்கிக் கொண்டார்.

''அட...! நீ ஏம்மா காப்பி கொண்டு வந்தே? ஹேமா, ஜமுனா இல்லையா?''

''அவங்க காலேஜ்க்கு கிளம்பிட்டிருக்காங்கப்பா...! அதான் நான் கொண்டு வந்தேன்.''

''உனக்கு இண்ட்டர்வ்யூ எத்தனை மணிக்கு அம்மா?''

''பதினோரு மணிக்கு...''

''அப்படீன்னா நீ வீட்டை விட்டுப் பத்து மணிக்கெல் லாம் கிளம்பிடணும்.''

‘‘ஆமாப்பா...’’

‘‘உனக்கு இந்த வேலை கண்டிப்பாய் கிடைக்கும்ன்னு என்னோட மனசுக்குப் படுதும்மா.’’

‘‘பார்க்கலாம்பா...’’

‘‘ஏம்மா அப்படிச் சொல்றே...?’’

‘‘அப்பா! ‘ரெய்ன் ட்ராப்’ கம்பெனி ஒரு மல்ட்டி நேஷனல் கம்பெனி. நிறைய பேர் அப்ளை பண்ணி யிருப்பாங்க. நான் வெறும் எம்.எஸ்.ஸி. கம்ப்யூட்டர் சயின்ஸ் க்ராஜ்வேட்தான்! என்னைக் காட்டிலும் எஜு கேஷனல் க்வாலிஃபிகேஷன் அதிகம் உள்ளவங்களும் இண்ட்டர்வ்யூவில் கலந்துக்குவாங்க.’’

‘‘கலந்துக்கட்டுமே...! நீ அட்டெண்ட் பண்ணப் போற கடைசி இண்ட்டர்வ்யூ இதுதான். உனக்குக் கண்டிப்பாய் வேலை கிடைக்கும். நான் இப்படி ஸ்ட்ராங் காய் அடிச்சுச் சொல்றதுக்குக் காரணம் இருக்கும்மா.’’

‘‘என்ன காரணம்...?’’

‘‘உன்னோட ஜாதகப்படி போன மாசமே உனக்கு குரு திசை ஆரம்பமாயிடுச்சு. குரு உனக்கு உச்சம். குரு கிரகம் உச்சமாய் இருந்தா அவனுடைய திசை நடக்கும்போது கண்டிப்பாய் நல்ல வேலையில் உட்கார வெச்சுடு வான்.’’

குமுதா சிரித்தாள் வெறுமையாய்.

‘‘ஏம்மா... சிரிக்கிறே...?’’

‘‘உங்களுக்கு இந்த ஜாதகம். ஜோதிடம் மேலே இன்னமும் நம்பிக்கை இருக்காப்பா?’’

‘‘என்னம்மா... இப்படிக் கேட்டுட்டே...?’’

‘‘கேட்காமே என்னப்பா பண்றது...? ரெண்டு வருஷத்துக்கு முந்தி அம்மாவுக்கு உடம்பு முடியாமே ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணினோம். நல்ல ட்ரீட்மெண்ட் கொடுத்தோம். ட்ரீட்மெண்ட் கொடுத்துட்டு இருக்கும் போதே, நீங்க வியாசர்பாடியில் இருக்கிற ஒரு பிரபலமான ஜோஸ்யரைப் போய்ப் பார்த்தீங்க. அம்மாவோட உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. அவங்க 90 வயது வரை இருப்பாங்கன்னு சொன்னார். ஆனா அடுத்த நாளே அம்மா இறந்துட்டாங்க. ஜோஸ்யம் உண்மைன்னா அம்மா உயிரோடு இருந்து இருக்கணுமே?’’

ரங்கநாதன் ஒரு வாய் காப்பியைத் தொண்டைக்கு அனுப்பிவிட்டு பெருமூச்சோடு பேச்சைத் தொடர்ந்தார்.

‘‘இதோ பாரம்மா...! ஒருத்தரோட மரணத்தை ஜோதிடத்தால கணிக்க முடியாது. அது எப்ப வரும். எப்படி வரும்ன்னு யாருக்கும் தெரியாது. அது கடவுளுக்கு மட்டும்தான் தெரியும். ஒருத்தரோட மரணத் தேதி பற்றி அந்த ஜோதிடர்க்கு தெரிஞ்சிருந்தாலும் அதை அவர் பட்டவர்த்தனமாய் வெளியே சொல்ல மாட்டார். உன் அம்மாவோட விஷயத்திலும் அப்படித்தான் நடந்து இருக்கணும்.’’

‘‘அப்பா! நான் ஒண்ணு சொன்னா நீங்க தப்பா நினைச்சுக்க மாட்டீங்களே...?’’

‘‘சொல்லும்மா...’’

‘‘அம்மா இவ்வளவு சீக்கிரத்துல நம்மையெல்லாம் விட்டுட்டுப் போக என்ன காரணம் தெரியுமா...?’’

‘‘என்ன...?’’

''எங்க மூணு பேர்க்கும் இந்த ஜென்மத்துல கல் யாணம் நடக்குமா என்கிற பயம்தான்...''

''உண்மைதாம்மா...! வீட்ல ஒரு கிராம் தங்கம் கிடையாது. ஒரு ஆயிரம் ரூபாய் நோட்டு கிடையாது. மூணு பொண்ணுகளையும் எப்படி கரையேத்தப் போறோம்'ன்னு புலம்பிட்டே இருப்பா. எத்தனையோ ராத்திரிகளை அவ தூக்கம் இல்லாமே கழிச்சிருக்கா. 'நம்ம பொண்ணுங்க படிச்சிருக்காங்க. அவங்க வேலைக் குப் போக ஆரம்பிச்சுட்டா வரன்கள் வரும். கல்யாண மும் நடக்கும்'ன்னு நான் எவ்வளவோ தைரியம் சொல்லியிருக்கேன். அதையெல்லாம் அவ நம்பலை. போய்ச் சேர்ந்துட்டா... ஆனா எனக்கு நம்பிக்கை இருக் கம்மா... உனக்கும் சரி; உன்னோட தங்கைகளுக்கும் சரி நல்ல வரன்களோடு சீரும் சிறப்புமாய் கல்யாணம் நடக்கும்.''

''பார்க்கலாம்பா...''

''இப்படி நம்பிக்கை இல்லாமே பேசாதேம்மா! இன்னிக்கு நீ அட்டெண்ட் பண்ணப் போற, இந்த இண்ட்டர்வ்யூ உனக்கு ஒரு பிரகாசமான எதிர்காலத்தை உருவாக்கிக் கொடுக்கும். சாயந்தரம் நீ வர்றப்ப ஒரு ஸ்வீட் பாக்ஸோடு வருவே.''

''அக்கா! அப்பா வர வர ஒரு ஜோதிடராவே மாறிட்டு வர்றார். பேசாமே வாசல்ல ஒரு போர்டு மாட்டிடலாம்.'' மார்பில் அணைத்த புத்தகங்களோடு ஹேமாவும் ஜமுனாவும் வீட்டின் உள்ளறையிலிருந்து வெளிப்பட் டார்கள். இப்போது புறப்பட்டால்தான் இரண்டு பஸ் பிடித்து வானகரத்தில் இருக்கிற காலேஜ்க்குப் போய்ச் சேர முடியும்.

குமுதா கேட்டாள்.

''பஸ்ஸுக்கு சில்லரை எடுத்துக்கிட்டீங்களா?''

''ம்... எடுத்தாச்சு...''

''மத்தியான லஞ்ச் பாக்ஸ்?''

''அதை மறப்போமா...?''

''சரி...! காலேஜ் முடிஞ்சதும் லேட் பண்ணாமே வீடு வந்து சேரணும். லேட்டாய் வந்துட்டு - அவளைப் பார்க்கப் போனேன். இவளைப் பார்க்கப் போனேன்னு சொல்லக்கூடாது.''

''அய்யோ அக்கா...! ஏதோ ஒரு நாள் லேட்டாய் வந்துட்டோம். அதையே சொல்லி சொல்லிக் காட் டாதே. நீ இண்ட்டர்வ்யூவை முடிச்சுட்டு வர்றதுக் குள்ளே நாங்க ரெண்டு பேரும் வீட்ல இருப்போம். போதுமா?''

''போதும்... போதும்...''

''அக்கா...! விஷ்... யூ... ஆல்... த... பெஸ்ட்...! அப்பா சொன்ன மாதிரி உனக்கு வேலை கிடைக்கட்டும். வரும்போது கால் கிலோ பாதாம் அல்வா வாங்கிட்டு வந்துடு.''

''ம்...'' வலுக்கட்டாயமாய் புன்னகைத்துத் தலையாட் டினாள் குமுதா.

ஹேமாவும், ஜமுனாவும் கிளம்பிப் போனதும் ரங்க நாதனிடம் திரும்பினாள். ''அப்பா...! நானும் இன்னும் பத்து நிமிஷத்துக்குள்ளே கிளம்பிடுவேன். நீங்க குளிக்கப் போங்க...''

''இதோ...!'' ரங்கநாதன் எழுந்து பேப்பரை மடித்து வைத்துவிட்டு வீட்டின் பின்புறத்தை நோக்கிப் போனார்.

குமுதா காலியான காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தாள். அப்பா குளித்துவிட்டு வருவதற்குள் தோசை வார்த்து வைத்து விட்டு இண்டட்டர்வ்யூக்குப் புறப்படத் தயாராக வேண்டும்.

தோசைக் கல்லை அடுப்பில் ஏற்றினாள். மாவைக் கரண்டியால் கலக்கிக் கொண்டிருந்த போது வாசலில் குரல் கேட்டது.

''அம்மா...! பூ...!

குமுதா வெளியே வந்தாள்.

அந்தப் பூக்காரி வாசலில் தெரிந்தாள். ஸ்நேகமாய்ப் புன்னகைத்தாள். ''பூ வேணுமாம்மா...?''

''மல்லி... முழம் எவ்வளவு...?''

''எதுக்கம்மா முழம்... இன்னிக்கு பூ ரொம்பவும் சீப்பு. இந்த மல்லிப் பந்துல பத்து முழம் இருக்கு. எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு ஒரு முப்பது ரூபா குடும்மா... இன்னிக்கு வெளிக்கிழமை. சாமி படங்களுக்கு எல்லாம் போடலாம்.''

''இருபது ரூபா தர்றேன். கொடுக்கிறதாய் இருந்தா சொல்லு. இல்லேன்னா போய்ட்டே இரு...''

''சரி... குடும்மா... காலையில மொதல் வியாபாரம்'' கூடையில் வைத்திருந்த அந்த மல்லிப்பூப் பந்தை நீட்டினாள் பூக்காரி. அதை வாங்கிக் கொண்ட குமுதா சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுக் கேட்டாள்.

''பத்து முழம் சரியாய் இருக்குமா...?''

''வேணும்ன்னா அளந்து பாருங்கம்மா...''

குமுதா பூப்பந்தை மெல்லப் பிரித்தாள்.

இரண்டு சுற்றுக்களைப் பிரித்ததுமே...

உள்ளே -

அந்த பிஸ்டல் - சாம்பல் நிற உடம்போடு தெரிந்தது. புன்முறுவலோடு நிமிர்ந்தாள். அவள் உதடுகளிலும் ஒரு சிரிப்பு.

''என்னம்மா... பத்து முழம் சரியாய் இருக்கா?''

''ம்... சரியாய் இருக்கு...''

குமுதா மறுபடியும் ஒரு தடவை சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு பூப்பந்தோடு உள்ளே போனாள்.

## 2

பாம்புக்கும், கீரிக்கும் சண்டை வந்தால், கீரி மட்டும் வெற்றி பெற்று கோப்பையைத் தட்டிக் கொண்டு போவதற்குக் காரணம், பாம்பின் விஷம் அதைப் பாதிக்காததுதான். எந்த ஒரு விலங்கையும், பாம்பு கடித்து விட்டால் ரத்த ஓட்டம் உறைந்து நரம்பு மண்டலம் செயல் இழந்து போய் உடனே மரணம்தான். ஆனால், கீரிக்கு அந்த மரண பயம் கிடையாது. காரணம், கீரியின் நாக்கில் உள்ள சொர சொரப்பான பகுதியில் 'ஆன்டி ஸ்நேக் வெனம்' என்ற மருத்துவ குணம் கொண்ட

எச்சில் சுரக்கிறது. இந்த எச்சிலின் வீரியம் கீரியின் ரத்த ஓட்டத்திலும் இருப்பதால் பாம்பின் விஷம் ரத்தத்தை உறைய வைப்பது இல்லை. இது தவிர கீரிகள் பொதுவாகவே புல் பூண்டுகளுக்கு மத்தியில் மறைந்து இருக்கும் ஒரு மூலிகைத் தாவரமான 'மங்கூஸ் வேயில்' எனப்படும் சித்தர் காலத்துச் செடியைக் கண்டுபிடித்து, அதனுடைய வேரை ருசி பார்க்கிறது. அந்த வேரில் நஞ்சு முறிக்கும் வஸ்து இருப்பதே கீரியைப் பாம்பின் விஷம் தாக்காமல் இருப்பதற்குக் காரணம்.

சென்னையின் பழைய மகாபலிபுரம் ரோடு.

நேரம். நள்ளிரவைத் தாண்டிய 1.05.

ரோட்டை விட்டு நூறு மீட்டர் தூரம் தள்ளியிருந்த அந்த 'கெட் வெல்' ஹாஸ்பிட்டலின் திறந்திருந்த காம்பௌண்ட் கேட்டின் வழியாக வேகமாய் நுழைந்த கார் போர்டிகோவில் போய் முகப்பு விளக்குகளை அணைத்துக் கொண்டு நிசப்தமானது.

ஒரு நடுத்தர வயது நபரும், அவருடைய மனைவியும் பதட்டத்தோடு இறங்கி காஸ்வால்ட்டி வார்டில் இருந்த கௌண்ட்டரை நோக்கி ஓடினார்கள். கௌண்ட்டர்க்குள் உட்கார்ந்து புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்த அந்த நர்ஸ் எழுந்து நின்றாள். அந்த நபர் பதறினார்.

''அம்மா...! எம் பொண்ணு பாத்ரூம்ல வழுக்கி விழுந்து தலையில் அடிபட்டு மயக்கமாயிட்டா... உடனே அட்மிட் பண்ணணும்.''

அந்த நர்ஸ் உடனே ட்யூட்டி டாக்டர்க்கு போன் செய்து பேச அடுத்த இரண்டாவது நிமிடம் ஸ்ட்ரெச்சர் வந்தது.

காரின் பின் சீட்டிலிருந்து அந்த இளம் பெண் தலையில் ரத்தக் காயத்தோடு கீழே இறக்கப்பட்டாள். அணிந்து இருந்த சேலையிலும் ரத்தம்.

ஐ.ஸி.யூவை நோக்கி ஸ்ட்ரெச்சர் விரைய - நர்ஸ் எண்ட்ரி பாரத்தை எடுத்து வைத்துக் கொண்டு அந்த நபரிடம் கேட்டாள்.

"பேஷண்ட்டோட பேரு... என்ன...?"

"சூடாமணி..."

"வயசு...?"

"இருபத்தஞ்சு..."

"நீங்க அந்தப் பொண்ணோட அப்பாவா?"

"ஆமா..."

"பேரு...?"

"ஜானகிராமன்..."

"பேஷண்ட் சூடாமணிக்கு என்ன நடந்தது?"

"எம் பொண்ணுக்கு ரெண்டு நாளாவே வைரஸ் ஃபீவர். டாக்டர் சபாபதி கிட்டே காட்டினோம். அவர் மாத்திரை எழுதிக் கொடுத்தார். காய்ச்சல் குறைஞ்ச பாடில்லை. ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி தூங்கிக்கிட்டிருந்த எங்களை எழுப்பாமே தானே எந்திரிச்சு பாத்ரூமுக்குப் போயிருக்கா. எனக்கும் என்னோட ஒய்ஃபுக்கும் தெரியலை. தடால்ன்னு ஏதோ சத்தம் கேட்டு எந்திரிச்சோம். பெட்ல எம்பொண்ணு சூடாமணி

இல்லாததைப் பார்த்து, அதிர்ச்சியடைஞ்சோம். பாத்ரூம்ல விளக்கு எரியறதைப் பார்த்துட்டு ஓடிப்போய் பார்த்தோம். வாஷ்பேசினுக்கு பக்கத்துல சூடாமணி சுருண்டு விழுந்து இருந்தா. நெத்தியில ரத்தக் காயம் தெரிஞ்சது. பேச்சு மூச்சில்லை. அதான் உடனே இங்கே கொண்டு வந்தோம்.

‘‘உங்க வீட்டு அட்ரஸ்...?’’

‘‘நெம்பர் 717. நைன்த் க்ராஸ் ஸ்ட்ரீட்... மாமல்லன் நகர், முட்டுக்காடு.’’

ஜானகிராமன் சொல்லிக் கொண்டு இருக்கும்போதே, ஒரு நர்ஸ் பக்கத்தில் வந்து நின்றாள்.

‘‘ஸார்! உங்களை ட்யூட்டி டாக்டர் கூப்பிட்டார்.’’

ஜானகிராமன் எழுந்து அந்த நர்ஸைப் பின் தொடர்ந்து போனார். ஒரு நிமிஷ நடையில் ஐ.ஸி. யூனிட் வந்தது.

இருவரும் உள்ளே நுழைந்தார்கள்.

சூடாமணி கட்டிலில் படுக்க வைக்கப்பட்டு இருந்தாள். அவளுடைய நெற்றிக் காயத்தை இப்போது ஒரு பேண்டேஜ் அடை காத்திருந்தது. அவளுடைய நாடித் துடிப்பையும், இதயத் துடிப்பையும் மானிட்டரில் பார்த்துக் கொண்டிருந்த ட்யூட்டி டாக்டர் மகேந்திரன், ஜானகிராமனிடம் திரும்பினார்.

‘‘சரியான நேரத்துக்கு கொண்டு வந்துட்டீங்க. பட்... க்ரிட்டிகல் ஸ்டேஜ். தலையோட முன் பக்கத்துல ரத்தக் காயம் தெரிந்தாலும் பின்பக்கமும் அடிபட்டு இருக்கு. ஸ்கேன் எடுத்துப் பார்த்தாத்தான் மூளையோட செல்களுக்கு ஏதாவது பாதிப்பு ஏற்பட்டிருக்கான்னு சொல்ல

முடியும். பணம் நிறைய செலவாகும். பரவாயில் லையா...?''

''பரவாயில்லை டாக்டர்... பணத்துக்குப் பிரச்னை யில்லை. எம்பொண்ணை எப்படியாவது காப்பாத்திக் குடுத்துட்டா போதும்.''

''நான் ட்யூட்டி டாக்டர்தான். சீஃப் டாக்டர் வராக சாமிக்கு போன் பண்ணியிருக்கேன். இன்னும் ஒரு அரை மணி நேரத்துக்குள்ளே வந்துடுவார். அதுக்குள்ளே ஸ்கேன் ரிப்போர்ட்டை ரெடி பண்ணணும்.''

''ஸ்கேனுக்கு எவ்வளவு பணம் கட்டணும் டாக்டர்?''

''மொதல்ல ஒரு இனிஷியல் அமௌண்ட் பத்தா யிரம் கட்டுங்க. தேவைப்பட்டா பின்னாடி கட்டிக்கலாம்.''

''டாக்டர்...! எம் பொண்ணுக்கு ஒண்ணும் ஆயி டாதே...?''

''உங்க பேர் என்ன?''

''ஜானகிராமன்.''

''இதோ பாருங்க ஜானகிராமன்...! நான் மொதல்ல சொன்ன மாதிரி நீங்க சரியான நேரத்துக்கு உங்க மகளை ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு வந்துட்டீங்க. பட் ஸ்கேன் ரிப்போர்ட்டைப் பார்த்த பிறகுதான் சீஃப் டாக்டர் என்ன பண்ணனும்னு சொல்வார். இந்த சமயத்துல உங்களுக்கு வேண்டியது தைரியம். இவ உங்களுக்கு ஒரே பொண்ணா?''

''ஆமா டாக்டர்...! எம்.பி.ஏ. படிச்சிருக்கா. கல்யாணப் பேச்சை போன வாரம்தான் எடுத்தோம். ஒரு நல்ல வரன் வந்தது. வெளிநாட்டு வரன். ப்ரோக்கர் மூலமாய் பேசிட்டிருந்தோம். அதுக்குள்ளே இப்படி ஒரு சம்பவம்.''

''கவலைப்படாதீங்க... எல்லாமே நல்லபடியாய் முடியும். கடவுள்கிட்டே எல்லாப் பொறுப்பையும் ஒப்படைச்சுட்டு நாம நம்ம கடமையைப் பண்ணு வோம்.''

ஜானகிராமன் நைந்துபோன துணியாய், தளர்ந்து போய் - கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். வெளியே காத்திருந்த அவருடைய மனைவி இரண்டு தோள்களையும் பிடித்துக் கொண்டு அவரை உலுக்கி னாள்.

''என்னங்க... நம்ம பொண்ணு மயக்கம் தெளிஞ்சு கண்ணு முழிச்சுப் பார்த்தாளா...?''

''இல்ல கனகம்...! சூடாமணிக்கு தலையில் அடிபட்டு இருக்கிறதால ஸ்கேன் எடுத்துப் பார்க்கணுமாம். அதுக்கப் புறம்தான் எதுவும் சொல்ல முடியுமாம். நீ அழாமே தைரிய மாய் அப்படிப்போய் உட்கார். நான் போய் ஸ்கேன் எடுக்க பணம் கட்டிட்டு வர்றேன்.''

''அம்மா...! கற்பகாம்பா...! எம்பொண்ணைக் காப் பாத்தம்மா... அவளுக்கு ஒண்ணும் ஆயிடக் கூடாது...!'' கனகம் புலம்பிக் கொண்டே ஐ.ஸி. யூனிட்டின் ரிசப்ஷ னில் இருந்த நாற்காலியில் போய் உட்கார்ந்தாள்.

அடுத்த பத்து நிமிஷ நேரத்திற்குள், ஜானகிராமன் பணத்தைக் கட்டிவிட்டு வியர்த்த முகமாய் மனை விக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். அவருடைய தோள் மீது சாய்ந்து கொண்டாள் கனகம்.

''என்னங்க...! நம்ம பொண்ணுக்கு ஒண்ணும் ஆயிடாதே?''

"தைரியமாய் இரு கனகம்...! நாம யார்க்கும் எந்த ஒரு கெடுதலையும் பண்ணலை. நம்ம பொண்ணு நமக்கு உயிரோடு கிடைப்பா... இன்னும் கொஞ்ச நேரத்துல சீ்ஃப் டாக்டர் வராகசாமி வந்துடுவார். அவர் எப்படியும் நம்ம பொண்ணைக் காப்பாத்திக் கொடுத்துடுவார்."

"எனக்கென்னமோ பயமாய் இருக்குங்க..."

"ஒண்ணும் பயப்படாதே..." மனைவியின் தோளைத் தட்டிக் கொடுத்தார் ஜானகிராமன்.

இருவரும், அந்த அரையிருட்டு ரிசப்ஷன் அறையில் அப்படியே அசையாமல் உட்கார்ந்து, விநாடிகளை எண்ணிக் கொண்டு இருந்தார்கள்.

கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் கழித்து நர்ஸ் ஒருத்தி அவர்களுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள். சலனமே இல்லாத குரலில் சொன்னாள்.

"உங்களை சீஃப் டாக்டர் கூப்பிட்டார். போய்ப் பாருங்க..."

"எம் பொண்ணுக்கு எப்படியிருக்கு சிஸ்டர்?" கனகம் பரபரத்தாள்.

"டாக்டர் சொல்லுவார். நேரா போய் ரைட்ல திரும்புங்க. சீஃப் டாக்டரோட ரூம் வரும்." நர்ஸ் சொல்லி விட்டு நடக்க ஆரம்பித்துவிட, ஜானகிராமனும் கனகமும் அவசர நடை போட்டு வராந்தாவைக் கடந்து வலது பக்கம் திரும்பி, எதிர்பட்ட அந்த அறைக்குள் நுழைந் தார்கள்.

அறையில் சீஃப் டாக்டர் வராகசாமியும், ட்யூட்டி டாக்டர் மகேந்திரனும் எதிர் எதிரே உட்கார்ந்தபடி ஸ்கேன்

ரிப்போர்ட்களைப் பார்த்துக் கொண்டு இருந்தார்கள். நல்ல சிவப்பில் ஆறடி உயரம் காட்டிய டாக்டர் வராக சாமியின் கண்களில், தூக்கம் கெட்டுப்போன களைப்பு தெரிந்தது.

ட்யூட்டி டாக்டர் சொன்னார்.

''அந்தப் பொண்ணு சூடாமணியோட பேரண்ட்ஸ் இவங்கதான் டாக்டர்.''

வராகசாமி தனக்கு முன்பாய் இருந்த காலியான நாற்காலிகளைக் காட்டினார். ''உட்காருங்க...!''

ஜானகிராமனும் கனகமும் உட்கார்ந்தார்கள். உட்கார உட்காரவே கனகம் அழுகையில் வெடித்தாள்.

''டாக்டர்! எம்... பொண்ணுக்கு...?''

''இதோ பாரம்மா... பொண்ணைப் பெத்தவங்க நீங்க. உங்களோட உணர்ச்சிகளை என்னால புரிஞ்சுக்க முடியுது. இருந்தாலும் ஒரு உண்மையை நீங்க தெரிஞ் சுக்கணும். நம்ம வாழ்க்கையில் நடக்கிற பெரும்பாலான சம்பவங்கள் நாம் எதிர்பார்க்காத சம்பவங்கள். அதுல சில சம்பவங்கள் அதிர்ச்சியைத் தரலாம். சில சம்பவங்கள் மகிழ்ச்சியைத் தரலாம். ரெண்டையுமே நாம் சமமாய் எடுத்துக்கிட்டா வாழ்க்கையில் நிம்மதியாய் இருக்க லாம்.''

''டாக்டர்! நீங்க பேசறதைப் பார்த்தா எனக்கு பயம் மாயிருக்கு. எம்பொண்ணுக்கு எந்தப் பிரச்சனையும் இல்லையே...?''

டாக்டர் வராகசாமி மௌனம் காத்தார்.

''என்ன டாக்டர்! பேசாமே இருக்கீங்க...?''

“உங்க டாட்டர் சூடாமணிக்கு எந்த ஒரு பிரச்னையும் இல்லைன்னு சொல்றதுக்கு எனக்கு விருப்பம்தான்ம்மா. ஆனா, ஸ்கேன் ரிப்போர்ட் அப்படிச் சொல்ல லையே...?”

“டா...க்...டர்...”

“மனசைத் தேத்திக்கங்கம்மா... உங்க பொண்ணோட தலையின் பின்பக்கம் பலமான அடிபட்டு - அந்த அடி, மூளையோட செல்களையும் பாதிச்சிருக்கு. மூளையோட செல்கள் பாதிக்கப்பட்டதால் நினைவு திரும்பறது ரொம்பவும் கஷ்டம். சீரியஸான கோமா ஸ்டேஜ். இதை மெடிக்கல் டெர்ம்ஸ்ல சொல்லணும்ன்னா ப்ரெய்ன் டெத்.”

டாக்டர் வராகசாமி சொல்லச் சொல்ல கனகம், விழிகள் திகைத்து அப்படியே உறைந்து போக - ஜானகிராமன் கண்களில் நீரோடு கையெடுத்துக் கும்பிட் டார்.

“டாக்டர்...! பணம் எவ்வளவு செலவானாலும் பரவா யில்லை. எம்பொண்ணை எப்படியாவது காப்பாத்திக் குடுங்க டாக்டர்.”

மெல்ல வராகசாமி சிரித்தார். “பணத்துக்கு அப்படிப் பட்ட சக்தி இருந்தா உலகத்தில் இருக்கிற எந்தப் பணக் காரனும் சாக மாட்டானே...?”

“டாக்டர்...! நான் ஒரு சஜஷன் சொன்னா நீங்க தப்பாய் நினைச்சுக்க மாட்டீங்களே?”

“நோ... நோ... தாராளமாய் சொல்லலாம்.”

“நான் உங்களையோ, உங்க ஹாஸ்பிட்டலையோ குறைச்சு மதிப்பிடறதாய் நினைக்கக் கூடாது.

எம்பொண்ணை வேற ஏதாவது ஒரு ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு போய் ட்ரீட்மெண்ட் எடுத்தா உயிர் பிழைக்க வாய்ப்பு இருக்கா?''

''எந்த ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு போகலாம்ன்னு நினைக்கறீங்க?''

''மும்பையில் இருக்கிற 'ஐஸ்லோக்' ஹாஸ்பிட்டல்.''

''நீங்க சிங்கப்பூரில் இருக்கிற 'ஸ்பீட் ரெக்கவரி' ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு போனாலும் சரி அங்கே இருக்கிற டாக்டர்ஸும் நான் என்ன சொன்னேனோ அதைத்தான் சொல்லப் போறாங்க. பட் உங்க விருப் பத்தை நான் கெடுக்க விரும்பலை. மும்பையில் இருக் கிற ஐஸ்லோக் ஹாஸ்பிட்டல் மெடிக்கலி அட்வான்ஸ்ட். உங்க டாட்டரை அங்கே கொண்டு போய் ட்ரீட்மெண்ட் எடுங்க. உயிர் பிழைக்க வாய்ப்பு இருந்தால் என்னை விட சந்தோஷப்படறவங்க வேற யாரும் இருக்க முடி யாது.''

''தேங்க்யூ டாக்டர்...!'' சொன்ன ஜானகிராமன் தயக்கமான குரலில் கேட்டார். ''ப்ளைட்ல ஜர்னி பண்ணலாமா டாக்டர்?''

''தாராளமாய்...! உங்க டாட்டர்க்கு மூளைதான் செயலிழந்து போயிருக்கே தவிர இருதயம், சிறுநீரகம், நுரையீரல் எல்லாமே நல்ல நிலையில் இருக்கு. அதிலும் ஹார்ட் நல்ல ஆரோக்கியம்... நீங்க நாளைக்கு ஃப்ளைட்ல கிளம்பறதாய் இருந்தா சொல்லுங்க. அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளை ஹாஸ்பிட்டல் நிர்வாகம் பண்ணிக் கொடுக்கும்.''

டாக்டர் வராகசாமி சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்த நர்ஸ் உள்ளே வந்தாள். கையில் ஒரு கம்ப்யூட்டர் தாள்.

''என்ன...?''

''பேஷண்ட் சூடாமணியோட ப்ளட் ரிப்போர்ட் டாக்டர்.''

வாங்கிப் பார்த்தார்.

ரிப்போர்ட்டின் மையப் பகுதிக்கு வந்ததும் ஒரு சின்ன திடுக்கிடலுக்கு உட்பட்டு டாக்டர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

# 3

**முள்ளம்பன்றியின் முட்கள் ஆபத்தானதா?**

முள்ளம்பன்றியின் ஸ்பெஷாலிடி அதன் முட்கள்தான். வளர வளர தடித்து இதன் ரோமங்கள் முட்களாய் மாறி விடுகின்றன. அரையடி முதல் ஒரு அடி நீளம் வரை இருக்கும் இந்த முட்கள் மொத்த எண்ணிக்கையில் 30 ஆயிரத்தைக் கூடத் தாண்டும். இந்த முட்களின் நுனி கொக்கி போல் வளைந்து ஒவ்வொரு முள்ளும் ஒரு ஆயுதம் போல் இருக்கும். ஆபத்துக் காலங்களில் இந்த முள்ளம் பன்றி தன் முட்களை விறைத்துக் கொண்டு சிலிர்த்துக் கொள்ளும். பிறகு எதிரி ஏமாந்த ஒரு விநாடி பார்த்து, மின்னல் வேகத்தில்

அதன் மீது பாய்ந்து - குறிப்பாக முகத்தை - தாக்கும். இந்தத் திடீர்த் தாக்குதலில் ஏராளமான முட்கள் எதிரியின் உடம்பிலும் முகத்திலும் தைத்துவிடும். பிறகு என்ன... எதிரியின் உடம்பி லிருந்து ரத்த மழைதான். இப்படி முள் தைத்த சிங்கம், புலி, சிறுத்தைகள்கூட ஸ்பாட்டிலேயே துடிதுடித்து மரணம் அடைந்து இருக்கின்றன. முள்ளம் பன்றி சற்று தூரத்தில் வரும் போதே, விஷயம் தெரிந்த புத்திசாலி விலங்குகள் பாதையை மாற்றிக் கொண்டு வேறு பக்கம் போய்விடும்.

'ரெய்ன் ட்ராப்' சாப்ட்வேர் கம்பெனி கண்ணாடி உடம்போடு ஒரு ராட்சஸனைப் போல் நின்றிருக்க - அதன் முன்பாய் கால்டாக்ஸியை நிறுத்தி இறங்கிக் கொண்டாள் குமுதா.

கையில் நீள் செவ்வகத்தோடு ஒரு எக்ஸிக்யூட்டிவ் பைல். தோளில் ஒரு வானிடி பேக்.

காம்பௌண்ட் கேட்டைத் தாண்டி உள்ளே போனதும் செக்யூரிட்டி விங் அவளை நிறுத்தியது. நீலநிற யூனி பார்மில் இருந்த மீசை நரைத்த செக்யூரிட்டி ஆபீஸர். அவளைப் பார்வையால் அளந்து கொண்டே கேட்டார்.

"இண்ட்டர்வியூ காண்டிடேட்...?"

"எஸ்..."

"நேம்...?"

"குமுதா..."

''ஸோ... மீ... யுவர் இண்ட்டர்வ்யூ கார்ட்.''

காட்டினாள்.

''எனி ஐ.டி. கார்ட்...?''

வானிடி பேக்கிலிருந்து வோட்டர் ஐ.டி.யை எடுத்துக் கொடுக்க, செக்யூரிட்டி ஆபீஸர் அதை ஸ்கேன் எடுத்துக் கொண்டு, குமுதாவை உள்ளே அனுப்பி வைத்தார்.

குமுதா, பச்சைப்பசேல் என்ற இரண்டு 'லான்'களுக்கு நடுவில் போடப்பட்டு இருந்த கான்க்ரீட் பாதையில் நடந்தாள். அட்மினிஸ்ட்ரேட்டீவ் ஆபீஸை அடைய மூன்று நிமிட நேரம் பிடித்தது.

சென்ட்ரலைஸ்ட் ஏ.ஸி. செய்யப்பட்ட அந்தப் பெரிய ஹாலில் வரிசையாய் போடப்பட்டு இருந்த நாற்காலி களில், கைகளில் ஃபைல்களோடு பெண்கள் காத்துக் கிடந்தார்கள். இன் கம்மிங் ஸ்கேனர் - இல் நுழைந்து தன்னுடைய வருகையைப் பதிவு செய்து நெம்பரைப் பெற்றுக் கொண்டவள், அந்த நெம்பர்க்குரிய நாற் காலியைத் தேடிப் பிடித்து உட்கார்ந்தாள். பக்கத்தில் உட்கார்ந்து இருந்த பெண் நிறைய செண்ட் வாசனை யோடு ''ஹாய்'' சொல்லி தன் லிப்ஸ்டிக் பூச்சு உதடு களைப் புன்னகையில் விரித்தாள். கை நீட்டினாள்.

''அ'யாம் ரேஷ்மி...''

''அ'யாம் குமுதா...''

''நேட்டீவ்...?''

''சென்னை... அம்பத்தூர்...''

''எம்.சி.ஏ...?''

''நோ... எம்.எஸ்.ஸி. ஐ.டி...''

''யூ ஸீம்ஸ் டு பி வெரி க்யூட்...''

''நீங்களும் அழகாய்த்தான் இருக்கீங்க. எஸ்பெஷலி யுவர் அய்ஷ்...''

ரேஷ்மி சிரித்தாள்.

''இது ப்யூட்டி பார்லர் அழகு. வீட்டுக்குப் போய்க் குளித்தால் எல்லாமே காணாமல் போயிடும். ரெண்டாயிரம் ரூபாய் தண்டம்.''

''ரொம்பவும் வெளிப்படையாய்ப் பேசறீங்க...'' குமுதா சொல்லிக் கொண்டிருக்கும்போதே, பேக்கில் இருந்த அவளுடைய செல்போன் வைபரேஷனில் அதிர்ந்து கூப்பிட்டது. எடுத்து காதுக்குப் பொருத்தினாள். மறுமுனையில் ஒரு ஆண் குரல்.

''குமுதா...''

''சொல்லுங்க முகிலன்...''

''இப்ப எங்கே இருக்கே...?''

''இண்ட்டர்வ்யூ ஹால்ல உட்கார்ந்திருக்கேன்.''

''மொத்தம் எத்தனை பேர்...?''

''எப்படியும் நூறைத் தாண்டும்.''

''ஜெண்ட்ஸ்...?''

''இல்லை...''

''திட்டப்படி எல்லாம் நடக்கணும் குமுதா...''

''நடக்கும்.''

''உனக்கு நம்பிக்கை இருக்கா...?''

''ஏன்... உங்களுக்கு இல்லையா...?''

''இருக்கு... இருந்தாலும் கொஞ்சம் பயம்...''

''கையில் ரப்பர் இருக்கா?''

''எதுக்கு...?''

''அந்தப் பயத்தை அழிச்சிடுங்க...'' பேசிவிட்டு செல்போனை அணைத்தாள் குமுதா. பக்கத்தில் இருந்த அந்த ரேஷ்மி புன்முறுவல் ஒன்றைப் பூத்தாள்.

''செல்போன்ல இப்படித்தான் பேசணும். சில பேர் பொது இடம்ன்னு கூடப் பார்க்காமே வளவளன்னு பேசுவாங்க. தன்னை எல்லாரும் கவனிக்கணுங்கிற துக்காக வாய்விட்டுச் சிரிப்பாங்க. நீங்க அப்படி இல்லை. இந்த க்வாலிடி எல்லார்க்கும் வரணும்.''

''தேங்க்யூ...''

''பை... த... பை... நான் ஒரு கேள்வி கேட்டா நீங்க தப்பாய் நினைச்சுக்க மாட்டீங்களே...''

''நோ... நோ... கேளுங்க...''

''உங்ககிட்டே போன்ல பேசின அந்த முகிலன் உங்க லவ்வர்தானே...?''

''ஸாரி...''

''எதுக்கு ஸாரி...?''

''முகிலன் எனக்கு லவ்வர் கிடையாது.''

''பின்னே...?''

''சொன்னா நம்பமாட்டீங்க... ரேஷ்மி...''

''சொல்லுங்க... யார் அவர்...?''

''என்னோட தாத்தா...''

''தாத்தாவா...?''

"பார்த்தீங்களா... நீங்க நம்பலை..!"

"அது... அது... வந்து... நீங்க உங்க தாத்தாகிட்டே பேசற மாதிரி போன்ல பேசலையே...?"

"நான் எப்படிப் பேசியிருக்கணும்னு நினைக்கறீங்க...?"

அந்த ரேஷ்மி என்ன பேசுவது என்று தெரியாமல் திணற, குமுதா பக்கத்தில் இருப்பவர்களுக்குக் கேட்டு விடாமல் குரலைத் தாழ்த்தினாள்.

"ஏன்டி...! உனக்குப் பக்கத்துல வந்து உட்கார்ந்து முழுசா ரெண்டு நிமிஷம்கூட முடியலை... அதுக்குள்ளே என்னோட வாழ்க்கை சரித்திரம் பூராவும் உனக்குத் தெரியணுமா? நான் உன்னைப் பத்தி ஏதாவது கேட்டேனா? உன்னோட பேரைக்கூட நீதான் சொன்னே...! இந்த நிமிஷத்திலிருந்து நீ என்கிட்டே ஒரு வார்த்தை கூடப் பேசக் கூடாது. மீறிப் பேசினா நான் உன்கிட்டே எப்படி நடந்துக்குவேன்னு எனக்கே தெரியாது! பி... கேர்... புல்...!"

அந்த ரேஷ்மி உறைந்துபோன விழிகளோடு குமுதாவையே பார்த்தாள். சுடிதார்க்குள் உடம்பு வியர்த்தது.

## 4

### ஆந்தைக்கு இரவில் மட்டும் கண் தெரிவது ஏன்?

இப்படியொரு பொய்யை யார் சொன்னது என்று தெரியவில்லை. ஆந்தைக்கு பகலிலும் கண் தெரியும். ஆனால் தெளிவாகத் தெரியாது. எதிரில் ஏதோ வருகிறது என்று தெரியும். அது எருமை

மாடா... பசு மாடா என்று தெரியாது. இரவு முழு வதும் கண் விழித்து உணவுக்காக வேட்டை யாடுவதால் பகலில் மரக்கிளையில் உட்கார்ந்து பாதித் தூக்கத்திலேயே பகல் பொழுதைக் கழிக்கும். ஆனால் இரவு நேரத்தில் ஆந்தையின் பார்வை கூர்மையாகும். இதற்கு ஏற்ப அதன் கண்கள் வட்ட வடிவில் பெரிதாய் இருக்கின்றன. பார்வைத் திரையில் 'ராட்ஸ்' 'கோன்ஸ்' என்ற ஸ்பெஷல் செல்கள் இருப்பது இதன் சிறப்பு. நம் கண்களிலும் இந்த 'ராட்ஸ்', 'கோன்ஸ்' செல்கள் இருக்கின்றன. ஆனால், இந்த செல்கள் நமக்கு பகல் நேரத்தில் தான் வேலை செய்யும். ஆனால், ஆந்தைகளுக்கு இரவில்தான் இந்த செல்கள் வேலை செய்கின்றன.

இதன் வட்ட வடிவமான விழிகளில் ஏராளமான ஒளிக்கற்றைகள் பாய்வதால் 100 மீட்டர் தொலை வில் இருட்டில் ஒரு எலி ஓடினாலும் ஆந்தையின் பார்வைக்குப் புலப்பட்டு விடும். அப்புறம் என்ன... ஆந்தையார்க்கு எலியார் ஃபாஸ்ட் ஃபுட் ஆக மாற வேண்டியதுதான்... ஆந்தைக்கு உள்ள இன் னொரு ப்ளஸ் பாயிண்ட் – அது தன் தலையை 360 டிகிரி கோணத்தில் எப்படி வேண்டுமானாலும் திருப்பி எட்டுத் திசைகளையும் பார்க்க முடியும்.

**கா**லை ஏழு மணி.

ரிடையர்ட் டி.ஜி.பி. ஆனந்ததீர்த்தன். டாக்டர் வராகசாமியின் அறைக்குள் நுழைந்து, ''குட்மார்னிங்

டாக்டர்'' என்று சொல்லிக் கொண்டே எதிரில் இருந்த நாற்காலிக்கு சாய்ந்தார். 62 வயது ஆனந்ததீர்த்தன் தினசரி நடைப்பயிற்சியாலும் கட்டுப்பாடான உணவு முறையாலும் உடம்பைத் தொப்பையிலிருந்து காப்பாற்றி யிருந்தார். தினசரி வாக்கிங் போகும்போது ஹாஸ்பிட்ட லுக்குள் நுழைந்து பி.பி. அளவையும், சர்க்கரையின் நிலைமையையும் பார்த்துக் கொள்வது பத்தாண்டு கால பழக்கம்.

பார்த்துக் கொண்டிருந்த ஸ்கேன் ரிப்போர்ட்டை தள்ளி வைத்துவிட்டு ஆனந்த தீர்த்தனை ஏறிட்டார் டாக்டர் வராகசாமி.

''என்ன! இன்னிக்கு பத்து நிமிஷத்துக்கு முன்னாடியே வந்துட்டீங்க... வழக்கமாய் 7.10க்குத்தானே வருவீங்க.''

''இன்னிக்கு ஸ்பீட் வாக்கிங்... கூடவே ஜாக்கிங்...''

வராகசாமி சிரித்தார்.

''உடம்பை உங்க அளவுக்குப் பார்த்துக்கிற ஒரு நபர் இந்த உலகத்திலேயே யாரும் இருக்க மாட்டாங்கன்னு நினைக்கிறேன்.''

''டாக்டர்! என்னை மாதிரியே ஒவ்வொருத்தரும் உடம்பைப் பார்த்துகிட்டா உங்களை மாதிரியான டாக்டர்களுக்கு வேலை இல்லாமே போயிடும். நேத்திக்கு எனக்கு பீ.பீ. 100 - 140 இருந்தது. இன்னிக்கு டெஸ்ட் பண்ணிப் பாருங்க. 80 - 130 தான் இருக்கும்.''

''எப்படிச் சொல்றீங்க...?''

''நான் சொல்லலை டாக்டர்... என்னோட உடம்பு சொல்லுது.'' ஆனந்த தீர்த்தன் சொல்லிக் கொண்டு

இருக்கும்போதே, ட்யூட்டி டாக்டர் உள்ளே வந்தார். அவருடைய கையில் இள மஞ்சள் நிறத்தில் ஒரு தாள். அதில் டைப் செய்யப்பட்ட எழுத்துக்கள்.

''வாங்க மகேந்திரன்...! ரிப்போர்ட் ரெடியா...?''

''ரெடி டாக்டர்... பார்க்கறீங்களா?''

''ரிப்போர்ட் என்ன சொல்லுது?''

''நீங்க சந்தேகப்பட்டது சரின்னு சொல்லுது டாக்டர்.''

''அந்த பேஷண்ட்டோட பேர் என்ன?''

''சூடாமணி.''

''சரி... சூடாமணியோட அப்பா அம்மாவைக் கூப் பிடுங்க. நான் பேசிக்கிறேன்.''

ட்யூட்டி டாக்டர் மகேந்திரன், தலையை ஆட்டிவிட்டு வெளியேறிப் போனார். வராகசாமி ஆனந்த தீர்த்தனுக்கு பீ.பீ. செக் பண்ண, ரப்பர் பேடை அவருடைய தோள் பட்டைக்கு சுற்றிக் கொண்டே சொன்னார்.

''இந்தக் காலத்துல பொண்ணைப் பெத்தவங்க நிரம்பவும் ஜாக்ரதையாய் இருக்க வேண்டியிருக்கு. இல்லேன்னா பெரிய பெரிய பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும்.''

ஆனந்ததீர்த்தன் புருவங்களை உயர்த்தினார்.

''ஏன்... யார்க்கு என்னாச்சு டாக்டர்?''

''சூடாமணின்னு ஒரு பேஷண்ட். அழகான பொண்ணு. கல்யாணம் பண்ணிக்க வேண்டிய வயசு. நேத்து மிட் நைட் பாத் ரூம்ல வழுக்கி விழுந்து தலையில் அடிபட்டு மயக்கமாயிட்டா. பொண்ணைப் பெத்தவங்க, பதறி யடிச்சுகிட்டு பொண்ணைக் கொண்டு வந்து இங்கே

அட்மிட் பண்ணாங்க. தலையை ஸ்கேன் எடுத்துப் பார்த்ததுல மூளையோட செல்கள் பாதிக்கப்பட்டு இருக்கிற அபாயம் தெரிஞ்சது. ஆல்மோஸ்ட் ப்ரெய்ன் டெத். பெத்தவங்களைக் கூப்பிட்டு அப்பவே விஷயத்தைச் சொல்லிட்டேன். அவங்களும் இடிஞ்சு போயிட்டாங்க. இருந்தாலும் பொண்ணை மும்பைக்குக் கொண்டு போய் அங்கே இருக்கிற ஐஸ்லோக் ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணி ட்ரீட்மெண்ட் எடுக்க விரும்பறதாய்ச் சொன்னாங்க. நானும் அவங்க விருப்பத்துக்கு குறுக்கே நிக்க விரும்பாமே சரின்னு சொல்லிட்டேன். அவங்ககிட்டே பேசிட்டு இருக்கும்போதே லேப்பிலிருந்து அந்தப் பொண்ணோட ப்ளட் ரிப்போர்ட் வந்தது. அந்த ரிப்போர்ட்டைப் பார்த்ததும் எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.''

''என்ன அதிர்ச்சி...?''

''அந்தப் பொண்ணோட ரத்தத்துல 'காட் மைன்' என்கிற போதைப் பொருளோட வீரியம் இருந்தது. அது ரொம்பவும் காஸ்ட்லி. ஒரு கிராம் அளவுள்ள அந்தப் பொருளின் விலை ரெண்டு லட்ச ரூபாய். ஒரு துளி நாக்கில் பட்டாலே 24 மணி நேரத்துக்கு போதையைக் கொடுக்கக் கூடியது. யார்க்கும் அவ்வளவு சுலபத்தில் கிடைக்காத அந்த போதைப் பொருள், இந்தப் பொண்ணுக்கு எப்படிக் கிடைச்சிருக்கும்னு யோசனை பண்ணினேன்.''

''அந்தப் பொண்ணோட பேரண்ட்ஸ்கிட்டேயே கேட்டு இருக்க வேண்டியதுதானே...?''

''கேட்க எனக்கு மனசு வரலை. காரணம்... ஏற்கெனவே அவங்க பொண்ணோட உடல்நிலை

பாதிப்பாலே அதிர்ந்து போயிருந்தாங்க. அந்த நிலைமையில் 'உங்க பொண்ணுக்கு போதை மருந்து சாப்பிடற பழக்கம் உண்டா?'ன்னு கேட்டு, அவங்களை இன்னமும் அதிர்ச்சியில் ஆழ்த்த விரும்பலை. அவங்களை வெளியே அனுப்பிட்டு ட்யூட்டி டாக்டர் மகேந்திரன்கிட்டே ப்ளட் ரிப்போர்ட்டைப் பத்திச் சொன்னேன். போதை மருந்து சாப்பிட்டு அந்த போதையிலேயே பாத்ரூமுக்குப் போனதாலதான் பேஷண்ட் சூடாமணி வழுக்கி விழுந்து தலையில் அடிபட்டு இருக்கணும்ன்னு மகேந்திரன் சொன்னார். ஆனா எனக்குள்ளே ஒரு சந்தேகம். பேஷண்ட் சூடாமணியைப் பார்த்தா போதை மருந்துக்கு அடிமையான பொண்ணு மாதிரி தெரியலை. எதுக்கும் 'இம்யூன் டெஸ்ட்' எடுத்து பார்த்துடலாம்ன்னு சொன்னேன்.''

''இம்யூன் டெஸ்ட்டா...?''

''அதுவும் ப்ளட் டெஸ்ட்தான்...! போதைப் பொருள். குடி, புகையிலை போன்றவைகளுக்கு அடிமையான நபர்களுக்கு இந்த சோதனையைப் பண்ணிப் பார்த்தால் அவங்களோட ப்ளட் கவுண்ட்ஸ், ஹீமோக்ளோபின் அளவு, ஆர்.பி.ஸி., டபிள்யூ. பி.ஸி. ரேஷியோ போன்ற விபரங்கள் துல்லியமாய்க் கிடைக்கும். இந்த விபரங்களை வெச்சுக்கிட்டு ஒருத்தர் எத்தனை வருஷமாய் போதை மருந்துப் பழக்கத்துக்கு அடிமையாய் இருக்கிறார் என்கிற உண்மையைக் கண்டு பிடித்து விட முடியும். அதன்படி சூடாமணிக்கு 'இம்யூன் டெஸ்ட்' எடுத்துப் பார்த்ததுல என்னோட சந்தேகத்தக்குப் பதில் கிடைச்சிருக்கு.''

''என்ன பதில் டாக்டர்...?''

''சூடாமணி போதை மருந்துப் பழக்கத்துக்கு அடிமை யான பெண் கிடையாது. முதல் தடவையாய் 'கார்மைன்' என்கிற போதை மருந்தை சாப்பிட்டிருக்கா. அவள் எதுக்காக அந்த போதை மருந்தைச் சாப்பிட்டா...? அவள் சாப்பிடற அளவுக்கு அவளுக்கு என்ன பிரச்னை? இந்த ரெண்டு கேள்விகளுக்கும் விடை தெரியணும். விடை பேரண்ட்ஸ்களுக்கு கண்டிப்பாய் தெரிஞ்சு இருக்கும்.''

ஆனந்ததீர்த்தன் 'உச்' கொட்டினார்.

''டாக்டர்! இனிமே விடை தெரிஞ்சு என்ன பிரயோ ஜனம்? அந்தப் பொண்ணுக்குத்தான் ப்ரெய்ன் டெத் ஸ்டேஜ்ன்னு சொன்னீங்களே...?''

''ஆமா... அந்தப் பொண்ணு இனிமே உயிர் பிழைக்க வாய்ப்பில்லை. இருந்தாலும் பெத்தவங்ககிட்டே அந்த போதை மருந்து விவகாரத்தைச் சொல்லியாகணும்...!''

டாக்டர் வராகசாமி சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ட்யூட்டி டாக்டர் மகேந்திரன் உள்ளே வந்தார்.

''டாக்டர்...! பேஷண்ட் சூடாமணியோட ஃபாதர், மதர் ரெண்டு பேரையுமே காணோம்...?''

''காணோமா...? அரை மணி நேரத்துக்கு முன்னாடி அவங்க ரெண்டு பேரையும் ரிசப்ஷன்ல பார்த்தேனே... சோபாவுல பக்கம் பக்கமாய் உட்கார்ந்து பேசிட்டு இருந் தாங்க.''

''காண்ட்டீன்ல பார்த்தீங்களா...?''

''ம்... போய்ப் பார்த்தேன்! இல்லை...! அட்மிஷன் கார்ட்ல அவங்க கொடுத்து இருந்த செல்போன் நெம்பர்

களுக்கு டயல் பண்ணிப் பார்த்தேன். 'நெம்பர் நாட் இன் யூஸ்'ன்னு ரிக்கார்டட் வாய்ஸ் வந்தது டாக்டர்.''

டாக்டர் வராகசாமி நெற்றியைக் கீறினார். ''எங்கே போனாங்கன்னு தெரியலையே...?''

ட்யூட்டி டாக்டர் தயக்கமாய்க் குரல் கொடுத்தார். ''டாக்டர்! என்னோட மனசுல இருக்கிற ஒரு சந்தேகத் தைச் சொல்லலாமா...?''

''சொல்லுங்க மகேந்திரன்...''

''அந்த ரெண்டு பேரும் சூடாமணி என்கிற இந்த பேஷண்ட்டோட அப்பா - அம்மாவாய் இருக்க மாட் டாங்கன்னு எம் மனசுக்குப் படுது... டாக்டர்.''

வராகசாமி அதிர்ந்து போனவராய் மகேந்திரனைப் பார்த்தார்.

''எப்படிச் சொல்றீங்க...?''

''இதை வெச்சுத்தான் சொல்றேன் டாக்டர்...'' சொன்ன மகேந்திரன் தன் கோட் பாக்கெட்டில் வைத்து இருந்த அந்த பாலிதீன் கவரை எடுத்துப் பிரித்தார். உள்ளேயிருந்து எதையோ எடுத்தார்.

வராகசாமியும், ஆனந்த தீர்த்தனும் திகைப்பும் ஆர்வமு மாய் அதைப் பார்த்தார்கள்.

## 5

**ஜோசியக்காரரின் கிளி எப்படிப் படங் களைத் தேர்ந்து எடுத்துக் கொடுக்கிறது?**

## கிளியின் மூளையில் ஸ்பெஷலாய் ஏதாவது அமைப்பு இருக்கிறதா?

கிளிக்கும் மற்ற பறவைகளுக்கும் உள்ள ஒரே ஒரு வித்தியாசம் 'அப்ஸர்விங் கெப்பாஸிடி' தான். ஒவ்வொரு பறவைக்கும் ஒரு சிறப்பம்சம் உண்டு. கழுகுக்கு கூர்மையான பார்வை. புறாவுக்கு அதன் நினைவாற்றல். பழகிய புறாக்களை 500 கிலோ மீட்டர் தள்ளிச் சென்று பறக்க விட்டால்கூட களைப்பு இல்லாமல் பறந்து வந்து, வளர்த்த நபரின் தோள்மேல் வந்து உட்கார்ந்து கொள்ளும். அதே போல் கிளிக்கு ஆழ்ந்து கவனிக்கும் திறமை அதிகம். இதன் காரணமாகவே அது மிமிக்ரி செய்கிறது. நாம் பேசியதைக் கவனித்து அதுவும் பேசுகிறது. இந்தத் திறமையைத்தான் மனிதன் பயன்படுத்திக் கொள்கிறான். படங்களை எப்படித் தேர்ந்து எடுப்பது என்று பழக்கித் தருகிறான். கூண்டுக் கதவைத் திறந்ததும் கிளி வெளியே வந்து, வரிசையாய் அடுக்கப்பட்டு இருக்கும் படங்களைக் கலைக்கத் தொடங்குகிறது. ஜோதிடர் காட்டும் நெல்மணி சிக்னலைப் புரிந்து கொண்டு கலைப்பதை நிறுத்திக் கொண்டு அடுத்த படத்தை எடுத்து நீட்டுகிறது. அதனுடைய குறிக்கோள் நெல் மணியே தவிர, படத்தில் இருக்கும் ஆஞ்சநேயர்க்கோ, அறுபடை முருகனுக்கோ அது பொறுப்பேற்பதில்லை.

அதற்குப் பிறகு அந்த ரேஷ்மி பேசவில்லை.

குமுதா தன்னுடைய பேக்கைத் திறந்து வாக்மேனை எடுத்துக் காதுகளில் பொருத்திக் கொண்டு செல் போனில் 'மை மியூஸிக்' ஆப்ஷனை இயக்கினாள். நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்தபடி பாட்டைக் கேட்கத் தயா ரான போது, டை கட்டிய அந்த நபர் மெல்ல பக்கத்தில் வந்து நின்றார்.

"எக்ஸ்க்யூஸ்மீ...!"

குமுதா தன் வாக்மேனைக் கழற்றினாள்.

"எஸ்..."

"ப்ளீஸ்... கம்... வித் மீ..." சொல்லிவிட்டு அவர் நடக்க ஆரம்பித்துவிட, குமுதா அவரைப் பின் தொடர்ந்து போனாள்.

க்ரானைட் வராந்தாவைக் கடந்து லிஃப்ட்டில் ஏறிப் பயணிக்கும் போது கேட்டாள். "என்னை எங்கே கூட் டிட்டுப் போறீங்க...?"

"இந்தக் கம்பெனியின் எக்ஸிக்யூட்டிவ் டைரக்டர் சங்கர் பிரபு உங்களைப் பார்த்துப் பேச விரும்பறார்."

"என்ன விஷயமாய்...?"

"எனக்குத் தெரியாது..."

லிஃப்ட் நின்றது.

இருவரும் வெளிப்பட்டு நடந்து அந்த வராந்தாவின் கடைசியில் இருந்த அறைக்கு முன்பாய் நின்றார்கள்.

பளபளப்பான ரோஸ்வுட் கதவின் ஓரத்தில் இருந்த பஸ்ஸரில் விரலை வைத்தார் டை கட்டிய நபர். உள்ளே ஒரு 'மியூஸிக் நோட்' கேட்டது. அதைத் தொடர்ந்து

கதவின் வலது புறத்தில் இருந்த ஒரு சிறிய டிஸ்ப்ளேயில் 'கெட் இன்' என்ற வார்த்தை வெளிச்சமாய் உற்பத்தியா யிற்று.

''நீங்க உள்ளே போங்க மிஸ் குமுதா...''

குமுதா கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந் தாள். ஒரு காஷ்மீர் பள்ளத்தாக்கின் குளிர்ச்சியோடு இருந்தது அந்த அறை. தரைப் பரப்பு பூராவும் காஷ்மீர் கம்பளம் சிவப்பாய் ஓடியிருந்தது. ஏ.ஸி.யின் காற்றில் லெமனேட் ஃபெர்ப்யூம். சுவாசிக்கும் போதே நுரை யீரல்கள் சந்தோஷப்பட்டன.

சதுரமான கண்ணாடி மேஜைக்குப் பின்னால், அந்த ஐம்பது வயது நபர் தெரிந்தார். முழு வழுக்கை. இருந் தாலும் இளமையாய் இருக்கக் காட்டிக் கொள்வது போல் காதோர கிருதாக்களுக்கு 'டை' அடித்து இருந்தார். முகத் தில் குளிர் கண்ணாடி. 'கேஸ்யூ நட்' நிறத்தில் ஃபுல்சூட் அணிந்து நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார்.

''குட்மார்னிங் ஸார்...''

அந்த சங்கர் பிரபு, பதிலுக்கு குட்மார்னிங் சொல் லாமல் கையசைப்பால் உட்காரச் சொன்னார்.

குமுதா உட்கார்ந்தாள்.

சில விநாடிகள் அமைதியாய் இருந்த சங்கர் பிரபு மெல்ல குரலைத் தாழ்த்திக் கேட்டார்.

''யார் அந்த மெகாபோன் மைக்கேல்...?''

குமுதா தன் இரண்டு புருவங்களையும் சம அளவில் உயர்த்தி சங்கர் பிரபுவை வியப்பாய்ப் பார்த்தாள்.

''மெகா போன் மைக்கேல்...?''

''எஸ்... பத்து நிமிஷத்துக்கு முன்னாடி அவன் எனக்கு போன் பண்ணினான். உன்னோட பேரைச் சொல்லி, நீ இண்ட்டர்வ்யூக்கு வந்து இருக்கிறதையும், உன்கிட்டே என்னைப் பத்தின ஒரு விவகாரமான விஷயம் இருக்கிறதாகவும் சொன்னான். அது உண்மையா பொய்யான்னு தெரிஞ்சுக்கத்தான் உன்னைக் கூப்பிட்டேன்.''

குமுதா மெல்லச் சிரித்து வைத்தாள். சங்கர் பிரபு கோபமான குரலில் கேட்டார். ''இப்படி சிரிச்சா... இந்தச் சிரிப்புக்கு என்ன அர்த்தம்?''

''மெகாபோன் மைக்கேல் சொன்னது உண்மைன்னு அர்த்தம்.''

''அது என்ன என்னைப் பற்றின ஒரு விவகாரமான விஷயம்?''

''பார்க்கறீங்களா?''

''பார்க்கறதா...! எதைப் பார்க்கறது...?''

''அந்த விவகாரமான மேட்டரைத்தான்...''

''நீ என்ன சொல்றேன்னு எனக்குப் புரியலை.''

''இப்பப் புரியும் பாருங்களேன்'' சொன்ன குமுதா தன் செல்போனை எடுத்து வீடியோ ஆப்ஷனுக்குக் கொண்டு போய் பட்டனை ப்ரஸ் செய்து சங்கர் பிரபுவிடம் காட்டினாள்.

''இது ஒரு குறும் படம். படத்தோட டைட்டில் என்ன தெரியுமா...? 'ஒன் மில்லியன் டாலர் குற்றம்' பாருங்க மிஸ்டர் சங்கர் பிரபு! ஒரு நிமிஷம்தான் ஓடும். சிக்ஸ்ட்டி செக்கண்ட்ஸ் ஒன்லி.''

சங்கர் பிரபு மொத்த முகமும் மாறிப் போனவராய், குமுதாவிடம் இருந்த செல்போனை வாங்கிப் பார்த்தார்.

செல்போனின் திரையில் - சங்கர் பிரபு, கையில் துப்பாக்கியோடு தெரிந்தார். வழுக்கைத் தலையில் வியர்வை. கண்களில் கோபம். எதிரே ஒரு இளைஞன், அவன் கண்களில் பயம். கையெடுத்துக் கும்பிட்டுக் கெஞ்சிக் கொண்டிருந்தான்.

''ஸார்...! தெரியாமே பண்ணிட்டேன் ஸார்... என்னை மன்னிச்சிடுங்க ஸார்...''

சங்கர்பாபு இரைந்தார்.

''என்னது! தெரியாமே பண்ணிட்டியா...? அப்ப டீன்னா நான் உன்னை மன்னிக்கிறதுதான் நியாயம். அந்த நியாயம் என்னோட மனசுக்குப் புரியுது கதிர். ஆனா, இந்தத் துப்பாக்கிக்குப் புரியணுமே...? உன்னை சுட்டுத்தான் தீருவேன்னு சொல்லுது. நான் என்ன பண்ணட்டும்?''

''ஸார்... ப்ளீஸ்! இனிமே தப்புப் பண்ண மாட்டேன்.''

''சரி... நீ இப்படிக் கெஞ்சறதால ஒரு விளையாட்டை வெச்சுக்கலாமா...? இந்த டாய்லட் அறைக்குள்ளே நீ எப்படி வேணும்ன்னாலும் ஓடு. இது சைலன்ஸர் பிஸ்டல். நான் உன்னை ஒரே ஒரு தடவைதான் சுடுவேன். ஒரே ஒரு தோட்டாதான். அந்தத் தோட்டா வுக்கு நீ தப்பிச்சுட்டா உனக்கு ஆயுசு கெட்டி. இல் லேன்னா...''

''ஸ... ஸார்! வே... வேண்டாம்... ஸார்.''

''ம்... ஓடு...! விளையாட்டு ஆரம்பமாயிடுச்சு...!'' சங்கர் பிரபு, தன் கையில் வைத்து இருந்த துப்பாக்கியை உயர்த்தினார்.

''ஸ... ஸார்...!''

''ம்... ஓடு... ஒரே ஒரு தடவைதான் சுடுவேன். அந்தத் தோட்டாவுக்கு நீ தப்பிச்சுட்டா அடுத்த தடவை சுடமாட்டேன். இதுல வெற்றி யார்க்குன்னு பார்த்துட லாம் - உனக்கா... இல்லை இந்தத் துப்பாக்கிக்கான்னு...''

அந்த இளைஞன் கதிர், கண்களில் மரண பயத்தோடு அந்தச் சிறிய டாய்லட் அறையில் அந்த மூலைக்கும் - இந்த மூலைக்கும் ஓட ஆரம்பித்தான்.

சங்கர் பிரபு தன் உதட்டில் நிறுத்திக் கொண்ட ஒரு புன்னகையோடு துப்பாக்கியால் இளைஞனைக் குறி பார்த்தார்.

பார்த்தார்.

பார்த்தார்.

பார்த்துக் கொண்டேயிருந்தார்.

பின் எதிர்பாராத ஒரு விநாடியில் சுட்டார்.

வயிற்றில் பாய்ந்த தோட்டாவோடு குப்புற விழுந் தான் அந்த இளைஞன். ரத்தம் அவனைச் சுற்றிலும் வேகமாய்ப் பரவியது.

வீடியோ காட்சி நின்று செல்போன் மௌனமாயிற்று. பார்த்துக் கொண்டிருந்த சங்கர் பிரபு வியர்த்துப் போயி ருந்தார். கண்களில் கோபம் கலந்த பயம்.

''ஏ... ஏய்... இது... இது... எப்படி...?''

குமுதா மெல்லச் சிரித்தாள்.

''கூல் டவுன்... மிஸ்டர் சங்கர் பிரபு! இப்ப என்னா யிருச்சுன்னு இப்படிப் பதட்டப்படறீங்க...? ஒரு கொலையைப் பண்ணும்போது கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருக்க

வேண்டாமா...? பாருங்க! பாலுமகேந்திரா ரேஞ்சுக்கு யாரோ செல்போன் காமிரா மூலமாய் அற்புதமாய் சூட் பண்ணியிருக்காங்க. ஒளிப்பதிவும் சூப்பர். ஆடியோவும் அட்டகாசமாய்ப் பதிவாகியிருக்கு.''

''இ... இ... இதை... யார் எடுத்தது...?''

''யார் எடுத்தா உங்களுக்கு என்ன ஸார்...? இப்ப இது யார் கையில் இருக்குன்னு பாருங்க. இது என்னோட செல்போன். உங்ககிட்டே இதை தைரியமாய்க் கொடுத்து இருக்கேன். இதை இப்ப நீங்க என்ன வேணும்ன்னாலும் பண்ணலாம். கால்ல போட்டு மிதிக்கலாம். சிகரெட் லைட்டரால இதை என் கண் முன்னாடியே பொசுக் கலாம். அதன் மூலமா இதில் பதிவாகியிருக்கிற வீடியோ காட்சிகளை அழிச்சுட்டதாய் நினைச்சு சந்தோஷப் படலாம். ஆனா, இதே மாதிரி என்கிட்டே பத்து செல் போன் இருக்கு. அது தவிர 'மெகா போன்' மைக்கேல் கிட்டேயும் இதே வீடியோ காட்சியோடு ரெண்டு செல் போன் இருக்கு. நாங்க நினைச்சா இதை உடனடியாய் போலீசுக்கு கொண்டு போக முடியும். ஆனா, விவகாரம் போலீசுக்குப் போயிட்டா, அதனால எங்களுக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை.''

சங்கர் பிரபு, அந்த ஏ.ஸி. அறையிலும் சொதசொத வென்று வியர்த்துப் போயிருந்த தன் முகத்தை இரண்டு கைகளாலும் வழித்து விட்டபடி குமுதாவைப் பார்த் தார்.

''இப்ப உனக்கு என்ன வேணும்?''

''ஓ...! நேரடியாய் பிசினஸ் பேச வந்துட்டீங்க... ஸோ... இந்த மேட்டர் எவ்வளவு சீரியஸ்ன்னு உங்களுக்குப் புரிஞ்சு போச்சு.''

''இதோ பார்...! இந்த வீண் பேச்செல்லாம் என்கிட்டே வேண்டாம். உனக்கு எவ்வளவு பணம் வேணும்?''

''பணமெல்லாம் வேண்டாம்.''

''பின்னே...?''

''இந்தக் கம்பெனியில் எனக்கு ஒரு வேலை வேணும்.''

''என்னது... வேலையா...?''

''ம்... வேலைதான்... என்னடா லட்சக்கணக்கில் பணம் கேட்காமே. வேலை வேணும்ன்னு கேட்கறா ளேன்னு பார்க்கறீங்களா...? ஸார்... லட்சக்கணக்கில் பணம் கேட்டா நீங்களும் கொடுப்பீங்க. நான் அதை வாங்கி, எந்தக் கணக்கில் காட்டி பேங்க்ல போட முடி யும்...? என்னோட அப்பா, ஒரு தனியார் கம்பெனியில சாதாரண க்ளார்க்காய் இருந்து ரிடையரானவர். ஒரே ராத்திரியில் நான் பணக்காரி ஆயிட்டா என்னைச் சுத்தியிருக்கிற எல்லார்க்கும் சந்தேகம் வரும். நாய்க்கு கிடைச்ச தேங்காய் மாதிரி அந்தப் பணத்தை வெச்சு கிட்டு அல்லாட வேண்டியதுதான். இதுக்குப் பதிலா, உங்க கம்பெனியில் ஒரு நல்ல வேலை போட்டுக் கொடுத்தா, அது எனக்கு ஒரு பெரிய உதவியாய் இருக் கும். நான் எம்.எஸ்.ஸி. ஐ.டி. படிச்சிருக்கேன். யூனி வர்ஸிடி ரேங்க். சர்ட்டிபிகேட்ஸ் எல்லாம் கொண்டு வந்திருக்கேன்.''

சங்கர் பிரபு, எந்தப் பதிலும் சொல்லாமல் குமு தாவையே பார்க்க, அவள் தலையைச் சாய்த்துச் சிரித் தாள்.

''என்ன ஸார்! பேச்சையே காணோம்? நானொண் ணும் அடாவடி ப்ளாக்மெயிலர் கிடையாது. நான் ஒரு

நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள். அம்மா இல்லை, அப்பா மட்டும்தான். எனக்குக் கீழே ரெண்டு சிஸ்டர்ஸ். காலேஜ்க்குப் போய்ட்டு இருக்காங்க. நான் ஒருத்தரைக் காதலிக்கிறேன். அவர் பேரு முகிலன். ஒரு சிவில் வொர்க்ஸ் கம்பெனியில் வேலைக்கு இருக்கார். அப்பா வாலே எங்களுக்குக் கல்யாணத்தையெல்லாம் பண்ணி வைக்க முடியாது. எல்லாத்தையும் நான்தான் பண்ணி யாகணும். அதுக்கு, எனக்கு ஒரு சோர்ஸ் வேணும். இந்தக் கம்பெனியில், எனக்கு ஒரு வேலை போட்டுக் கொடுத்தா, என்னோட குடும்பம் மேலே வந்துடும். கம்பெனியில் லோன் வாங்கியே என்னோட சிஸ்டர் களுக்கு கல்யாணத்தைப் பண்ணி முடிப்பேன். ஒரு வீட்டையும் கட்டிக்குவேன். என் ஃபேமிலியோட முன் னேற்றம் இப்படியிருந்தாத்தான், யார்க்கும் எந்த சந்தேக மும் வராது. நீங்க எனக்குத் தரப் போகிற வேலை, ஃபேகல்ட்டி சம்பந்தப்பட்டதாய் இருக்கட்டும். மாச சம்பளம் 50 ஆயிரம் ரூபாய். வீட்டு லோன், மேரேஜ் லோன் எது கேட்டாலும் எனக்கு உடனடியாய் சாங்ஷன் ஆகணும்... என்ன சொல்றீங்க...?''

சங்கர் பிரபு. இப்போது வியர்ப்பதை நிறுத்தியிருந் தார். இயல்பான நிலைக்குத் திரும்பியிருந்தார்.

''சரி... உனக்கு வேலை போட்டுத் தர்றேன்... பட் எனக்கு சில உண்மைகள் தெரியணும்.''

''என்ன உண்மைகள்?''

''நான் சம்பந்தப்பட்ட வீடியோவை எடுத்தது யார்...?''

''எடுத்தது யார்ன்னு சொல்ல மாட்டேன். பட், ஒரு க்ளூ தர்றேன்.''

"என்ன க்ளூ...?"

"உங்க கம்பெனியில் மொத்தம் எத்தனை பேர் வேலை செய்யறாங்க?"

"1195 பேர்..."

"இதுல ஒருத்தர்தான். தன் செல்போன் காமிராவில் வீடியோ எடுத்தார்."

"அது யார்ன்னு சொல்லு..."

"அதை நான் சொல்லக் கூடாது. சொல்லவும் முடி யாது. இப்போதைக்கு, உங்களுக்கும் எனக்கும் இருக்கிற ஒரே டீல். இந்த வேலை விஷயம்தான். இன்னும் அரை மணி நேரத்துல என்னோட கைக்கு அப்பாய்ண்ட் மெண்ட் ஆர்டர் வரணும். இல்லேன்னா 'மெகாபோன் மைக்கேல்' என்கிற பேர்ல உங்ககிட்டே பேசின - என்னோட காதலர் முகிலன் மூலமாய் போலீஸ் கைக்கு வீடியோ போயிடும். சரியாய் அரை மணி நேரம் தான் உங்களுக்கு அவகாசம். நீங்க வீடியோவுக்கும் பயப் படாமே, போலீசுக்கும் பயப்படாமே எனக்கு ஏதாவது ஆபத்தை உண்டாக்க நினைச்சீங்கன்னா, அதுக்கும் நான் தயாராய்த்தான் வந்திருக்கேன்" சொன்னா குமுதா தன் இரண்டு கைகளையும் பின்னுக்குக் கொண்டு போய் உயர்த்திப் போட்டிருந்த கொண்டையை அவிழ்த்து அதற்குள் பதுங்கியிருந்த சிறிய அந்தத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டாள்.

சங்கர் பிரபு கையமர்த்தினார்.

"வெயிட்... வெயிட்...! உன்கிட்டே இவ்வளவு வெயிட்டான வீடியோ ஆதாரம் இருக்கும்போது, நான் போலீசுக்குப் பயப்படாமே இருக்க முடியுமா...?

உன்னோட கோரிக்கை என்ன...? இந்தக் கம்பெனியில் ஒரு நல்ல வேலைதானே...? போட்டுத் தர்றேன். ஹ்யூமன் ரீசோர்ஸ் டிபார்ட்மெண்ட்டில் போட்டுத் தரட்டுமா...? ஒரு போஸ்ட் வேகண்ட்டாய் இருக்கு. சேலரி, ஸிக்ஸ்டி ஃபைவ் தௌஸண்ட்.''

''இப்பத்தான் நீங்க சரியான ரூட்டுக்கு வந்து இருக்கீங்க...''

''நீ என்ன சொல்றியோ அதையெல்லாம் நான் பண்றேன். நீ எனக்கு என்ன பண்ணுவே...?''

''என்ன பண்ணணும்...?''

''நான் இருக்கிற அந்த செல்போன் வீடியோ ஆதா ரங்கள் எல்லாம் எப்போ கிடைக்கும்...?''

''நான் இந்தக் கம்பெனியிலிருந்து ரிடையராகி வீட் டுக்குப் போகும்போது'' குமுதாவின் பதிலைக் கேட்டு, சங்கர் பிரபு பெருமூச்சொன்றை விட்டார்.

''இது சரியான பதில் இல்லையே...?''

''இதோ பாருங்க மிஸ்டர் சங்கர் பிரபு... நீங்க எனக்கு இந்தக் கம்பெனியில் வேலை போட்டுக் கொடுத்த கையோட, நீங்க என்னை மறந்துடலாம். அந்த வீடி யோவையும் மறந்துடலாம். நீங்க எனக்கு நேர்மையாய் - நியாயமாய் இருக்கிற வரைக்கும் நானும் அதே மாதிரி உங்களுக்கு இருப்பேன். அப்படியில்லாமே, நீங்க கொஞ்சம் தடம் புரண்டாலும், நானும் தடம் மாறிப் பயணம் செய்ய வேண்டியிருக்கும்.''

''என்னால உனக்கு எந்தப் பிரச்னையும் வராது.''

''உங்களால எனக்கு எந்தப் பிரச்னையும் இல் லைன்னா, அந்த வீடியோ மேட்டர் எந்தக் காலத்திலும்

தலையைத் தூக்கிக்கூடப் பார்க்காது. யார் பார்வைக்கும் போகாது. அந்தக் கொலையை நீங்க எதுக்காகப் பண்ணீங்கன்னு எனக்குத் தெரியாது. அது எனக்குத் தேவையில்லாத விஷயமும்கூட. எனக்கு என்னோட குடும்பம்தான் முக்கியம். ரெண்டு சிஸ்டர்களுக்கும் நல்லபடியாய்க் கல்யாணத்தைப் பண்ணணும். அப்பாவை சந்தோஷமாய் வைச்சுக்கணும். அதுக்கு, எனக்கு வேண்டியது ஒரு நல்ல வேலை. அதை நீங்க கொடுத்துட்டா எல்லாப் பிரச்னைகளும் ஓவர்.''

''ஓகே... யூ... ஆர்... அப்பாயிண்ட்டெட்...! இன்னும் பத்தே நிமிஷத்துல உன்னோட கையில் அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டர் இருக்கும்.''

''தேங்க் யூ ஸார்...''

## 6

### வால் துண்டாகி விட்டாலும் பல்லிகள் சுறுசுறுப்பாய் ஓடுகிறதே எப்படி?

ஆபத்துக் காலத்தில் எதிரிகளிடம் இருந்து தப்பிக்கவே. இந்த வால் துண்டாதல் (டெய்ல் ப்ரேக்கிங்) சிஸ்டத்தை பல்லிகள் வைத்து இருக்கின்றன. துண்டாகிப் போன வால், படபடவெனத் துடிப்பதையே எதிரி பார்த்துக் கொண்டு இருக்க, அந்த இடைவேளையில் பல்லி தப்பித்து ஓடிவிடும். இதற்கு வசதியாகப் பல்லியின் வால் எலும்புகள்

மிக மென்மையாக இருக்கும். அது தவிர, மேல் தோலில் இருக்கும் செதில்கள் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு உள்ளன. கதவு இடுக்கிலோ அல்லது வேறு பெரிய பூச்சியின் வாயிலோ சிக்கி வால் துண்டானதும், துண்டான இடத்தில் இருக்கும் சுருங்கு தசை உடனே இறுகி, ரத்தம் வெளி யேறாமல் அந்த இடத்துக்கு சீல் வைத்து விடுகிறது.

•

டியூட்டி டாக்டர் மகேந்திரன் தன் கையில் வைத்து இருந்த சிறிய பாட்டிலை டாக்டர் வராகசாமியிடம் காட்டிக் கொண்டே சொன்னார்.

''டாக்டர்...! இது ஒரு கிளிசரின் பாட்டில். நான், இன்னிக்குக் காலையில் ஆறு மணி சுமாருக்கு, ஐ.ஸி. யூனிட்டுக்கு பக்கத்தில் இருந்த வரவேற்பறைக்குள் ஜானகிராமன் என்ற அந்த நபரையும், கனகம் என்கிற அந்தப் பெண்ணையும் பார்த்தேன். அந்தப் பெண், தன்னோட கண்களுக்கு இந்த பாட்டிலை உபயோகிச்சு சொட்டு மருந்தை விட்டுகிட்டு, பக்கத்தில் இருந்த குப்பைக் கூடைக்குள்ளே போட்டா. அப்படிப் போடும் போது பார்வையில் ஒரு திருட்டுத்தனம் இருந்தது. சுற்றும் முற்றும் பார்த்துகிட்டே, அந்தப் பெண் அப்படிப் பண்ணினதால, அவங்க அந்த இடத்தை விட்டுப் போனதும், அந்தக் கூடைக்குள்ளே என்ன இருக்குன்னு போய்ப் பார்த்தேன். சில குப்பைக் காகிதங்களுக்கு நடுவில் இந்த கிளிசரின் பாட்டில் கிடைச்சுது. பொது வாய் சினிமாவில் நடிக்கிற நடிகை நடிகர்கள்தான்

போலியாய் அழறதுக்காக இந்தக் கிளிசரினைப் பயன் படுத்துவாங்க. இந்த அம்மா இதை ஏன் பயன் படுத்தணும்ன்னு யோசிச்சேன். இதைப்பத்தி உங்க கிட்டே பேசணும்ன்னு நினைச்சுட்டு இருந்தேன். அதுக் குள்ளே, அவங்களே இப்ப காணாமே போயிருக்காங்க. அந்த நபர் கொடுத்த செல்போன் நெம்பரும் உப யோகத்தில் இல்லை.''

டாக்டர் வராகசாமி தாடையைக் கவலையோடு வருடியபடி மகேந்திரனிடம் நிமிர்ந்தார்.

''இந்தப் பெண்ணை அட்மிட் பண்ணும்போது, எண்ட்ரி ஃபார்ம்ல அவங்க அட்ரஸ் கொடுத்து இருப் பாங்க. அது என்ன அட்ரஸ்ன்னு, ரிசப்ஷன் கௌண்ட் டர்ல பார்க்கச் சொல்லுங்க மகேந்திரன்.''

மகேந்திரன், உடனே அங்கே இருந்த இண்ட்டர்காம் ரிஸீவரில் ரிசப்ஷன் கௌண்ட்டரைத் தொடர்பு கொண்டார்.

''சௌம்யா...''

''சொல்லுங்க டாக்டர்...''

''நேத்து மிட் நைட் அட்மிட்டான சூடாமணி என்கிற பெண்ணோட எண்ட்ரி ஃபாரத்துல. அவளோட பேரண்ட்ஸ் என்ன அட்ரஸ் கொடுத்து இருக்காங்கன்னு பாருங்க!''

''ஒரு நிமிஷம் டாக்டர்...!''

அடுத்த முப்பது விநாடிகளுக்குள் சொன்னாள். ''நெம்பர் 717. நைன்த் க்ராஸ் ஸ்ட்ரீட், மாமல்லன் நகர், முட்டுக்காடு.''

"சரி...! இந்த அட்ரஸுக்கு, நம்ம ஹாஸ்பிட்டலைச் சேர்ந்த ஆர்டர்லி ஒருத்தரை அனுப்பி, வெரிஃபை பண்ணச் சொல்லுங்க. ரெஸ்பான்ஸ் உடனடியாய் வேணும்."

"எஸ்... டாக்டர்..."

மகேந்திரன் ரிஸீவரை வைத்தார்.

அடுத்த ஒரு மணி நேரத்திற்குள் அந்தத் தகவலும் வந்து விட்டது. முட்டுக்காடு பகுதியில் 'மாமல்லன் நகர்' என்ற ஒரு நகரே இல்லை.

டாக்டர் வராகசாமி அயர்ந்து போய் உட்கார்ந்துவிட, ரிடையர்ட் டி.ஜி.பி. ஆனந்ததீர்த்தன் சொன்னார்.

"மொதல்ல, அட்மிட்டாயிருக்கிற இந்த 'சூடாமணி' என்கிற பெண் யார்ன்னு தெரியணும். போலீசுக்கு முறைப்படி தகவல் கொடுங்க டாக்டர். நானும், போலீஸ் கமிஷனர் வர்கீஸ்கிட்டே பேசறேன். வர்கீஸ் திறமையான ஆபீஸர். குற்றவாளிகள் யாராக இருந்தாலும், 24 மணி நேரத்துக்குள்ளே, லாக்கப்புக்குள்ளே கொண்டு வந்து உட்கார வெச்சுடுவார்."

வராகசாமி ஏதோ பேச முயற்சித்த விநாடி - மேஜையின் மேல் இருந்த எமர்ஜென்ஸி டெலிபோன் ஒரு சைரன் ஒலியை எழுப்பியது. வேகமாய் ரிஸீவரை எடுத்தார்.

ஐ.ஸி. யூனிட்டிலிருந்து ஸ்டாஃப் நர்ஸ் வேதம் பேசினாள்.

"டாக்டர்..."

"என்ன...?"

''அந்தப் பொண்ணு சூடாமணி லேசாய் கண் விழிச்சுப் பார்த்தா...''

''ஈஸிட்...!''

''எஸ்... டாக்டர்.''

''மிர்ராக்கிள்...!''

''உண்மைதான் டாக்டர்... இப்பக்கூட என்னையே பார்த்துட்டிருக்கா...''

''பேச முயற்சி பண்றாளா...?''

''இல்ல டாக்டர்... கையை மட்டும் மெல்லத் தூக் கறா.''

''இதோ... நான் உடனே புறப்பட்டு வர்றேன்'' டாக்டர் வராகசாமி நாற்காலியைத் தள்ளிக் கொண்டு புயலாய் எழுந்தார்.

# 7

## இலக்கியத்தில் இடம் பெற்ற அன்னப் பறவை உண்மையிலேயே உலகில் இருக் கிறதா?

மன்மதனின் மனைவியான ரதியின் வாகன மாகக் கருதப்படும் 'ஸ்வான்' எனப்படும் இந்த அன்னப் பறவை இன்றைக்கும் ஐஸ்லாந்து, ஸ்காண்டிநேவியா போன்ற பகுதிகளில் குப்பை கொட்டிக் கொண்டு இருக்கின்றன. ஒரு காலத்தில்

இங்கிலாந்து அரச குடும்பத்தின் தனிப்பட்ட சொத்தாகக் கருதப்பட்ட இந்தப் பறவையை வளர்க்க சாதாரண மனிதர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டு இருந்தது. இப்போது கெடுபிடியை சற்றே தளர்த்தியுள்ளார்கள். 'லைசன்ஸ் வைத்து இருப்பவர்கள் மட்டுமே அன்னம் வளர்க்க வேண்டும்' என்று விதியை மாற்றியுள்ளார்கள். அன்னப் பறவையின் நிறம் வெண்மையோ வெண்மை. பாலையும் தண்ணீரையும் பிரிக்கும் என்பது எல்லாம், தலையில் பூ வைக்கும் சமாச்சாரம். சங்க இலக்கியங்கள் அவிழ்த்துவிட்ட கதைகளில் இதுவும் ஒன்று.

ஸ்வீட் பாக்கெட்டோடு வீட்டுக்குள் நுழைந்தாள் குமுதா.

அப்பா ரங்கநாதன், பக்கத்து வீட்டில் வாங்கி வந் திருந்த ஓசிப் பஞ்சாங்கத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு எதையோ பார்த்துக் கொண்டிருக்க... அவருக்கு எதிரே போய் நின்றாள்.

"அப்பா!"

அவர் நிமிர்ந்தார். மலர்ந்தார். பஞ்சாங்கத்தை டீபா யின் மேல் போட்டுவிட்டு எழுந்தார்.

"இண்ட்டர்வ்யூ என்னம்மா ஆச்சு...?"

"மொதல்ல கை குடுங்கப்பா...! நீங்க சொன்ன மாதிரியே உங்க குருபகவான் எனக்கு வேலையை வாங்கிக் குடுத்துட்டார்."

மகளின் கையைப் பற்றிக் குலுக்கினார்.

''நான் என்ன சொன்னேன்? இந்த குரு பெயர்ச்சி உனக்கு மட்டும் இல்லேம்மா... நம்ம குடும்பத்துக்கே நல்லது பண்ணும்.''

''இந்தாங்கப்பா ஸ்வீட்...'' ஸ்வீட் பாக்ஸைத் திறந்து குட்டி குட்டியாய் இருந்த ஜிலேபிகளில் ஒன்றை எடுத்து ரங்கநாதனின் வாயில் வைத்தாள்.

உள்ளேயிருந்து ஹேமாவும், ஜமுனாவும் ஓடி வந்தார்கள்.

''அக்கா! கங்கிராட்ஸ்...!''

''ரெண்டு பேரும் ஸ்வீட் எடுத்துக்குங்க...''

''என்னால நம்பவே முடியலைக்கா...! இந்த இண்ட்டர்வ்யூவும் வழக்கம் போலத்தான் இருக்கும்ன்னு நினைச்சேன். இனிமே நம்ம குடும்பத்துக்கு வசந்த காலம்தான்!''

''ஸாலரி எவ்வளவு தெரியுமா?''

''சொல்லு...''

''அறுபத்தஞ்சாயிரம்...''

''அம்மாடி...! எனக்கு மயக்கம் வருதே...!''

''எனக்கு மூச்சை அடைக்குதே...!''

''இதோ அப்பாய்ண்மெண்ட் ஆர்டர்...''

''அட... அப்பாய்ண்மெண்ட் ஆர்டரையும் கையிலேயே கொடுத்துட்டாங்களா...?''

ஹேமாவும், ஜமுனாவும் அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டரை ஆர்வமாய் வாங்கிப் பார்த்தார்கள்.

‘‘மொதல்ல, அம்மா படத்துக்கு முன்னாடி வைக்கணும்.’’

ரங்கநாதன் கேட்டார்.

‘‘என்னிக்கு வேலையில் ஜாய்ன் பண்ணணும்...?’’

‘‘நாளைக்கே.’’

‘‘வேலையில் ஜாய்ன் பண்றதுக்கு முந்தி, நீ கோயிலுக்குப் போய் குரு பகவானுக்குக் கொண்டைக்கடலை மாலை சாத்தணும்.’’

‘‘கண்டிப்பாய்...!’’

‘‘அக்கா! இண்டர்வ்யூவில் என்ன கேட்டாங்க...?’’

‘‘ஒரே ஒரு கேள்விதான் கேட்டாங்க. அதுக்கு நான் சொன்ன பதிலைக் கேட்டு அசந்து போயிட்டாங்க.’’

‘‘அப்படி என்ன கேள்வி கேட்டாங்க...?’’

‘‘‘எண்ட், நோ’ - இந்த ரெண்டு வார்த்தைகளும் நெகட்டீவ் வார்த்தைகள். இதை பாஸிட்டீவ் வார்த்தைகளாய் மாற்ற முடியுமான்னு கேட்டாங்க.’’

‘‘அய்யய்யோ... இது கஷ்டமான கேள்வியாச்சே! நீ என்ன பதில் சொன்னேக்கா...?’’

‘எண்ட்’ என்கிற வார்த்தைக்கு ‘எஃபோர்ட்ஸ் நெவர் டைய்’ன்னு சொன்னேன். ‘நோ’ என்கிற வார்த்தைக்கு ‘நெக்ஸ்ட் ஆபர்சுனிட்டி’ன்னு சொன்னேன்.

‘‘சூப்பர் ஆன்ஸர்.’’

ஹேமாவும் ஜமுனாவும் கைகளைத் தட்டிச் சிரித்தார்கள்.

‘‘நான் இப்படிச் சொன்னதும், இண்டர்வ்யூ பண்ணினவங்க என்னைப் பாராட்டும் விதமாய் எந்திரிச்சு நின்று

கை தட்டினாங்க. 'யூ ஆர் அப்பாய்ண்ட்டட்'ன்னு சொல்லி அப்பவே ஆர்டரை டைப் பண்ணச் சொல்லிட் டாங்க!''

ஹேமாவும் ஜமுனாவும் குமுதாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். ''அக்கா...! யூ... ஆர்... க்ரேட்...!''

''இந்த அக்காவுக்கு லேசாய் தலைவலி. ரெண்டு பேர்ல யாராவது ஒருத்தர் போய், சூடாய் ஒரு கப் காபி போட்டு எடுத்துட்டு வாங்க பார்க்கலாம்.''

''நான்தான் போடுவேன்...!'' ஹேமா, ஜமுனா இரண்டு பேருமே சமையல்கட்டை நோக்கி ஓடினார்கள்.

ரங்கநாதன் வாய்விட்டுச் சிரித்தார். ''இன்னிக்குத் தாம்மா என்னோட மனசு நிறைவாய் இருக்கு. இனிமே நம்ம வீட்ல ஒவ்வொரு நாளும் சந்தோஷம்தான்...! தலைவலின்னு சொன்னே... காப்பி சாப்ட்டுட்டு கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடும்மா.''

குமுதா தலையசைத்துவிட்டு தன்னுடைய அறைக் குள் நுழைந்தாள். வேறு சேலைக்கு மாறி ஃபேனைப் போட்டுக் கொண்டு கட்டிலுக்கு சாய்ந்த விநாடி, அவளுடைய செல்ஃபோன் வைப்ரேஷனில் அதிர்ந்து கூப்பிட்டது.

எடுத்து, குரலைத் தாழ்த்திக் கொண்டு பேசினாள்.

''சொல்லுங்க முகிலன்...''

''வீட்ல நிலைமை எப்படி...?''

''சந்தோஷம் கரை புரண்டு ஓடுது...''

''இனி எல்லாம் சுகமே...!''

"எனக்குத்தான் 'திக் திக்'ன்னு இருக்கு..."

"எதுக்கு திக் திக்...?"

"அந்த சங்கர் பிரபுவை நினைச்சுத்தான்."

"இதோ பார் குமுதா...! பயப்பட வேண்டியது. அந்த சங்கர் பிரபுதான். நீயில்லை..."

"அதுவும் தெரியுது... இருந்தாலும் ஒரு பயம் அடி வயிறிலிருந்து ஒரு பூனை மாதிரி எட்டிப் பார்க்குது."

"அந்தப் பூனையோட தலையில் ஒரு தட்டுத் தட்டு! அது உள்ளே போயிடும்!"

# 8

## குட்டித் தேள்கள் பிறந்ததுமே தாய்த் தேளைக் கொன்று தின்று விடும் என்பது உண்மையா?

உண்மையல்ல. அப்பட்டமான பொய். உண்மையில் தாய்த்தேளின் மேல் குட்டிகளுக்கு அளவு கடந்த பாசம் மட்டுமே இருக்கும். ஒரு தேளின் பிரசவம் என்பது ஒரு நாளில் முடிந்து விடுவது இல்லை. ஒரு வாரத்துக்கு – தவணை முறையில் நடக்கும். பிறக்கும் குட்டித் தேள்களுக்கு உஷ்ணம் வேண்டியிருப்பதால் தாய்த் தேளின் முதுகில் உப்பு மூட்டை ஏறிக் கொள்ளும். ஒரே நேரத்தில் 90க்கும் மேற்பட்ட குட்டிகள் மேலே ஏறி

ஒட்டிக் கொள்வதால் தாயின் உடல் தெரியாது. இந்த நிலையில் தாய்த் தேளைப் பார்ப்பவர்கள் தாயைக் கொன்று குட்டிகள் அதைச் சாப்பிடுகின்றன என்று நினைத்துக் கொள்கிறார்கள். குட்டிகள் தானாக இறங்கி உணவு தேடும் வரை தாயின் முதுகில் பயணம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

டாக்டர் வராகசாமி ஐ.ஸி. யூனிட்டுக்குள் நுழைந்து சூடாமணி அட்மிட் செய்யப்பட்டு இருந்த அறைக்குள் பதட்டத்தோடு பிரவேசித்தார். தொடர்ந்து ஆனந்த தீர்த்தனும், மகேந்திரனும் பின்னாலேயே போனார்கள்.

நர்ஸ் ஒதுங்கி நின்றாள்.

வராகசாமி சூடாமணிக்குப் பக்கத்திலேயே போய் நின்றார். அவளுடைய கண்ணிமைகள் லேசாய் அசைந்து கொண்டிருந்தது. நர்ஸிடம் திரும்பினார்.

"ஏதாவது பேசினாளா?"

"பேசலை டாக்டர்... லேசாய் முனகல் சத்தம் மாத்திரம் வந்தது. இப்ப அதுவும் இல்லை."

வராகசாமி சூடாமணியின் கன்னத்தை மெல்லத் தட்டினார். "இதோ பாரம்மா...! நான் பேசறது கேக்குதா...?"

"ம்..."

அவள் காதருகே குனிந்தார்.

"உன்னோட பேர் சூடாமணியா...?" வராகசாமி கேட்டதும் அவளுடைய கண்ணிமைகள் வேகமாய்த் துடித்தன. வலது கை மெல்ல உயர்ந்து பிறகு ஸ்லோ மோஷனில் தாழ்ந்தது.

''சொல்லும்மா... உன்னோட பேர் சூடாமணியா?''

டாக்டர் கேட்டுக் கொண்டு இருக்கும்போதே அவளுடைய கண்ணிமைகளின் துடிப்பு சிறிது சிறிதாய் அடங்கியது.

வராகசாமி பெருமூச்சோடு தோள்களைக் குலுக்கினார்.

''மறுபடியும் கோமாவுக்குப் போயிட்டா...''

பக்கத்தில் இருந்த ஆனந்த தீர்த்தன் வராகசாமியை ஏறிட்டார்.

''டாக்டர்...! இந்தப் பொண்ணுக்கு 'ப்ரெய்ன் டெத்' ஸ்டேஜ்ன்னு சொன்னீங்க. இப்படிப்பட்ட ஸ்டேஜில் இருக்கிறவங்களுக்கு கான்ஷியஸ் வர வாய்ப்பு இருக்கா?''

''தொண்ணூறு பர்ஸண்ட் வாய்ப்பு இல்லை. காரணம், மூளையில் சேதமடைந்த செல்கள் மறுபடியும் புதுப்பிக்கப்படுவது இல்லை. மேலும், இந்தப் பெண்ணுக்கு மூளைத் தண்டும் சேதம் அடைஞ்சிருக்கு. மூளைத்தண்டு சேதம் அடையும்போது 'கோமா விஜிலேண்ட்' என்கிற நிலை ஏற்படும். அப்போது பாதிப்புக்குள்ளானவர்க்கு 10% சுய உணர்வுதான் இருக்கும். அந்த சமயத்துல பேஷண்ட்டுக்கு கண்ணசைவு தவிர வேறு எதனாலும் தொடர்பு கொள்ள முடியாது. இப்போது இருக்கிற இந்த 10% சுயஉணர்வும் கொஞ்சமாய் குறைந்து 0% பாய்ண்ட்டுக்குப் போயிடும்.''

''மறுபடியும் இந்தப் பொண்ணுக்கு சுயஉணர்வு வர வாய்ப்பில்லைன்னு சொல்றீங்களா டாக்டர்...?''

''ஷ்யூர்... பேஷண்ட்டுக்கு 'கோமா விஜி லேண்டே' நிலை வந்துட்டாலே ஷீ இஸ் ஏ வெஜிடபுள்னுதான் அர்த்தம்...''

''ஓ.கே. டாக்டர்... இனிமேல் உங்களுடைய அடுத்த ஸ்டெப் என்ன...?''

''இனிமேல் ஸ்டெப் எடுக்க வேண்டியது உங் களுடைய போலீஸ் டிபார்ட்மெண்ட்தான்...! இந்த சூடாமணி யார்...? இவளை இங்கே கொண்டு வந்து அட்மிட் பண்ணின அந்த போலி பேரண்ட்ஸ் யார்...? சூடாமணியின் ரத்தத்தில் கலந்து இருந்த அந்த காட் -மைன் போதை மருந்துக்கு யார் க்ாரணம்? இது மாதிரியான கேள்விகளுக்குப் பதில்களைக் கண்டு பிடிக்கணும். அப்படியே பதில்களையெல்லாம் கண்டு பிடிச்சாலும் இந்தப் பெண்ணைக் காப்பாற்ற முடியாது. இதே நிலைமையில் இவளை ஒரு வாரம் வைத்து இருக்கலாம். அவ்வளவுதான்...! இந்த ஒரு வார காலத்திற்குள் இவளோட உண்மையான பேரண்ட்ஸ் யார்ன்னு கண்டுபிடிச்சுட்டா பரவாயில்லை. அவங்க ஒப்புதலோடு 'ப்ரெய்ன் டெத்' ஏற்பட்டு 90% இறந்து போயிட்ட இந்தப் பெண்ணோட உடல் உறுப்புக்களை எடுத்து, அந்த உறுப்புக்கள் தேவைப்படற சிலரைக் காப்பாற்றலாம்.''

ஆனந்த தீர்த்தன் தன் செல்ஃபோனை எடுத்தார்.

''டாக்டர்! யூ டோண்ட் ஒர்ரி... இன்னும் 24 மணி நேரத்துக்குள்ளே இந்தப் பெண் யார் என்கிற உண் மையைக் கண்டு பிடிச்சுடலாம். அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் பண்றேன்.'' சொன்னவர் தன்

செல்லில் சில எண்களை ஒற்றி எடுத்துவிட்டுப் பேசினார்.

''கமிஷனர் இருக்காரா...?''

''...........''

''நான் ரிடையர்ட் டி.ஜி.பி. ஆனந்ததீர்த்தன்...''

''...........''

''ஒரு அர்ஜண்ட் மேட்டர்.. பேசணும்...''

''..........''

''ப்ளீஸ் லைன் கொடுங்க.''

## 9

**மனித சமுதாயத்தில் 'கற்பு' இருப்பது போல், விலங்குகளுக்கு இடையில் கற்பு உண்டா?**

விலங்குகளில் யானைகளிடம் மட்டுமே இந்த 'கற்பு' இருக்கிறது. ஒரு ஆண் யானையும், ஒரு பெண் யானையும் கணவன் – மனைவியாக வாழ ஆரம்பித்து விட்டால், அவை உயிரோடு இருக்கிற வரையில் வேலி தாண்டுவது இல்லை. பெண் யானை வேறு எந்த ஆண் யானையையும் ஏறிட்டுப் பார்க்காது. அதே போல் ஆண் யானையும் கட்டுப்பாடோடு இருக்கும்.

ஆண் யானை ஏதாவது ஒரு காரணத்தால் இறந்து போய் விட்டால், விதவைப் பெண்

யானைகள், இறக்கும் வரையில் கூட செக்ஸ் வைத்துக் கொள்ள விரும்புவது இல்லை. ரெடிளகள் மாதிரி அலையும் சில வாலிப யானைகள், விதவைப் பெண் யானைகளை நெருங்கிப் பார்ப்பது உண்டு. இந்த விஷயம் வெளியே தெரியும்போது, கூட்டத்தில் உள்ள வயது மூத்த யானை, அந்த வாலிப யானையைக் கண்டிக்கும். அதையும் மீறி வாலிப யானை தன் வேலையைக் காட்டினால், மற்ற யானைகள் ஒன்று சேர்ந்து அதைத் தாக்க ஆரம்பிக்கும். காட்டின் மறு எல்லை வரைக்கும் துரத்தியடிக்கும்.

தனக்கு முன்னால் இருந்த டெஸ்க் டாப்பில் ஒரு மெடி-கம்யூனிகேஷனை உன்னிப்பாய்ப் பார்த்து ஒரு தாளில் குறிப்பெடுத்துக் கொண்டிருந்த குமுதாவை இண்ட்டர்காம் ஒலி எழுப்பி ஈர்த்தது. எடுத்து ''எஸ்'' என்றாள்.

மறுமுனையில் சங்கர் பிரபு குரல் கொடுத்தார்.

''குமுதா...!''

''ஹோல்டிங்...''

''ஒரு அஞ்சு நிமிஷம் என்னோட ரூம் வரைக்கும் வந்துட்டுப் போக முடியுமா?''

''உடனே வரணுமா?''

''ப்ளீஸ்...''

குமுதா டெஸ்க் டாப்பை 'ஷட் டவுண்' செய்துவிட்டு எழுந்து போனாள். ஏராளமான கண்ணாடித் தடுப்பு

களோடு தெரிந்த அந்த அலுவலகத்தை விட்டு வெளியேறி, பிரதான வராந்தாவுக்கு வந்தபோது அவளுடைய க்ரூப் ஹெட் வத்சலாமேனன் எதிர்பட்டாள். புருவங்களை உயர்த்தினாள்.

''எங்கே கிளம்பிட்டே.... காண்ட்டீனுக்கா?''

''இல்ல மேடம்... ஈ.டி. கூப்பிட்டார்.''

''என்னது! ஈ.டி. கூப்பிட்டாரா?''

''எஸ் மேடம்...''

''ஃபார் வாட்...?''

''தெரியலை மேடம்...''

''நீ வேலைக்கு சேர்ந்து ரெண்டு வாரம்தான் ஆகுது. இந்தப் பதினைஞ்சு நாளைக்குள்ளே மூணு தடவை ஈ.டி. உன்னை நேரடியாய் கூப்பிட்டிருக்கார். போன தடவை உன்கிட்டே என்ன பேசினார்...?''

''வைரஸ் எராடிகேஷன் ப்ராஜக்ட் பத்தி கேட்டார்.''

''பொதுவாய் என்னைக் கூப்பிட்டுத்தான் ப்ராஜக்ட் பத்தியெல்லாம் பேசுவார்... பட், உன்னைக் கூப்பிட்டிருக்கார். காரணம் என்னான்னு தெரியலை...''

''எனக்கு பயம்மாயிருக்கு மேடம்.''

''பயப்படாதே...! ஈ.டி. ஒரு ஜெண்ட்டில்மேன்... ஹி ஈஸ் நாட் ஏ வுமனைஸர். உன்னை அவர் அடிக்கடி கூப்பிட்டுப் பேசறார்ன்னா உனக்கு இதே டிபார்ட்மெண்ட்ல வேற ஏதாவது ஒரு பொறுப்பு கொடுக்கப் போறார்ன்னு அர்த்தம். என்னோட அட்வான்ஸ் கங்கிராட்ஸ்.''

''நான் அப்படி நினைக்கலை மேடம்.''

''போகப் போக உனக்கே புரியும்'' வத்சலா மேனன் சிரித்துக் கொண்டே போய்விட - குமுதா, சங்கர் பிரபு வின் அறையை நோக்கி நடை போட்டாள்.

அறை வந்தது.

கதவில் இருந்த பஸ்ஸரை அழுத்தி விட்டுக் காத் திருந்தாள். 30 விநாடி நேரத்திற்குப் பிறகு 'கெட் இன்' என்ற இண்டிகேஷன் வார்த்தை பச்சை நிறத்தோடு ஒளிர, கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனாள்.

சங்கர் பிரபு, ஒரு மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்து, அதன் கழுத்தைத் திருகிக் கொண்டிருந்தார்.

''குட்மார்னிங் ஸார்.''

சங்கர் பிரபு பதிலுக்கு. ''உட்கார்'' என்றார். முகம் ஒரு பாறையைப் போல் இறுகியிருந்தது.

குமுதா உட்கார்ந்தாள்.

அவர், ஒரு வாய் தண்ணீரைத் தொண்டைக்குக் கொடுத்துவிட்டுக் கேட்டார். ''வேலையெல்லாம் எப்படி யிருக்கு?''

''நான் படிச்ச படிப்புக்கும், பார்த்துட்டு இருக்கிற இந்த வேலைக்கும் பொருத்தமாய் இருக்கு. ஐ லைக் வெரி மச். இந்த ஆபீஸ் அட்மான்ஸ்பியரும் எனக்குப் பிடிச்சு இருக்கு...''

''நீ இங்கே வேலைக்குச் சேர்ந்த நாளிலிருந்து எனக்கு நிம்மதி இல்லாமே போயிடுச்சு...''

''அடடா...! அப்படியா...?''

''ஆபீஸுக்கு வரவே எனக்கு பயம்மாயிருக்கு.''

''ஏன் ஸார்... யாராவது பயமுறுத்தறாங்களா?''

''இதோ பார்...! உனக்கு எல்லாம் தெரியும். நான் சுட்டுக் கொலை பண்ணின அந்தக் கதிர் ஒரு நம்பிக்கைத் துரோகி. அவன் நல்லவன் கிடையாது. ஒரு கெட்டவனைத்தான் கொலை பண்ணியிருக்கேன்.''

''ஓ! கெட்டவனைத்தான் கொலை பண்ணியிருக் கீங்களா.. அப்படீன்னா போலீஸ் ஸ்டேஷன்ல போய் சொல்ல வேண்டியதுதானே? அவங்க ஏதாவது அவார் டுக்கு சிபாரிசு பண்ணுவாங்க. வர்ற குடியரசு நாள்ல, கவர்னர் கையால அந்த அவார்டை வாங்கிக்கலாம்...''

''ப்ளீஸ் குமுதா... ட்ரை டூ அண்டர்ஸ்டாண்ட் மீ... நான் நிம்மதியாய் இருக்கணும்னானா வேற ஒரு பிசினஸ் டீல் பேசிக்கலாம்.''

''வேற ஒரு பிசினஸ் டீலா?''

''ஆமா...''

''சொல்லுங்க கேட்போம்.''

''உன் கையில் இருக்கிற செல்போன் வீடியோவுக்கு ஒரு ரேட் பேசிக்கலாம். எவ்வளவு லட்சம் வேணும். சொல்லு...''

''இது நீங்க ஏற்கெனவே பேசின பேரம்தான்...! மொத்தமாய் லட்சக் கணக்கில் பணம் வாங்கினா, எனக்கு என்னென்ன பிரச்னைகள் வரும்ங்கிறதை நான் சொல்லிட்டேன். என்னோட ஃபேமிலி ஒரு நடுத்தரக் குடும்பத்துக்கும் கீழ்ப்பட்ட குடும்பம். ஒரே ராத்திரியில் நான் ராணி ஆயிட முடியாது. அப்படி ஆயிட்டா சுத்தி இருக்கிறவங்களுக்கும் 'இன்கம்டாக்ஸ்' காரங்களுக்கும் பதில் சொல்ல என்னால் முடியாது. இப்ப பார்த்துட் டிருக்கிற வேலைதான் எனக்கு வசதி.''

"சரி...! இன்னொரு டீல் வெச்சுக்குவோமா?"

"என்ன?"

"இந்தக் கம்பெனியோட ப்ராஞ்ச் ஒண்ணு மும்பையில் இருக்கு. போஸ்டிங் அங்கே போட்டுத் தர்றேன். போயிடறியா?"

"நான் ஒண்டிக்கட்டையாய் இருந்தா போயிடுவேன் ஸார். பட்... எனக்கு அப்பா இருக்காங்க. ரெண்டு சிஸ்டர்ஸ் இருக்காங்க. அவங்களை விட்டுட்டுப் போக முடியாது ஸார்."

"அவங்களையும் கூட்டிட்டுப் போ..."

"ரெண்டு சிஸ்டர்ஸும் காலேஜ் படிக்கறாங்க ஸார். படிப்பைப் பாதியில் விட்டுட்டுப் போக முடியாது. அதுவும் இல்லாமே அவங்க மும்பைக்கெல்லாம் வர மாட்டாங்க ஸார்."

"இதோ பார்...! நீ இங்கே இருக்கிற வரைக்கும் எனக்கு நிம்மதி கிடையாது. உன்னோட லவ்வர் பேர் என்ன முகிலனா...? அவனுக்கு போன் போட்டுக் குடு. நான் அவன்கிட்டே பேசிக்கிறேன்."

"அவன் கிடையாது. அவர்!"

"சரி... அவர்...! ஃபோன் போட்டுக் குடு..."

குமுதா தன் செல்போனை எடுத்து முகிலனுக்கு டயல் செய்து விபரத்தைச் சொல்லிவிட்டு ஹேண்ட் செட்டை சங்கர் பிரபுவிடம் கொடுத்தாள். அவர் வாங்கிப் பேசினார்.

"இதோ பார் முகிலன்...! நீதான் குமுதாவுக்கு எடுத்துச் சொல்லணும்."

''குமுதா உங்க கண் முன்னாடி இருக்கக்கூடாது. அவ்வளவுதானே.''

''ஆமா...''

''அவ உங்க கண் முன்னாடி நடமாடிக்கிட்டு இருந்தா உங்களால நிம்மதியாய் இருக்க முடியலை. அப்படித் தானே?''

''ஆமா...''

''அப்படீன்னா ஒரு வேலை பண்ணுங்க ஸார்.''

''என்ன?''

''நீங்க மும்பைக்குப் போயிருங்க...''

''நான்சென்ஸ்...''

''உங்களை நீங்களே ஏன் ஸார் திட்டி கேவலப்படுத் திக்கிறீங்க...?''

''டேய்...!''

''செல்ஃபோனை மொதல்ல குமுதாகிட்டே குட்ரா... புறம்போக்கு! குமுதா ரிடையராகிற வரைக்கும் உன் னோட கம்பெனியில்தான் வேலை பார்ப்பா... ஒழுங்கு மரியாதையாய் ஒத்துழைப்பு குடு... இல்லேன்னா செல்போன், வீடியோ இண்ட்டர்நெட்டுக்கும், அப்புறம் போலீஸுக்கும் போயிடும்'' முகிலன் சொல்ல, சங்கர் பிரபுவுக்கு வியர்த்தது.

''வே... வே... வேண்டாம்!''

''வேண்டாம்ன்னா ஸ்கூலுக்குப் போற பையன் மாதிரி அடங்கி இரு! இனிமே உன்னோட அறைக்கு குமுதாவைக் கூப்பிடக் கூடாது. நீ அவளை மறந்துட்டா அவளும் உன்னை மறந்துடுவா. அவளுக்கு அவளோட

குடும்பம்தான் முக்கியம். நீயும் நீ பண்ணின கொலையும் இல்லை... புரிஞ்சுதா...?''

''புரிஞ்சுது...!'' சங்கர் பிரபுவின் தலை தன்னிச்சையாய் ஆடியது.

# 10

**கோழி முட்டை சைவமா, அசைவமா?**

பசுவில் இருந்து நமக்குக் கிடைக்கும் பால் சைவமா அசைவமா? தேன்கூட்டிலிருந்து கிடைக்கும் தேன் சைவமா அசைவமா..? இந்த இரண்டு கேள்விகளுக்கும் நாம் சொல்லக்கூடிய பதில் சைவம் என்பதுதான். பத்து வருடங்களுக்கு முன்பு வரை, கோழி முட்டை அசைவமாய் இருந்தது. காரணம், அப்போது பண்ணைகளில் உற்பத்தி செய்யப்படும் முட்டைகளில் எதிர்கால குஞ்சு இருக்கிறது என்பதைக் கருத்தில் கொண்டு. ஆனால் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாய் முட்டை என்பது ஓர் உணவுப் பொருளாக மட்டுமே உற்பத்தி செய்யப்படுகிறது. அதாவது, உள்ளே உயிர் இல்லாத முட்டைகள்தான் இப்போது உருவாக்கப்பட்டு வருகின்றன. எனவே முட்டை என்பது சைவமே!

காலை பதினோரு மணி.

'கெட்வெல் ஹாஸ்பிட்டல்' டாக்டர் வராகசாமியின் அறை.

அறைக்குள் ஆனந்த தீர்த்தனும், போலீஸ் கமிஷனர் விநாயகமும் கவலை படிந்த முகங்களோடு நாற்காலி களில் உட்கார்ந்திருக்க, வராகசாமி சொல்லிக் கொண் டிருந்தார்.

''அந்தப் பெண் சூடாமணி இந்த ஹாஸ்பிட்டலில் அட்மிட்டாகி இன்னிக்கு ஒரு வாரம் முடியப் போகுது. மூளையில் இப்போது ஒரு சதவீத உயிர்கூட இல்லை. முழுமையான மரணம். ஹார்ட், லங்க்ஸ் சீராய் இயங் கிட்டிருக்கு. செயற்கை சுவாசத்தை நிறுத்திட்டா அந்த உறுப்புகளும் பாதிக்கப்படும். இந்த நிலைமையில் நாம் செய்ய வேண்டிய ஒரே ஒரு வேலை. சூடாமணியின் உறுப்புகளை எடுத்துப் பாதிக்கப்பட்ட நபர்களுக்குப் பொருத்தறதுதான். அதன் காரணமாய் நான்கைந்து பேர் உயிர் பிழைக்க வாய்ப்பு இருக்கு... ஆனால், சூடா மணியோட உள்ளுறுப்புகளை எடுத்து மற்றவர்களுக்குப் பொருத்தணும்னா, சூடாமணியோட ப்ளட் ரிலேஷன் ஒருத்தர் சம்மதக் கடிதம் கொடுத்து, கையெழுத்துப் போடணும்.''

போலீஸ் கமிஷனர் விநாயகம் குறுக்கிட்டார்.

''டாக்டர்! உங்க நிலைமை எனக்குப் புரியுது. நாங் களும் இந்த ஒரு வார காலமாய் டி.வி. பேப்பர்னு எல்லா மீடியாவிலும் சூடாமணியோட போட்டோவைப் போட்டு விளம்பரப்படுத்திப் பார்த்துட்டோம். அந்தப் பொண்ணைத் தெரியும்னு சொல்லிகிட்டு யாரும் வரலை. சூடாமணியோட அப்பா அம்மான்னு சொல்லி கிட்டு வந்த அந்த ரெண்டு பேரும் கொடுத்த வீட்டு

அட்ரஸ் பொய்ன்னு தெரிஞ்சு இருந்தாலும், அங்கே போயும் விசாரித்துப் பார்த்தோம். இதுவரைக்கும் ஒரு க்ளூ கூட கிடைக்கலை.''

''எனக்கொரு சந்தேகம் மிஸ்டர் விநாயகம்'' என்று பேச்சை ஆரம்பித்தார் ஆனந்த தீர்த்தன்.

''சொல்லுங்க ஸார். போலீஸோட உயர்ந்த பதவியில் இருந்து ஓய்வு பெற்ற நீங்க சொல்லக்கூடிய தகவல்கள் எங்களுக்கு உதவியாய் இருக்கலாம்.''

''அந்தப் பெண்ணோட உண்மையான பேர் என்னான்னு நமக்குத் தெரியாது. போலி பேரண்ட்ஸாய் வந்து பெண்ணை அட்மிட் பண்ணும்போது சொன்ன பேர்தான் சூடாமணி. இவள் ஒருவேளை வெளி மாநிலத்தைச் சேர்ந்த பெண்ணாய்க்கூட இருக்கலாம். இந்தியாவில் இருக்கிற எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் அந்தப் பெண்ணோட போட்டோவை அனுப்பிப் பார்த்தா என்ன?''

''இனி அடுத்த கட்டம் அதுதான்...!''

கமிஷனர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே நர்ஸ் ஒருத்தி கதவோரம் வந்து நின்றாள்.

''டாக்டர்!''

வராகசாமி திரும்பி, என்ன என்பது போல் பார்த்தார்.

''உங்களைப் பார்த்துப் பேச ஒருத்தர் வந்து இருக்கார்.''

''யாரு...?''

''பேரைக் கேட்டேன். சொல்ல மாட்டேன்னு சொல்லிட்டார். உங்களை நேர்ல பார்த்துப் பேசணுமாம்... வரச் சொல்லட்டுமா டாக்டர்...?''

''வரச் சொல்லு...!''

நர்ஸ் கதவுக்குப் பின்னால் மறைந்தாள். முழுமையாய் ஒரு நிமிடம் மறைந்து இருந்தபோது. அந்த நபர் உள்ளே வந்தான். வயது முப்பது இருக்கலாம். காக்கி பேண்ட், நீல நிற சர்ட். கலைந்த தலை. ஷேவ் செய்யாத முகம். கையில் மடித்து வைத்து இருந்த பேப்பர்.

அந்த இளைஞன் அறைக்குள் நுழைந்ததுமே தயக்கம் இல்லாமல் பேச்சை ஆரம்பித்தான். ''டாக்டரய்யா...! என் பேர் தனபால், 'ஜெட்' டாக்ஸி சர்வீஸில் ஒரு ட்ரைவராய் ஒர்க் பண்றேன். என்னோட டாக்ஸி எப்பவுமே மீனம் பாக்கம் ஏர்போர்ட்லதான் இருக்கும். சவாரிக்காக வெயிட் பண்ணிட்டு இருந்தபோது, போன மாசத்துல ஒரு நாள் - அன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை - நீங்க பேப்பர் விளம்பரத்தில் கொடுத்து இருக்கிற இந்தப் பொண்ணு ஏர்போர்ட்டிலிருந்து வெளியே வந்து என்னோட டாக்ஸியில் ஏறினாள்.''

வராகசாமி, ஆனந்த தீர்த்தன், கமிஷனர் விநாயகம் மூன்று பேரும் சரேலென்று பார்வைகளை உயர்த்தி ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

விநாயகம் அவனை ஏறிட்டார்.

''உன்னோட பேர் என்ன சொன்னே?''

''தனபால்...''

''மொதல்ல இப்படி வந்து உட்கார்...'' ஒரு நாற் காலியைக் காட்ட அந்த தனபால் போய் உட்கார்ந் தான்.

''இப்ப சொல்லு... இந்த விளம்பரப் போட்டோவில் இருக்கிற பொண்ணைத்தான் பார்த்தியா...?''

''ஆமா ஸார்... இந்தப் பொண்ணுதான் ஏர்போர்ட்டி லிருந்து வெளியே வந்ததும் நேரா என்கிட்டே வந்து, 'டாக்ஸி வருமா'ன்னு கேட்டா. நான் வரும், எங்கே போக ணும்னு?'னு கேட்டேன். அதுக்கு அந்தப் பொண்ணு 'வேளச்சேரியில் இருக்கற ஆரண்யா அவென்யூக்குப் போகணும்'ன்னா. நான் 'ஐநூறு ரூபாய் ஆகும்'ன்னு சொன்னேன். பேரம் பேசாமே ஏறி உட்கார்ந்துட்டா.''

''அப்ப நேரம் எவ்வளவு இருக்கும்?''

''ராத்திரி ஒன்பது மணி ஸார்.''

''அன்னிக்குத் தேதி என்னன்னு ஞாபகம் இருக்கா?''

''இருக்கு ஸார். இருபத்தஞ்சு...''

''அவளை எங்கே கொண்டு போய் ட்ராப் பண் ணினே?''

''மொதல் 'ஆரண்யா அவென்யூ போகணும்னு சொன்னா ஸார். அதுக்கப்புறம் டாக்ஸியில் வரும்போது யார் கூடவோ செல்போனில் பேசினா. பேசிட்டு, என் கிட்டே 'உனக்கு வேளச்சேரியில் 'ரெய்னி சீசன் மல்ட்டி குஷன்' ரெஸ்டாரெண்ட் தெரியுமா'ன்னு கேட்டா. நான் 'தெரியும்'ன்னு சொன்னதும் 'என்னை அங்கே ட்ராப் பண்ணிடு'ன்னு சொன்னா. அதே மாதிரி ட்ராப் பண் ணிட்டேன்.''

''அங்கே அவளுக்காக யாராவது வெயிட் பண்ணிட்டு இருந்தாங்களா?''

''நான் பாக்கலை ஸார்... ட்ராப் பண்ணிட்டு பணம் வாங்கிட்டு வந்துட்டேன்.''

''அவள் டாக்ஸியில் வரும்போது செல்ஃபோன்ல பேசினாள் இல்லையா?''

''ஆமா... ஸார்...''

''அவ என்ன பேசினாள்னு உனக்கு ஞாபகம் இருக்கா?''

''இல்ல ஸார்... அவ ரொம்பவும் லோ வாய்ஸ்ல இங்கிலீஷ்ல பேசிட்டு வந்தா...''

''ஒன்றிரண்டு வார்த்தைகள்கூட உன்னோட காதுல விழலையா?''

''விழலை ஸார்.''

''சரி...! ஏர்போர்ட்டிலிருந்து அவ வெளியே வரும் போது ஒன்பது மணின்னு சொன்னே. அந்த நேரத்துக்கு எந்த ஃப்ளைட் அரைவல்...?''

''மும்பை - சென்னை ஏர் பஸ் ஒண்ணு இருக்கு ஸார். அதுலதான் அந்தப் பொண்ணு வந்து இருக்கணும்...''

''அவ கையில் லக்கேஜ் இருந்ததா?''

''இருந்தது ஸார்... ஒரு பெரிய சூட்கேஸும், சின்ன தாய் ஒரு ப்ரீப்கேஸும்...''

''ஒரு மாசத்துக்கு முன்னாடி உன்னோட டாக்ஸியில் ஏறின ஒரு பொண்ணை நீ எப்படி ஞாபகம் வெச் சிருக்கே...?''

''ஸார். அந்தப் பொண்ணு அழகாய் இருந்தா... பேசும் போதே கன்னத்துல குழி விழுந்தது. நான் டாக்ஸி ஓட்டும்போது எனக்கு முன்னாடி இருந்த கண்ணாடியில் பார்த்துட்டே வந்தேன். மறக்க முடியாத முகம் ஸார் அது. அந்தப் பொண்ணு கோமா ஸ்டேஜில் இருக்கான்னு பேப்பர்ல பார்த்ததும் மனசுக்கு ரொம்பவும் கஷ்டமாய் இருந்தது ஸார். அதான் தகவல் சொல்லிட்டுப் போலாம்னு வந்தேன்.''

‘‘இது மாதிரியான ஒத்துழைப்புத்தான் போலீஸுக்குத் தேவை. சரியான நேரத்துல உபயோககரமான தகவல் களைக் கொடுத்து இருக்கே! டிபார்ட்மெண்ட் சார்பாய் உனக்கு நன்றி...!’’

‘‘ஸார்! நான் படிச்சு முடிச்சதுமே போலீஸ் வேலை யில் சேர ஆசைப்பட்டேன். உயரம் 10 செ.மீ. குறைவாய் இருந்ததால செலக்ட் ஆக முடியலை. வேலை கிடைக் காம போனாலும் போலீஸ் டிபார்ட்மெண்ட் எனக்கு ரொம்பவும் பிடிக்கும் ஸார்.’’

‘‘குட்! உன்னோட செல்ஃபோன் நெம்பரையும், அட்ரஸையும் குடுத்துட்டுப் போ. தேவைப்படும்போது காண்டாக்ட் பண்றேன்.’’

தனபால், ஒரு துண்டுப் பேப்பரில் தன்னுடைய செல்போன் நெம்பரையும், வீட்டு அட்ரஸையும் எழுத ஆரம்பித்தான்.

## 11

**உலகத்தில் தண்ணீர் குடிக்காத உயி ரினங்கள் ஏதாவது உண்டா?**

உண்டே! குறிப்பாக பல்லிகளும் பாம்புகளும், மற்ற பிற ஊர்வன வகைகளும் தண்ணீர் இருக்கும் பக்கம் எட்டிக்கூட பார்ப்பது இல்லை. காரணம், அந்தப் பிராணிகள் வெறும் மாமிச உணவை மட்டும் நம்பி வாழ்வதால், அவைகளுக்கு விழுங்கும் ஜீவராசியின் உடல் திரவங்களே

போதுமானதாகி விடுகிறது. ஈரப்பதம் அற்ற மற்றும் குறைவான தாவர உணவுகளை உட்கொள்ளும் பிராணிகளுக்குத்தான் தண்ணீர் தாகம் வருகிறது. வட அமெரிக்காவில் வாழும் கங்காரு எலி தன் வாழ்நாளில் தண்ணீரை முற்றிலுமாய் தவிர்த்து விடுகின்றது. அதே போல், சஹாரா பாலைவனத்தில் வாழும் 'ஆடக்ஸ்' என்னும் ஒரு வகை மான். அங்கே விளையும் கள்ளிச் செடிகளை மட்டும் சாப்பிட்டு ஆயுசுக்கும் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட சாப்பிடாமல் தன் வாழ்நாள்களைக் கழித்து விடுகிறது.

குமுதா தன் முதல் மாத சம்பளக் கவரை வாங்கியதும் கண்களில் ஒற்றிக் கொள்ள, பக்கத்து இருக்கையில் இருந்த 'க்ரூப் ஹெட்' வத்சலா மேனன் கண்ணைச் சிமிட்டினாள்.

''என்ன குமுதா...! ஃபர்ஸ்ட் மன்த் ஸாலரி வாங்கிட்டே! ட்ரீட்டெல்லாம் கிடையாதா...?''

''ஸாரி மேடம்... ட்ரீட்டெல்லாம் என்னோட அடுத்த மன்த் ஸாலரியில்தான்...''

''ஏன்...?''

''ஃபர்ஸ்ட் மன்த் ஸாலரியில் 90 பர்செண்ட்டை நான் ஒருத்தர்க்குத் தரணும்.''

''யார் அவர்?''

''வெங்கி...''

''வெங்கியா...?''

''என்ன மேடம்...! உங்களுக்கு வெங்கியைத் தெரியாதா...? எனக்கு இந்த வேலை கிடைக்க மூலகாரணமே அவர்தான்...''

''ஓ! இப்ப புரியுது. திருப்பதி வெங்கடாசலபதியா?''

''அவரேதான்...! இந்தக் கம்பெனியில் நான் இண்டர்வ்யூக்காக வந்தபோது ஏகப்பட்ட பேர் இருந்தாங்க. உடனே வெங்கியை ப்ரே பண்ணினேன். 'இந்த வேலை கிடைச்சா ஃபர்ஸ்ட் மன்த் ஸாலரியில் 90%ஐ உனக்குக் கொடுத்துடறேன்னு சொன்னேன். வேலை கிடைச்சுடுச்சு. சொன்னபடி நடந்துக்க வேண்டாமா?''

''கண்டிப்பாய்...!''

''அடுத்த மாசம் நம்ம க்ரூப்ல இருக்கிற எல்லார்க்கும் 'ட்ரீட்' உண்டு மேடம்... எந்த ஹோட்டல்ன்னு நீங்களே டிசைட் பண்ணிடுங்க.''

''ஓ.கே... ஓ.கே...!'' வத்சலா மேனன் தலையாட்டிச் சிரித்தபடி பக்கத்து கேபினுக்குள் போய்விட, கையில் இருந்த சம்பளக் கவரை ஹேண்ட் பேக்கிற்குள் வைத்தாள்.

அதே விநாடி, டிபார்ட்மெண்ட் அட்டெண்டர் பக்கத்தில் வந்து நின்றான். ''மேடம்...!''

''என்ன... குமாரசாமி?''

''மேடம்...! உங்களுக்கு ஒரு கூரியர் தபால் வந்தது. நானே கையெழுத்துப் போட்டு வாங்கிட்டேன்!''

''அனுப்பினது யாரு...?''

''பேரு 'மண்ணின் மைந்தன்'ன்னு போட்டிருக்கு மேடம். இதோ...!'' தன் கையில் வைத்து இருந்த அந்தச் சதுரக் கவரை நீட்டினான் குமாரசாமி.

குமுதா வாங்கிப் பார்த்தாள்.

அது ஒரு கெட்டியான கவர்.

'உள்ளே என்ன இருக்கிறது?' யோசித்துக் கொண்டு இருக்கும்போதே அவளுடைய செல்போன் ரிங்டோனை வெளியிட்டது.

எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தாள்.

அது ஒரு புது எண்.

''ஹலோ...''

மறுமுனையில் ஒரு ஆண் குரல் கேட்டது.

''பேசறது குமுதாதானே...?''

''ஆமா...''

''உனக்குப் பக்கத்துல இப்போ யாரும் இல்லையே?''

''யாரும் இல்லை... நீ யாரு...?''

''நான் தான் 'மண்ணின் மைந்தன்...' என்னோட கூரியர் தபால் இந்நேரம் உன்னோட கைக்கு வந்து இருக் கணுமே...?''

''யார்ரா... நீ...?''

''கோபப்படாதே குமுதா... நான் இப்போ பப்ளிக் டெலிபோன் பூத்திலிருந்து பேசிட்டு இருக்கேன். ரொம்ப நேரம் பேச முடியாது. விஷயத்தைச் சொல்லிடறேன். நான் அனுப்பியிருக்கற கவர்க்குள்ள ஒரு சி.டி. இருக்கு. அதை எடுத்து உடனடியாய் போட்டுப் பாரு. நிலவரம் என்னான்னு தெரியும்...''

''டே... டேய்... காஸட்ல என்ன இருக்கு?''

''போட்டுப் பாரு...''

ரிஸீவரை வைத்து விட்டான்.

குமுதாவுக்கு நெற்றி வியர்த்து, வாய் உலர்ந்து போயிற்று. தன் பார்வையைச் சுழற்றி சுற்றும் முற்றும் பார்த்தாள். யாரும் அவளை கவனிக்கவில்லை. அவரவர் டெஸ்க் டாப்களில் தீவிரமாய் இருந்தார்கள்.

மெல்ல கவரை ஒட்டியிருந்த செல்டேப்களைப் பிரித்தாள். உள்ளே அந்த சி.டி. பாதுகாப்பாய்ப் பதுங்கி யிருந்தது. எடுத்தாள்.

கேபின் கதவைச் சாத்திக் கொண்டு தன்னுடைய பி.சி.யின் டி.வி.டி. ப்ளேயர்க்குள் நுழைத்து 'க்ளிக்' செய் தாள். லோடிங் முடிந்து உடனே ஒரு காட்டுப் பகுதி உற் பத்தியாயிற்று. காமிரா நகர்ந்தது. புதர்களையும் ஒற்றை யடிப் பாதையையும் காட்டிக் கொண்டே போன காமிரா, திடும்மென ஒரு பாழடைந்த பங்களாவைக் காட்டியது.

படிகளில் ஏறி உள்ளே போயிற்று. நூலாம்படை களோடும் அரையிருட்டோடும் தெரிந்த அந்த பங்களா வுக்குள் யாரும் இல்லை. பழங்காலத்து மேஜைகளும், நாற்காலிகளும் ஆங்காங்கே தெரிந்தன. அவைகளைக் கடந்து காமிரா உள்ளே போயிற்று. ஒரு அறையின் கதவுக்கு முன்பாய்ப் போய் நின்றது. யாரோ கதவின் மேல் கையை வைத்துத் தள்ள... அது திறந்து கொள்ள...

உள்ளே -

அவளுடைய தங்கை ஹேமா.

கை கால்கள் கட்டப்பட்டு உணர்வற்ற நிலையில் மல்லாந்து கிடந்தாள். பக்கத்தில் யாரோ நாற்காலி போட்டுக் கொண்டு கால்களை மட்டும் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

'யாரது?'

பார்த்துக் கொண்டிருக்கும்போதே கம்ப்யூட்டரின் திரை அணைந்து இருட்டுக்குப் போயிற்று.

# 12

**நாயின் உடம்பில் புண் ஏற்பட்டால் அது நக்கி நக்கியே குணப்படுத்திக் கொள் கிறதே? எப்படி?**

பொதுவாக மனிதனானாலும் சரி, விலங் கானாலும் சரி உடலில் உண்டாகும் புண்களில் அழுக்குப் படிந்து சுகாதாரம் இன்றி இருந்தால் அதில் நோய்க் கிருமிகளின் தாக்குதல் அதிகம் இருக்கும். இதை 'செகண்டரி இன்ஃபெக்ஷன்' என்று சொல்வார்கள். எப்போதும் புண்ணைத் துடைத்து சுத்தமாக வைத்து இருந்தால் அதை குணமாக்க மருந்தே தேவையில்லை. நக்குதல் என்பது நாயின் பிறவிக் குணம். நாக்குக்கு எட்டும் தூரத்தில் இருக்கும் புண்களையெல்லாம் சதா சர்வ காலமும் நக்கி சுத்தமாக வைத்து இருப்பதால் நாய்ப்புண் எளிதில் ஆறிவிடுகிறது. அதன் எச்சிலில் ஆன்ட்டிசெப்டிக் ரசாயனப் பொருட்கள் இருப்பதால் டெட்டால் வேலையை அது செய்கிறது.

போலீஸ் கமிஷனர் விநாயகம் மீனம்பாக்கம் ஏர் போர்ட்டுக்குப் போய் ஏர்போர்ட் மானேஜர் சாய்குமாரைப்

பார்த்தபோது அவர் இண்ட்டர்காமில் யாரையோ திட்டிக் கொண்டிருந்தார்.

கமிஷனரைப் பார்த்ததும் அவர் அவசர அவசரமாய்ப் பேச்சை முடித்துக் கொண்டு ரிஸீவரை வைத்துவிட்டு எழுந்தார். கையைப் பற்றிக் குலுக்கிவிட்டு, ''உங்களுக் காகத்தான் வெயிட் பண்ணிட்டிருக்கேன்... ப்ளீஸ் ஸீட்டட் ஸார்...'' என்றார்.

விநாயகம் உட்கார்ந்தார்.

''ஸாரி... உங்க பிஸியான நேரத்துல நான் வந்து தொந்தரவு தர்றேன்...!''

''நோ... நோ... போலீஸ் ஒரு தகவலைக் கேட்கும் போது, அதுக்காக நேரத்தை ஒதுக்கறதும் என்னோட ட்யூட்டிதான்!''

''பாஸஞ்சர்ஸ் ட்ரிப் ஷீட்டைப் பார்த்தீங்களா?''

''இதோ...! எடுத்து வெச்சிருக்கேன்...!'' சொன்னவர் மேஜையின் மேல் இருந்த அந்த கம்ப்யூட்டர் பிரிண்ட் டட் தாளைக் கையில் எடுத்தார். கண்களுக்கு ஸ்பெக்ஸைக் கொடுத்துக் கொண்டே பேசினார்.

''அந்த டாக்ஸி ட்ரைவர் தனபால் சொன்ன நேரத் துக்கு இந்த ஏர்போர்ட்டில் லேண்டான ஒரே ஃப்ளைட் மும்பை - சென்னை ஏர் பஸ்தான். அன்றைய தினம் அந்த ஃப்ளைட்டில் பயணம் செய்த பயணிகளோட எண்ணிக்கை 127. இதில் 33 பேர் பெண்கள். இந்த 33 பெண்களில் 21 பேர் வெளிநாட்டுப் பெண்கள். மீதி பனிரெண்டு பேர்களில் 7 பேர் 50 வயதுக்கு மேற்பட்ட வர்கள். 2 பேர் 18 வயதுக்கு கீழே உள்ள மாணவிகள். மீதி மூன்று பேர்தான் நீங்கள் சொன்ன 25 வயதிலிருந்து

30 வயதுக்கு உட்பட்டவர்கள். அந்த மூணு பேரோட பெயர்களைப் படிக்கட்டுமா?''

''ம்... படிங்க...''

''மிஸஸ் அருணா தியாகராஜன். மிஸ் பௌர்ணிமா. மிஸ் வீணா.''

''சூடாமணி என்கிற பெயர் இல்லை...?''

''இல்லை...! பட், இந்த மூணு பேரில் சூடாமணி யாரா யிருக்கும் என்பதையும் ஓரளவுக்கு கெஸ் பண்ணிட் டேன்.''

''யார்...?''

''பௌர்ணிமா.''

''எப்படி அந்த முடிவுக்கு வந்தீங்க...?''

''மிஸஸ் அருணா தியாகராஜன், மிஸ் பௌர்ணிமா, மிஸ் வீணா இந்த மூணு பேரோட காண்டாக்ட்ஸ் நெம்பரும் ட்ரிப் ஷீட்டில் இருந்தது. அந்த நெம்பர்களை காண்டாக்ட் பண்ணினேன். அருணா தியாகராஜனும், வீணாவும் என்கூடப் பேசினாங்க. பட், பௌர்ணிமா கொடுத்து இருக்கிற காண்டாக்ட் நெம்பர் போகஸ். அந்த நெம்பர் நாட் இன் யூஸ்.''

''ஸோ... சூடாமணி தான் பௌர்ணிமா?''

''ஹண்ட்ரட் பர்ஸண்ட்.''

''தேங்க்யூ மிஸ்டர் சாய்குமார்... இந்தக் கேஸ்ல இருந்த முதல் குழப்பம் தெளிவாக கிட்டத்தட்ட பத்து நாளாகியிருக்கு. இனி பௌர்ணிமா யார்...? அவளுக்கு தலையில் எப்படி அடிபட்டது? அவளைத் தன்னோட மகள்ன்னு சொல்லிகிட்டு ஹாஸ்பிட்டல்ல கொண்டு

வந்து அட்மிட் பண்ணின அந்த வயதான நபரும். அந்த வயதான அம்மாவும் யார்? இந்தக் கேள்விகளுக்கு விடைகள் தேடணும்.''

கமிஷனர் விநாயகம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்து ஏர்போர்ட் கார் பார்க்கிங்கை நோக்கி நடந்தார். தன்னுடைய காரை நெருங்கும்போது, அவருடைய செல்போன் வைப்ரேஷனில் அழைத்தது.

எடுத்துப் பார்த்தார். காதுக்குப் பொருத்தினார். ''எஸ்.''

ஏ.ஸி. ஆரோக்கியராஜ் பேசினார்.

''ஸார்... வேளச்சேரியில் இருக்கிற ரெய்னி சீசன் மல்டிகுஷன் ரெஸ்டாரண்ட்டுக்கு முன்னாடி இருந்து பேசிட்டு இருக்கேன்.''

''என்கொயர் பண்ணீங்களா?''

''பண்ணினேன் ஸார்.''

''எனி யூஸ்ஃபுல் க்ளூஸ்...?''

''ஸாரி ஸார்...! அந்தப் பொண்ணோட போட்டோவைக் காட்டி இந்த ஏரியாவில் இருக்கிற ஆட்டோ டிரைவர்ஸ், கால்டாக்ஸி ட்ரைவர்ஸ், ரெஸ்டாரெண்ட்டில் வேலை பார்க்கிற எல்லார்கிட்டேயும் கேட்டுப் பார்த்துட்டேன். சம்பவம் நடந்து பல நாட்கள் ஆயிட்டதால யார்க்கும் அந்தப் பொண்ணைத் தெரியலை.''

''ஆரண்யா அவென்யூ போய்ப் பார்த்தீங்களா?''

''போனேன் ஸார்... அது ஒரு சின்ன குடியிருப்பு காலனி. அங்கேயும் போட்டோவைக் காட்டி விசாரணை பண்ணினேன். நோ... யூஸ் ஸார்.''

''மிஸ்டர் ஆரோக்கியராஜ்!''

''ஸார்...''

''நமக்குத் தகவல் கொடுத்த அந்த கால்டாக்ஸி ட்ரைவர் தனபாலைப் பற்றி நீங்க என்ன நினைக்கறீங்க...?''

''ஏன் ஸார்... சந்தேகப்படறீங்களா?''

''கொஞ்சம்.''

''எதனால அந்த சந்தேகம் ஸார்?''

''வாலண்டியராய் வந்து தகவல் தர்றான். ஒரு மாசத்துக்கு முந்தி டாக்ஸியில் ஏறின ஒரு பெண்ணோட முகம் அவ்வளவு ஸ்பஷ்டமாய் ஒருத்தனுக்கு ஞாபகம் வருமா...?''

''எனக்கும் அந்த சந்தேகம் இருக்கு ஸார்...''

''என்ன செய்யலாம் சொல்லுங்க...''

''போலீஸ் ஃபார்முலாவை அமல் படுத்த வேண்டியதுதான் ஸார்.''

''லாக்கப்புக்குக் கொண்டு வந்து தட்டலாம்னு சொல்றீங்களா?''

''ஆமா... ஸார்...''

''வேண்டாம்... ஒரு வேளை அவன் தப்பு பண்ணாதவனாய் இருந்துட்டா?''

''ஸார்! நகை தங்கமாய் இருந்தாலும் உரசிப் பார்க்கிறதுல எந்தத் தப்பும் இல்லை. தனபாலை அரஸ்ட் பண்ணிக் கொண்டாந்துடுவோம். மொதல்ல நல்ல விதமாய்க் கேட்டுப் பார்ப்போம். வழிக்கு வரலைன்னா ஃபர்ஸ்ட் ரேட் ட்ரீட்மெண்ட் கொடுப்போம். அதிலேயே உண்மை வெளியே வந்தாலும் வரலாம்...''

''ஓ.கே... அவனை அரஸ்ட் பண்ணுங்க...!'' விநாயகம் பேசிவிட்டு செல்போனை அணைத்தார்.

காரில் ஏறிக் கொண்டார்.

ஒரு மணி நேரப் பயணத்தில் கமிஷனர் ஆபீஸ் வந்தது. தன்னுடைய ஆபீஸ் அறைக்குள் நுழைந்து தன்னுடைய நாற்காலிக்குச் சாய்ந்து மினரல் வாட்டர் பாட்டிலைக் கையில் எடுத்தபோது கண்ட்ரோல் ரூமிலிருந்து அந்தச் செய்தி வந்தது. தண்ணீரைக் கூட குடிக்கத் தோன்றாமல் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு பதட்டமாய் எழுந்தார்.

‘‘எப்போ...?’’

‘‘.....’’

‘‘டாக்டர் வராகசாமிக்குச் சொல்லிட்டீங்களா?’’

‘‘..........’’

‘‘இதோ! நானும் புறப்பட்டேன்.’’

# 13

## நாகப்பாம்பின் விஷத்துக்கும், விரியன் பாம்பின் விஷத்துக்கும் ஏதேனும் வித்தியாசம் உள்ளதா?

நிறையவே உள்ளது. நாகப்பாம்பின் விஷம் பார்ப்பதற்கு ஆலிவ் ஆயில் மாதிரி இருக்கும். அதை ஒரு சிறிய பாத்திரத்தில் ஊற்றி காற்றுப்பட வைத்தால் சில விநாடிகளில் ஃபெவிகால் பசையைப் போல் கெட்டித்துப் போய்விடும். நாகப்பாம்பு ஒரு மனிதனைக் கோபமாய்க்

கடிக்கும்போது 200 மில்லி கிராம் விஷத்தைப் பீய்ச்சுகிறது. எனினும் ஒரு ஆரோக்கியமான மனிதனைக் கொல்ல வெறும் 17 மில்லி கிராமே போதும். இந்த விஷம் முதலில் மனிதனின் கால்கள், அப்புறம் கழுத்து, நாக்கு, உதடு, தொண்டை என்று வரிசையாய்த் தாக்கி, கடைசி யில் சுவாச மண்டலத்தைப் பாதித்து மரணத்தை உண்டாக்கும். ஆனால், விரியன் விஷம் வேறு மாதிரி. பார்ப்பதற்குக் கண்ணாடி மாதிரி அமிலத் தன்மையோடு இருக்கும். தொட்டுப் பார்த்தால் வேப்பம் பிசினைப் போல் இருக்கும். இது ஒரு மனிதனைக் கடிக்கும்போது 145 மில்லி கிராம் விஷத்தைப் பீய்ச்சி விடுகிறது. ஆனால், ஒரு மனிதனைக் கொல்ல 42 மில்லி கிராம் விஷமே போதுமானது. விரியன் விஷம் ரத்தச் சிவப்பணுக் களை சேதாரப்படுத்தி, ரத்தம் உறைவதையும் தடுத்து, உடலின் ஒன்பது வாசல்களிலும் ரத்தப் போக்கை உண்டாக்கி இரக்கம் இல்லாமல் உயிரைப் பறித்து விடுகிறது.

குமுதா டி.வி.டி.யில் வீடியோ காட்சியைப் பார்த்து விட்டு சில நிமிடங்களுக்கு அப்படியே உறைந்து போனாள்.

'யார் இந்த மண்ணின் மைந்தன்?' சில விநாடிகளின் யோசனைக்குப் பிறகு அவளுக்கு சட்டென்று பிடிபட்டது.

'இது சங்கர் பிரபுவின் வேலையாகத்தான் இருக்கும்! என் மீது இருக்கும் கோபத்தை ஹேமாவின் மீது காட்டியிருக்கிறான்!'

'விடக்கூடாது! போய்க் கேட்க வேண்டும்!'

சி.டி.யை 'எஜக்ட்' செய்து வெளியே எடுத்து, அதைப் பத்திரப்படுத்திக் கொண்டு எழுந்தாள்.

ஒரு நிமிஷ புயல்வேக நடை.

சங்கர்பிரபுவின் அறை வந்தது.

கதவைத் தட்டி - அனுமதி கேட்காமலேயே உள்ளே நுழைந்தாள்.

ரிலாக்ஸாய் ஆங்கிலப் பத்திரிகை ஒன்றைப் புரட்டிய படி எக்ஸிக்யூட்டிவ் நாற்காலியில் சாய்ந்தபடி இருந்த சங்கர் பிரபு, குமுதாவைப் பார்த்ததும் புன்முறுவல் பூத்தார்.

''என்ன குமுதா...! தமிழ்ப் படத்துல கடைசியில் க்ளைமேக்ஸ்ல வர்ற வில்லி மாதிரி இவ்வளவு கோபமாய் வர்றே...? பேசினபடிதானே சம்பளம் கொடுத்திருக்கேன்.''

''உன்னோட கோபத்தையும், ஆத்திரத்தையும் என் கிட்டே காட்டு. என் குடும்பத்துல இருக்கிறவங்க மேல காட்டாதே!''

''நீ என்ன சொல்றே குமுதா...? உன் குடும்பத்துல யார் யார் இருக்காங்கன்னே எனக்குத் தெரியாது. நிலைமை இப்படியிருக்க நான் யார் மேல கோபத்தைக் காட்ட முடியும்...?''

''வேண்டாம்...! நீ கண்ணாடி வீட்ல இருக்கே... கல் எறிகிற வேலை வேண்டாம்.''

சங்கர் பிரபுவின் உதட்டில் ஒரு விஷமப் புன்னகை அரும்பியது. ''இது புல்லட் ப்ரூப் கண்ணாடி வீடு. ஒண்ணும் ஆகாது குமுதா.''

''இதோ பார்...! நான் நினைச்சா பத்தே நிமிஷத்துல, இங்கே போலீஸை வரவழைக்க முடியும். என்கிட்டே இருக்கிற செல்ஃபோன் வீடியோ ஆதாரத்தை அவங்க கிட்டே குடுத்து, நீ பண்ணின கொலைக்காக கைது பண்ண வைக்க முடியும்.''

''எனக்கும் அதே பத்து நிமிஷம் போதும் குமுதா. எதுக் குன்னு கேட்கறியா...? உன்னோட சிஸ்டர் ஹேமாவை சீரழிச்சு, சித்ரவதை பண்ணி சாகடிக்கத்தான். நீ போலீஸைக் கூப்பிடு. உன்கிட்டே இருக்கிற செல்ஃபோன் ஆதாரத்தை அவங்ககிட்டே குடு. அவங்க என்னைக் கைது பண்ணட் டும். என்னைக் கைது பண்ணின அடுத்த நிமிஷமே, என்னை ஜாமீன்ல வெளியே எடுக்க பத்து லாயர்ஸ் வருவாங்க. நான் வீசற பணம் ஜட்ஜோட டேபிள் வரைக்கும் போகும். ஒரு மணி நேரத்துக்குள்ளே எனக்கு நிபந்தனை இல்லாத ஜாமீன் கிடைக்கும். நான் திரும்பி வந்துடுவேன். ஆனா... உன்னோட சிஸ்டர் ஹேமா உனக்கு உயிரோடு திரும்பக் கிடைக்க மாட்டா...''

குமுதா அதிர்ந்தாள். வயிற்றுக்குள் ஒரு பயம் உற் பத்தியாகி ஏதோ ஜடப்பொருள் மாதிரி உருண்டது.

'இவன் துணிந்து விட்டான்!'

'போலீஸ் பயம் இல்லை!'

'இனி இவனை எப்படி டீல் பண்ணலாம்?'

சங்கர் பிரபுவின் புருவங்கள் ஒரு கேலிச் சிரிப்போடு உயர்ந்தன. ''என்ன... பார்க்கிற... உனக்கு மட்டும்தான் மூளை வேலை செய்யுமா?''

''என்னோட தங்கச்சியை ஒண்ணும் பண்ணிடாதே! அவ சின்னப் பொண்ணு.''

''சின்னப் பொண்ணுகளோடு விளையாடத்தான் எனக்குப் பிடிக்கும்... நீ டயத்தை வேஸ்ட் பண்ணாதே! போலீஸுக்கு போன் பண்ணு குமுதா.''

''இதோ பார்...! நான் என்னோட ஃபேமிலியை ஒரு நல்ல நிலைமைக்குக் கொண்டு வரணும் என்கிற ஒரே ஒரு காரணத்துக்காகத்தான் இப்படி ஒரு ப்ளாக் மெயில் வேலை பண்ணினேன். இது தப்புதான்... பட், எனக்கு வேற வழி தெரியலை. என்னோட காதலர் தைரியம் கொடுத்ததாலதான் துணிச்சலாய் இறங்கினேன்.''

''ஓ.கே.! உனக்கு வேலைதான் முக்கியம். இல்லையா?''

''ஆமா...''

''சரி... இந்த கம்பெனியில் நீ நிரந்தரமாய் வேலை பார்க்கலாம். பட். நீ எனக்கு உதவி பண்ணணும்.''

''என்ன...?''

''நான் சம்பந்தப்பட்ட அந்த செல்போன் வீடியோவை யார் எடுத்தது...?''

''அது எனக்குத் தெரியாது... முகிலனுக்குத்தான் தெரியும்.''

''நீ எனக்கு அதைக் கேட்டுச் சொல்லணும். அதுவும் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே...! இல்லேன்னா, உன்னோட ரெண்டு தங்கைகளில் ஒருத்தியான ஹேமாவை நீ என்னிக்குமே போட்டோவில்தான் பார்க்க வேண்டியிருக்கும்.''

''அ... அ.. அவளை ஒண்ணும் பண்ண வேண்டாம்!''

''நான் இப்ப கேட்டதெல்லாம் எனக்கு ஒரு மணி நேரத்துல கிடைக்கணும். இல்லேன்னா அவ உனக்குக் கிடைக்க மாட்டா. ஹேமாவோட மரணத்துக்கு

நான்தான் காரணம்ன்னு நீ போலீஸ்ல புகார் பண்ண முடியாது. காரணம், அந்தக் கொலைக்கு பொறுப்பேற்று குற்றத்தை ஒப்புக் கொண்டு போலீஸ்ல போய்ச் சரணடைய 'மண்ணின் மைந்தன்' என்கிற பேர்ல என்னோட ஆள் ஒருத்தன் தயாராய் இருக்கான். காரணமும் தயாராய் இருக்கு. ஹேமாவும் மண்ணின் மைந்தனும் காதலர்கள். கொஞ்ச நாளாவே, ஹேமா மண்ணின் மைந்தனை அவாய்ட் பண்றா. காரணம் கேட்டும் அவ சொல்லலை. அதனால மண்ணின் மைந்தனுக்குக் கோபம். ஹேமா, வேற யாரையோ லவ் பண்றதா அவனுக்குள்ளே சந்தேகம். அதனோட விளைவுதான் ஹேமா கடத்தப்பட்டு, கற்பழிக்கப்பட்டுக் கொலை. போலீஸ் கைது பண்ண இந்தக் காரணம் போதாதா என்ன?''

குமுதா அதிர்ந்து போனவளாய் சங்கர் பிரபுவைப் பார்த்தாள்.

''என்ன பார்க்கிறே...! இப்ப மணி பனிரெண்டரை. நான் ஒன்றரை மணிக்கு லஞ்ச் சாப்பிடுவேன். அதுக்குள்ளே செல்போன் வீடியோவை எடுத்த நபர் யார்ன்னு எனக்குத் தெரியணும். உன்னோட ஆள் முகிலனுக்கு இப்பவே போன் பண்ணு. முடிஞ்சா நானும் அவன் கிட்டே பேசறேன்.''

குமுதா வியர்த்து வழிந்து கொண்டு தன் உள்ளங்கையில் வைத்து இருந்த செல்போனை உயிர்ப்பித்து முகிலனின் எண்களை அழுத்தினாள்.

மறுமுனையில் ரிங் போயிற்று.

போயிற்று.

போயிற்று.

போய்க் கொண்டேயிருந்தது.

பிறகு ஒரு பெண்ணின் ரிக்கார்டட் வாய்ஸ் கேட்டது. 'நீங்கள் பேச விரும்பிய நபர் இப்போது தொடர்பு கொள்ளும் நிலையில் இல்லை.'

தொடர்ந்து நான்கைந்து தடவை முயற்சி செய்தும், அதே ரிக்கார்டட் வாய்ஸ் கேட்கவே, இடிந்து போக ஆரம்பித்தாள் குமுதா.

# 14

## பறவைகளில் கழுகின் பார்வை மட்டும் கூர்மையாய் இருப்பது ஏன்?

உயரப் பறப்பதிலும், உற்று நோக்குவதிலும் கழுகுக்கு நிகர் கழுகுதான். கழுகின் கண்களில் உட்புற மற்றும் வெளிப்புற அமைப்புகளில் நுணுக்கமான திசுக்கள் அமைந்து இருப்பதுதான் இவைகளின் பார்வைக் கூர்மைக்குக் காரணம். 1500 அடிக்கு மேற்பட்ட உயரத்தில் அனாயாச மாய்க் கழுகு வட்டம் அடித்துக் கொண்டிருக்கும் போது, அதன் பார்வை வியூகத்தில் சுமார் 100 கிலோ மீட்டர்க்கு மேற்பட்ட பரப்பு வியாபித்து இருக்கும். இந்தப் பரப்பில் உலவும் சின்னஞ்சிறு கோழிக் குஞ்சு மற்றும் எலி போன்றவை இதன் பார்வையிலிருந்து தப்புவது இல்லை. அதே நேரத்தில், எந்த அளவுக்குத் தன்னால் இரையைத் தூக்கிக் கொண்டு பறக்க முடியும் என்பதையும் கழுகு துல்லியமாய் கணித்து வைத்து இருக்கிறது.

கமிஷனர் விநாயகம் ஜி.ஹெச். போய்ச் சேர்ந்து காரிலிருந்து இறங்க, இன்ஸ்பெக்டர் ஒருவர் சல்யூட் அடித்துக் கொண்டே எதிர்பட்டார்.

“ஸார்...! நான் ரயில்வே போலீஸ் இன்ஸ்பெக்டர் சேவியர். கண்ட்ரோல் ரூமுக்குத் தகவல் கொடுத்தது நான்தான்...”

“குட் ஜாப்...! மொதல்ல பார்த்தது யாரு?”

“ஒரு போர்ட்டர்...”

“மரணம் எப்படி?” விநாயகம் நடந்து கொண்டே கேட்டார். “மே... பி... பாய்சன் ஸார்...”

“சூஸய்ட்...?”

“எஸ்... ஸார்... அந்த ஆளோட சட்டைப் பாக்கெட்ல ஒரு லெட்டர் இருந்தது.” சொன்ன இன்ஸ்பெக்டர் சேவியர். தான் பத்திரப்படுத்தி வைத்து இருந்த லெட் டரை எடுத்து விநாயகத்திடம் நீட்டினார்.

அதைப் படித்துக் கொண்டே நடந்தார் விநாயகம்.

*காவல்துறைக்கு,*

*எங்கள் கடைசி வணக்கம்.*

*வாழ்க்கையில் எத்தனையோ தப்புகள் செய் தோம். அதில் பல தெரிந்தே செய்தது. சில தெரியாமல் செய்தது.*

*எல்லாவற்றுக்கும் ஒட்டு மொத்தமாய்ச் சேர்த்து எங்களுக்கு நாங்களே தண்டனை கொடுத்துக் கொண்டோம்.*

*மரண தண்டனை.*

*எங்களுக்கு எதிரிகளும் இல்லை. நண்பர் களும் இல்லை.*

*எனவே எங்களின் மரணத்துக்கு யாரையும் பொறுப்பாக்க வேண்டாம். நாங்கள் யார் என்பதை வெளியுலகத்துக்கு சொல்ல விரும்ப வில்லை. எங்களுக்கு நீங்களே ஏதோ பெயர் வைத்து, ஒன்றாகச் சேர்த்து எரித்தோ புதைத்தோ விடுங்கள்.*

*இப்படிக்கு*
*ஒரு X ஒரு Y*

''தற்கொலைக் கடிதமே வித்தியாசமாய் இருக்கு...!'' விநாயகம் கடிதத்தைப் படித்துவிட்டு நிமிர, எதிரே டாக்டர் வராகசாமி தெரிந்தார்.

விநாயகம் கேட்டார்.

''என்ன டாக்டர்...! அவங்கதானா?''

''அவங்களேதான்... நோ டவுட் பௌர்ணிமா என்கிற சூடாமணியை என்னோட ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டு வந்து அட்மிட் பண்ணின அதே ஜானகிராமன், அதே கனகம்தான்...''

''பார்க்கலாமா?''

''வாங்க...''

மார்ச்சுவரிக்குக் கூட்டிப் போனார் வராகசாமி.

தகர மேஜைகளின் மேல் வரிசையாய் உடல்கள் தெரிய - மார்ச்சுவரி அறைச் சிப்பந்தி, பக்கம் பக்கமாய்ப் படுக்க வைக்கப்பட்டு இருந்த இரண்டு உடல்களின் மேல் இருந்த வெள்ளை விரிப்பை விலக்கினார்.

கடைவாயில் நுரை தள்ளிய நிலையில் அந்த நடுத்தர வயது ஆணும், பெண்ணும் உறைந்து போன கண் களோடு தெரிந்தார்கள்.

விநாயகம் தோள்களைக் குலுக்கி பெருமூச்சு விட்டார்.

''எப்படியும் போலீஸ்ல மாட்டிக்குவோம்ன்னு பயந்து போய் இப்படியொரு முடிவை எடுத்துட்டாங்க போலிருக்கு.''

''பட், எனக்கு ஒரு சின்ன நெருடல் கமிஷனர் ஸார்.''

''என்ன நெருடல்?''

''இது சூஸயிடாய் இருக்காதோன்னு.''

''லெட்டர் எழுதி வெச்சிருக்காங்களே?''

''அந்த லெட்டரை அவங்கதான் எழுதினாங்க என்பதை எப்படி உறுதிப்படுத்திக்கப் போறோம்...? வேற யாராவது அப்படியொரு லெட்டரை எழுதி வெச்சுட்டு அவங்களுக்கு விஷம் கொடுத்து மர்டர் பண்ணியிருக்கலாமே...?''

இன்ஸ்பெக்டர் சேவியர் குறுக்கிட்டார்.

''அப்படியிருக்க வாய்ப்பு இல்லை டாக்டர்.''

''எப்படிச் சொல்றீங்க?''

''இறந்து போன இந்த இரண்டு பேரும் சென்ட்ரல் ஸ்டேஷன்ல இருக்கிற வெயிட்டிங் ரூம்ல தங்கியிருந்ததையும், இட்லி வாங்கிட்டு வந்து சாப்பிட்ட கொஞ்ச நேரத்துல வாந்தி எடுத்து சுருண்டு விழுந்து செத்துப் போனதையும் ஒரு போர்ட்டர் பார்த்து இருக்கார். அந்த போர்ட்டரோட ஸ்டேட்மெண்ட்படி பார்த்தா இது சூஸயிட் தான்னு நம்ப வேண்டியிருக்கு ஸார்.''

''போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் எப்படி வருதுன்னு பார்ப்போம். இவங்க சாப்பிட்ட மீதி இட்லியை கலெக்ட் பண்ணீங்களா?''

''பண்ணி லேப்ல கொடுத்திருக்கேன் டாக்டர்... ரிப் போர்ட் இன்னும் ரெண்டு மணி நேரத்துக்குள்ள கிடைச் சுடும்.''

விநாயகம், தன் வலது உள்ளங்கையால் தனது பரந்த நெற்றியை அவஸ்தையாய் தேய்த்து விட்டுக் கொண்டார்.

''இந்த பௌர்ணிமா கேஸ் கலங்கின குட்டை மாதிரி ஆயிடுச்சு. என்ன நடக்குதுன்னு கெஸ் பண்ணவே முடி யலை. பௌர்ணிமாவுக்கும், இப்ப இறந்து போயிருக்கிற இவங்களுக்கும் என்ன சம்பந்தம்? பௌர்ணிமாவைத் தன்னோட மகள்ன்னு ஏன் பொய் சொல்லணும்...? பௌர்ணிமா கோமா ஸ்டேஜ்க்கு போகிற அளவுக்கு அவளைத் தாக்கியது யார்...?''

வராகசாமி குறுக்கிட்டார்.

''எல்லாத்துக்கும் மேலாய், பௌர்ணிமாவோட ரத்த ஓட்டத்தில் 'காட்மைன்' எஃகிற விலை உயர்ந்த போதை மருந்து கலந்து இருந்தது. அந்த போதை மருந்து உபயோகத்தை சாதாரணப் பணக்காரர்கள் நினைச்சுக் கூட பார்க்க முடியாது. 1 கிராம் போதை மருந்தோட விலை ரெண்டு லட்ச ரூபாய். அதை ஒரு தடவை டேஸ்ட் பார்த் துட்டா அதுக்கப்புறம் அந்தப் பழக்கத்தை விட முடி யாமல் சிரமப்பட்டு மூளையின் பாதிப்புக்கு உள்ளான வங்க நிறைய பேர். நாள்தோறும் கோடிக் கணக்கில் லாபம் வருகின்ற - உலகத்தின் பெரிய பணக்காரர்களால் மட்டுமே இந்த போதை மருந்தை உபயோகித்து சந் தோஷத்தை அனுபவிக்க முடியும். இந்த 'காட்மைன்' போதைப் பொருளில் உள்ள 'டெலிட் ஸாரோ' என்கிற ரசாயன வஸ்து மனித மனத்தில் இருக்கின்ற துன்பங் களையும், வேண்டாத எண்ணங்களையும் துரத்தியடிப்ப

தாய் ஒரு கான்செப்ட் இருக்கு. இந்தியாவுக்குள்ளே இந்த போதை மருந்து ஊடுருவியிருக்கிறதைப் பார்க்கும் போது, இங்கே இருக்கிற மெகா கோடீஸ்வரர்களில் யாரோ சிலர் இதை உபயோகிக்க ஆரம்பிச்சிருக் காங்கன்னு தோணுது. அந்த சிலர் யார்ங்கிறதைக் கண்டு பிடிச்சட்டா இந்த பௌர்ணிமாவைப் பற்றிய எல்லா உண்மைகளும் வெளியே வந்துடும்.''

வராகசாமி பேசப் பேச - அவருடைய செல்போன் கண் விழித்து மெல்ல ரிங்டோனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

ட்யூட்டி டாக்டர் மகேந்திரன்.

''சொல்லுங்க மகேந்திரன்.''

''டாக்டர்...! ஹாஸ்பிட்டலில் ஒரு அசம்பாவிதம் நடந்திருக்கு.''

''எ... எ... என்ன...?''

''அந்த பேஷண்ட் பௌர்ணிமா இப்போ உயிரோடு இல்லை. யாரோ ஆக்ஸிஜன் ட்யூப்பை கட் பண்ணி யிருக்காங்க...''

''மைகுட்னஸ்!'' என்று அதிர்ந்த வராகசாமி கோபத் தில் கத்தினார்.

''ட்யூட்டியில் இருந்த நர்ஸ் யாரு?''

''புஷ்பம்.''

''யாரோ வந்து ஆக்ஸிஜன் ட்யூப்பை கட் பண்ற வரைக் கும் அந்த புஷ்பம் என்ன பண்ணிட்டு இருந்தா...?''

''ட்யூப் கட்டான விஷயம் அவளுக்கே தெரியலை டாக்டர். கார்டியாக் மானிட்டர் பீப் சத்தம் கொடுத்துட்டு

ஆஃப் ஆன பிறகுதான் புஷ்பத்துக்கு விஷயம் தெரிஞ்சிருக்கு. பௌர்ணிமாவும் இறந்துட்டா...!''

''சே!'' நெற்றியைப் பிடித்துக் கொண்டு அப்படியே தளர்ந்து போய், அங்கிருந்த நாற்காலிக்குச் சாய்ந்தார் டாக்டர் வராகசாமி.

## 15

**ஈ, கொசு - இந்த இரண்டில் எது ஆபத்தானது? நோய்க்கிருமிகளைப் பரப்புவதில் எது டாப்?**

ஈக்கள்தான்! ஈக்களை 'வாமிட்டிங் இன்செக்ட்' என்று அழைப்பார்கள். இவை எந்த உணவுப் பண்டத்தின் மேல் உட்கார்ந்தாலும் சரி - தொடர்ச்சியாக வாந்தி எடுத்து தன் உடம்பில் இருக்கும் கழிவுகளை வெளியேற்றும். அந்தக் கழிவுகளில் லட்சக்கணக்கான நோய்க்கிருமிகள் இருப்பதால் அந்த உணவுப் பண்டத்தைச் சாப்பிடும் நபர்களை நோய்கள் தாக்குகின்றன. ஒரு ஈ சுத்தமான இடத்தில் இருந்தே 20 லட்சம் நோய்க் கிருமிகளைத் தன்னோடு எடுத்துச் செல்லும் என்றால், சுகாதாரமற்ற இடத்திலிருந்து எத்தனை லட்சம் நோய்க்கிருமிகளை எடுத்துச் செல்லும் என்பதைக் கணக்குப் போட்டுக் கொள்ளுங்கள்.

குமுதா, சங்கர் பிரபுவைத் தவிப்பாய்ப் பார்க்க, சங்கர் பிரபுவின் புருவங்கள் உயர்ந்தன.

''என்ன?''

''முகிலன் கிடைக்கலை...''

''இது எனக்குத் தேவையான பதில் இல்லை.''

''அவரைத் தொடர்பு கொள்ள முடியாதுன்னு செல் போன்ல ரிக்கார்டட் வாய்ஸ் வருது. நான் என்ன செய்யட்டும்...?''

''நேர்ல போய்ப்பாரு... அவன் எங்கே இருப்பான்னு உனக்குத் தெரியாதா என்ன...?''

''இன்னிக்கு அவர் சென்னையில் இல்லை. ஏதோ ஒரு வேலை விஷயமாய் காஞ்சிபுரம் வரைக்கும் போகணும்ன்னு சொல்லிட்டு இருந்தார்.''

''காஞ்சிபுரம் என்ன கனடாவிலா இருக்கு - தொடர்பு கொள்ள முடியாமல் போறதுக்கு...? இந்தக் கதையெல்லாம் என்கிட்டே வேண்டாம். உனக்கு ஒரு மணி நேரம் அவகாசம் கொடுத்திருக்கேன். அதுக்குள்ளே நான் கேட்ட கேள்விக்கு உன்கிட்டேயிருந்து எனக்குச் சரியான பதில் வரணும். இல்லேன்னா, நீ உன்னோட தங்கச்சி ஹேமாவை மறந்துட வேண்டியதுதான். போ... போய் உன்னோட கேபின்ல உட்கார்ந்து முகிலனைப் பிடிக்க செல்போன்ல ட்ரை பண்ணிக்கிட்டேயிரு...''

குமுதா நொறுங்கிப் போன இருதயத்தோடு அறையினின்றும் வெளிப்பட்டாள். தன்னுடைய கேபினுக்குள் போய் உட்கார்ந்து கொண்டவள் மறுபடியும் நான்கைந்து தடவை முகிலனுக்கு முயற்சி செய்தாள். அதே ரிக்கார்டட் வாய்ஸ். 'தற்சமயம் இந்த எண்ணை நீங்கள் தொடர்பு கொள்ள முடியாது!'

'என்ன செய்யலாம்?'

கன்னத்தில் கை பதித்து கண்களை மூடி அப்படியே நாற்காலிக்குச் சாய்ந்துக் கொண்டாள் குமுதா.

திடும்மென்று செல்போன் ஒலித்தது.

'யார்... முகிலனா?'

ஆர்வமாய்ப் பாய்ந்து செல்போனை எடுத்துப் பார்த்தாள்.

அப்பா ரங்கநாதன்.

செல்போனைக் காதுக்கு ஒற்றினாள்.

''சொல்லுங்கப்பா...''

''ஷாப்பிங் காம்ப்ளக்ஸுக்கு போய் ஏதோ பர்சேஸ் பண்ணிட்டு வர்றேன்னு கிளம்பிப் போன ஹேமா இன்னும் வரலை. ஒன்பது மணிக்கே கிளம்பிப் போனா. இப்ப மணி ஒண்ணாகப் போகுது. அவளோட செல்லுக்கு போன் பண்ணினா ஸ்விட்ச் ஆஃப்ன்னு ரிக்கார்டட் வாய்ஸ் வருது. ஹேமா உனக்கு ஏதாவது போன் பண்ணிப் பேசினாளாம்மா?''

''இ... இ... இல்லையே!''

''எனக்கு பயமாயிருக்கம்மா.''

''ப... ப... பயப்படாதீங்கப்பா. அவ பர்ச்சேஸை முடிச்சுட்டு அப்படியே அவளோட ஃப்ரண்ட்ஸ் வீட்டுக்குப் போயிருப்பா.''

''நீயும் அவளுக்கு கொஞ்சம் போன் பண்ணிப் பாரம்மா.''

''பார்க்கிறேன்..! நீங்க கவலைப்படாம - டென்ஷன் படாமே இருங்கப்பா... ஹேமா கொஞ்சம் ஜாலி டைப். எதையும் சீரியஸாய் எடுத்துக்கமாட்டா. செல்போனை சரியானபடி சார்ஜ் பண்ணியிருக்கமாட்டா. அதான் ஸ்விட்ச் ஆஃப்ன்னு ரிக்கார்டட் வாய்ஸ் வருது.''

''நீ ஏம்மா ஒரு மாதிரி டல்லாப் பேசறே?''

''ஒண்ணும் இல்லேப்பா... இன்னிக்குக் கொஞ்சம் ஒர்க் லோடு அதிகம். க்ரூப் டிஸ்கஷன் வேற நடந்தது. அதான் டயர்டாய் இருக்கேன்...''

''லஞ்ச் சாப்பிட்டியாம்மா?''

''இனிமேதான்...''

''ஹேமாவோட போனுக்குக் கொஞ்சம் ட்ரை பண்ணம்மா.''

''நான் பார்த்துக்கிறேன்... நீங்க கவலைப்படாமே இருங்கப்பா'' கனத்த இதயத்தோடு செல்போனை அணைத்தாள் குமுதா...

## 16

### பன்றி இறைச்சியை உண்ணலாமா?

பன்றிகளில் இரண்டு வகை உண்டு. சாக்கடைக் கழிவுகளை உண்டு காலம் தள்ளும் கரும்பன்றிகள் ஒருவகை. பண்ணைகளில் வைத்து சுகாதாரமாய் வளர்க்கப்படும் 'யார்க் ஷயர்' எனப்படும் வெண்பன்றிகள் இன்னொரு வகை. இரண்டாவது வகையான யார்க்ஷயர் வெண்பன்றிகளின் இறைச்சியைத் தாராளமாய் உண்ணலாம். அமெரிக்க மற்றும் ஐரோப்பிய நாடுகளில் வாழும் மக்களின் தினசரி மெனுவில் பேக்கான், ஹேம், போஸ்ட்டன் பட், பிக்னிக், லார்ட் ஸாஸேக் போன்ற பன்றி இறைச்சி

அயிட்டங்கள் இருக்கத் தவறுவது இல்லை. அரை வேக்காட்டில் டின்களில் அடைக்கப்பட்ட பல்வேறு பன்றி இறைச்சிகள் அங்கே மார்க்கெட்டில் மலிந்து கிடக்கின்றன.

பௌர்ணிமா வெள்ளை விரிப்புக்குள் சுற்றப்பட்டு சடலமாய்த் தெரிய - அவளைச் சுற்றிலும் கவலையான முகங்களோடு டாக்டர் வராகசாமி, டாக்டர் மகேந்திரன், கமிஷனர் விநாயகம், ரிடையர்ட் டி.ஜி.பி. ஆனந்த தீர்த்தன் தெரிந்தார்கள். பாரன்ஸிக்கை முடித்துக் கொண்ட அதிகாரி ஒருவர் கமிஷனரை நெருங்கினார்.

''ஸார்! தரோவா எஸ்.சி. பார்த்துட்டேன். ஃபிங்கர் பிரிண்ட்ஸ் கலெக்ட் பண்ணியிருக்கேன். நாளைக்கு கம்பேரிஸன் பார்த்துட்டு ரிப்போர்ட் கொடுத்துடறேன்.''

வராகசாமி, நர்ஸ் புஷ்பத்தை வார்த்தைகளில் வறுத்து எடுத்துக் கொண்டிருந்தார்.

''ஏதோ கல்யாண மண்டபத்துக்குள் நுழையற மாதிரி யாரோ நுழைஞ்சு, விருந்து சாப்ட்டுட்டுப் போற மாதிரி ரொம்பவும் சுலபமா ட்யூப்பை வெட்டிட்டுப் போயிருக் கான். அதுவரைக்கும் நீ என்ன பண்ணிட்டு இருந்தே..? செல்போன்ல யார்கிட்டேயாவது அரட்டை அடிச்சுட்டு இருந்தியா...?''

''இ... இ... இல்ல டாக்டர்...''

''என்ன இல்லை... நானும் உன்னை ரொம்ப நாளாவே நோட் பண்ணிட்டுத்தான் இருக்கேன். நீ அடிக்கடி ஐ.ஸி. யூனிட்டை விட்டு வெளியே வந்து செல்போன்ல யார் கூடவோ பேசிட்டிருக்கே... என்னோட ரூம்ல இருக்கிற டி.வி. சர்க்யூட்டை உனக்குப் போட்டுக் காட்டவா...?''

''ஸாரி டாக்டர்...''

''என்ன ஸாரி... உன்னை மூணு மாசத்துக்கு சஸ் பெண்ட் பண்ணியிருக்கேன். சஸ்பென்ஷன் மெமோவை வாங்கிட்டுப் போய்கிட்டேயிரு...'' நர்ஸிடம் பொரிந்து தள்ளிவிட்டு, கமிஷனர் விநாயகத்திடம் திரும்பினார்.

''பௌர்ணிமாவோட பாடியை 'க்ளைம்' பண்ணி வாங் கிட்டுப் போக இப்போதைக்கு யாரும் இல்லை. பாடியை என்ன பண்ணலாம்ன்னு உங்க டிபார்ட்மெண்ட் தான் சொல்லணும். ஈஸ் தேர் எனி ஃபார்மாலிட்டீஸ்?''

''சர்ட்டன்லி'' என்றார் விநாயகம். ''பௌர்ணிமா உண்மையிலேயே யார்...? இவளுடைய கொலைக்குப் பின்னால் யார் இருக்கிறார்கள்? 'காட்மைன்' போதை மருந்தை பௌர்ணிமா கான்ஸ்யூம் பண்ணியிருக்கிறாள். இந்த போதை மருந்து இவளுக்கு எப்படிக் கிடைத்தது...? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் சரியான பதில் கிடைக் கிறவரை பாடியை டிஸ்போஸ் பண்ண முடியாது. பாடியை - அட்லீஸ்ட் ஒரு வார காலத்துக்காவது ப்ரஸர்வ் பண்ணியாகணும்.''

''அதுக்கு இந்த ஹாஸ்பிட்டலில் ப்ரொவிஷன் இல்லையே...! ஜி.ஹெச். தான் கொண்டு போகணும்...''

''கொண்டு போயிடலாம். அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளை ஏ.ஸி. ஆரோக்கியராஜ் பண்ணிடுவார்.''

ஆனந்ததீர்த்தன் தன் கையில் வைத்து இருந்த துண்டுப் பேப்பர் ஒன்றை கமிஷனரிடம் நீட்டினார்.

''இந்தப் பேப்பர் கட்டிங்கை 'டுமாரோ இந்தியா' என்கிற டெய்லி பேப்பரிலிருந்து எடுத்தேன். 'காட் - மைன்' போதை மருந்தைப் பற்றி எழுதியிருக்காங்க. படிச்சுப் பாருங்க. உங்க இன்வெஸ்டிகேஷனுக்கு உதவலாம்.''

கமிஷனர் விநாயகம் வாங்கிப் பார்த்தார்.

'காட் - மைன் ட்ரக்ஸ் இன் இண்டியா' என்ற தலைப் புக்குக் கீழே - செய்தி பத்தி பத்தியாய் ஓடியிருந்தது. படிக்கப் படிக்கத் தமிழாக்கம் மனதில் ஓடியது.

'சொர்க்கத்தின் முகவரி' என்று செல்லமாக அழைக் கப்படும் காட் - மைன் போதை மருந்து இப்போது இந்தியாவில் காலடி எடுத்து வைத்துள்ளது. துபாய், சிங்கப்பூர், அமெரிக்கா போன்ற நாடுகளில் உள்ள மெகா கோடீஸ்வரர்களைப் போதையில் தாலாட்டி சந்தோஷப் படுத்திக் கொண்டிருந்த காட் - மைன் போதை மருந்து இப்போது, மும்பை, டெல்லி, கொல்கத்தாவில் சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு சென்னையில் அடி எடுத்து வைத்து தன் அரங்கேற்றத்தை ஆரம்பித்துள்ளது. இந்த 'காட்-மைன்' எங்கிருந்து, எப்படி யாரால் வருகிறது என்பதைக் கண்டுபிடிக்க போதை மருந்து ஒழிப்புத் துறையின் டைரக்டர் அரவிந்தகுமார் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார். அவருடைய முயற்சிக்குப் பலன் கிடைக்குமா என்பது போகப் போகத்தான் தெரியும்' கமிஷனர் தொடர்ந்து அந்தப் பேப்பர் கட்டிங்கில் இருந்த செய்தியைப் படித்துக் கொண்டிருந்த விநாடி -

ஆனந்ததீர்த்தனின் செல்போன், ரிங்டோனை வெளி யிடாமல் - வைப்ரேஷனில் அதிர்ந்தது.

எடுத்து, அழைப்பது யார் என்று பார்த்தார்.

சங்கர் பிரபு.

முகத்தில் எந்தவிதமான சலனத்தையும் காட்டிக் கொள்ளாமல் இயல்பாய் மனைவியிடம் பேசுவது போல் - பேசினார்.

''கமலம்! நான் இப்ப ஒரு மீட்டிங்ல இருக்கேன். பத்து நிமிஷம் கழிச்சு நானே பேசறேன்...''

மறுமுனையில் சங்கர் பிரபு மெல்லச் சிரித்தார். ''புரியுது அங்கிள்...! உங்க மீட்டிங்கை முடிச்சுட்டு நேரா என்னோட ஃபார்ம் ஹவுஸுக்கு வந்துடுங்க. உங்களுக் காக கட்டிலில் ஒரு பெண்மானும், டைனிங் டேபிளில் காட்டு மானும் வெயிட் பண்ணிட்டிருக்கு...''

''வந்துடறேன் கமலம்'' செல்போனை அணைத்தார் ஆனந்த தீர்த்தன். பேப்பர் கட்டிங்கை படித்து முடித்து இருந்த விநாயகம் அனலாய் பெருமூச்சு ஒன்றை வெளியேற்றியபடி நிமிர்ந்தார். அலுத்துக் கொண்டார்.

''நாடு எங்கே போயிட்டிருக்குன்னே தெரியலை... புதுசு புதுசாய் போதை மருந்துகள்... அதுக்கு அடிமை யாகும் கோடீஸ்வரர்கள்! போதை மருந்தை விற்றாலும் சரி, வாங்கினாலும் சரி, அதை உபயோகிச்சாலும் சரி - மரண தண்டனைன்னு ஒரு சட்டம் வரணும். அப்பத் தான் இதுக்கு ஒரு விடிவு காலம் பிறக்கும்...''

ஆனந்த தீர்த்தன் அதை ஆமோதிப்பதைப் போல் தலையசைத்தார். ''யூ ஆர் கரெக்ட் மிஸ்டர் விநாயகம்! எந்த நாட்டில் சட்டங்கள் கடுமையாய் இருக்கோ அங்கே குற்றங்கள் இல்லை. இந்தியாவிலும் சட்டங்கள் கடுமை யாக்கப்படணும். அப்பத்தான் குற்றவாளிகளோட எண் ணிக்கை குறையும்.''

வராகசாமி விரக்தியாய்ச் சிரித்தார். ''இந்தியாவில் எந்தச் சட்டம் வந்தாலும், அது ஏழைகளுக்கும், நடுத்தர மக்களுக்கும் மட்டும்தான். பணக்காரர்களும், அரசியல் வாதிகளும் இருக்கிற திசைப்பக்கம் கூட எட்டிப் பார்க் காது.''

## 17

**எல்லாக் குதிரைகளையும் ரேஸ் குதிரை களாகப் பழக்கி ஓட வைக்க முடியுமா?**

முடியாது! ரேஸில் ஓடுவதற்கென்றே ஒரு வகைக் குதிரைகள் உள்ளன. அதற்கு 'தரோ பிரட்' என்று பெயர். உலகம் முழுவதும் கோடிக் கணக்கில் பணம் புரளும் ரேஸ் கோர்ஸில் இந்த 'தரோ பிரட்' வகைக் குதிரைகள் மட்டுமே ஓட முடியும். அதாவது உடல் திடகாத்திரத்திற்குப் பெயர் போன துருக்கிய குதிரை. உடற்கட்டமைப்பில் நேர்த்தியான அரேபியக் குதிரை. வேகத்துக்குப் பெயர் போன இங்கிலாந்து குதிரை ஆகிய மூன்றின் கலப்பே இந்த 'தரோ பிரட்'. இதன் வம்சாவளிகள்தான் இன்றைக்கு உலகம் முழு வதும் ரேஸ் குதிரைகளாக ஓடிக் கொண்டிருக் கின்றன. பந்தயக் குதிரைகள் எந்த மாதத்தில் பிறந் தாலும், ஜனவரி முதல் தேதியில் பிறந்ததாகவே வயது கணக்கிடப்படும். ஏழாண்டுகள் வரை மட்டுமே ரேஸில் ஓடும். பிறகு கட்டாய ஓய்வு கொடுக்கப்பட்டுவிடும்.

சங்கர் பிரபு கொடுத்து இருந்த ஒரு மணி நேரக் கெடு முடிந்து போயிருச்சு. குமுதா முகிலனை செல்போனில் தொடர்பு கொள்ள முயன்று - அவனுடைய இணைப்புக் கிடைக்காமல் தோற்றுப் போயிருந்தாள்.

சங்கர் பிரபுவின் அறையை நோக்கி ஓடினாள். கதவில் இருந்த பஸ்ஸரை அழுத்தி பர்மிஷன் வாங்கிக் கொண்டு உள்ளே போனாள்.

லஞ்ச்சை முடித்து டிஷ்யூ பேப்பரால் வாயைத் துடைத்துக் கொண்டிருந்த சங்கர் பிரபு, ஒரு ஏப்பத்தை சன்னமாய் வெளியேற்றி விட்டுக் கேட்டார்.

''என்ன... உன்னோட ஆருயிர்க் காதலன் முகிலன் கிடைச்சானா?''

''இல்லை...''

''அவன் உயிரோடு இருக்கானோ இல்லையோ?''

குமுதா வெகுண்டு போய் சங்கர்பிரபுவை ஒரு தீப் பார்வை பார்க்க - அவன் பயப்படுவது போல் பாவ்லா காட்டிவிட்டுச் சிரித்தான்.

''ஓ... ஸாரி...! நான் ஏதோ எதார்த்தமாய்ப் பேசறதாய் நினைச்சு உளறிட்டேன். சரி...! நான் கொடுத்த ஒரு மணி நேரக் கெடு முடிஞ்சு போச்சு. மேற்கொண்டு என்ன பண்ணலாம் சொல்லு...''

''எ... எ... எனக்கு இன்னம் கொஞ்சம் டயம் வேணும்.''

''எவ்வளவு...?''

''சாயந்தரம் ஆறு மணி வரைக்கும்.''

''அதுக்குள்ள முகிலன் கிடைச்சுடுவானா?''

''கிடைச்சுடுவார்.''

''ஒருவேளை கிடைக்கலைன்னா?''

''கண்டிப்பா கிடைச்சுடுவார்.''

''உனக்கு அவ்வளவு நம்பிக்கை இருந்தா - நீ கேட்ட அவகாசத்தை நான் தர்றேன். சாயந்தரம் ஆறு மணி வரைக்கும் தான் டயம். அதுக்கப்புறம் நோ க்ரேஸ் டயம். 6.01க்கெல்லாம் என்னோட வேலையை நான் காட்ட ஆரம்பிச்சுடுவேன்.''

''அதுக்கு அவசியம் இருக்காது. ஆனா, என்னோட சிஸ்டர் ஹேமாவுக்கு...''

''ஒண்ணும் ஆயிடாது. இது ஒரு பிசினஸ் டீலிங் மாதிரி. நீ நியாயமாய் நடந்துகிட்டா நானும் அதே மாதிரி நடந்துக்குவேன். நீ என்னை ஏமாத்த நினைச்சா கடைசியில் ஏமாந்து போறது நீயாகத்தான் இருக்கும்! போ... போய் முகிலனுக்கு ட்ரை பண்ணு...''

''ஹேமாகிட்டே நான் பேச முடியுமா?''

''அது இப்ப முடியாது. சாயந்தரம் ஆறு மணிக்கு மேல் எனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிற மாதிரியான தகவல்களைச் சொல்லு. அந்த நிமிஷமே நீ ஹேமா கிட்டே பேசலாம்.''

''எனக்கு ஒரு சந்தேகம்.''

''என்ன...?''

''கூரியர் தபால்ல எனக்கு கேசட் வந்தது. ஹேமா இன்னிக்குக் காலையில்தான் கடத்தப்பட்டா; அதுக்குள்ள எனக்கு எப்படி கூரியர் வரும்?''

''வந்த கூரியர் பாய் எனக்கு வேண்டிய ஆள்தான். அது உண்மையான கூரியர் சர்வீஸ் கிடையாது. இது ஒரு மாயா பஜார். இங்கே நடக்கிற சம்பவங்களில் எது பொய், எது உண்மைன்னு கண்டு பிடிக்கத் தனித்திறமை வேணும்.''

குமுதா இடிந்து போனவளாய் அறையை விட்டு வெளியேறினாள். அவள் வெளியேறும் வரை மௌன மாய்ப் பார்த்துக் கொண்டிருந்த சங்கர் பிரபு தன் இண்ட்டர்காம் ரிஸீவரை எடுத்தான். தன் பி.ஏ.விடம் பேசினான்.

''சந்திரன்! ஒரு நிமிஷம் என்னோட ரூமுக்கு வந்துட்டுப் போ...!''

ரிஸீவரை வைத்துவிட்டு முப்பது விநாடிகள் காத் திருக்க - சந்திரன் கழுத்து டையை இறுக்கிக் கொண்டு உள்ளே வந்தார்.

''ஸார்...!''

''சந்திரன்! நான் என்னோட ஃபார்ம் ஹவுஸுக்குக் கிளம்பறேன். நான் இப்பவே கிளம்பிப் போறது குமுதா வுக்குத் தெரிய வேண்டாம். சாயந்தரம் ஆறு மணி வரைக்கும் நான் இதே அறையில் இருக்கிற மாதிரி அவள் நினைக்கணும்.''

''ஓகே... ஸார்... நான் பார்த்துக்கிறேன்.''

''கம்பெனியோட பின் பக்க கேட்கிட்டே என்னோட காரைக் கொண்டாந்துடு...''

''எஸ்... ஸார்...''

''அங்கிள் ஆனந்ததீர்த்தனுக்கு போன் பண்ணிப் பேசிட்டேன். அவரும் ஃபார்ம் ஹவுஸுக்கு வந்துடற தாய்ச் சொன்னார். நீயும் ஆபீஸ் முடிஞ்சதும் ஃபார்ம் ஹவுஸுக்குப் புறப்பட்டு வந்துடு...''

''எஸ்... ஸார்...''

''நீ போய்க் காரை ரெடி பண்ணு... நான் பின்னாடி வந்துட்டேயிருக்கேன்...''

''ஸார்.''

''என்ன?''

''குமுதா நம்ம வழிக்கு வந்துடுவாளா?''

''வந்துட்டேயிருக்கா!''

சொல்லிவிட்டுச் சிரித்தார் சங்கர் பிரபு.

## 18

**புலி மட்டும், மற்ற மிருகங்களையும் மனிதர்களையும் பின்புறமாய்த் தாக்குவது ஏன்?**

புலியின் நோக்கம் எதிரியை உடனே சாய்க்க வேண்டும் என்பதுதான். மிருகங்களின் 'ராஜா' வாக சிங்கம் இருந்தாலும், புத்திசாலித்தனத்தில் புலிதான் ராஜா. புலி தன் எதிரிகளையோ, இரை விலங்குகளையோ நேர்க்கு நேர் சந்தித்துப் போராடி நேரத்தை வீணாக்க விரும்புவதில்லை. அது மனிதனாக இருந்தாலும் மற்ற விலங்குகளாக இருந்தாலும் சரி - பின்பக்கமாய், பாய்ந்து எதிரியின் தண்டுவடத்தை இலக்காக வைத்துத் தாக்குகிறது. ஏனென்றால் தண்டுவடம் சற்றே பழுது அடைந்தாலும் எதிரியின் உடல் இயக்கம்

நின்றுவிடும். பிறகு என்ன... சாவகாசமாய் இழுத்துக் கொண்டு போய் வசதியான இடமாய்ப் பார்த்து தன் லஞ்ச்சையோ டின்னரையோ வைத்துக் கொள்ளும்.

தேக்கு மரங்களுக்கு நடுவில் விஸ்தாரமாய்ப் பரவியிருந்தது அந்த ஃபார்ம் ஹவுஸ் பங்களா.

மாலை நான்கு மணி சூரியனின் வெளிச்சம். மரங் களின் அடர்த்தியால் தடுக்கப்பட்டு விட்டதால் ஒட்டு மொத்த பங்களாவும் இருண்டு போன தினுசில் இருந்தது.

உள்ளறை ஒன்றில், சோபாக்களில் சாய்ந்தபடி ஸ்காட்ச் கண்ணாடி டம்ளர்களைக் கையில் பிடித்து இருந்தனர் சங்கர் பிரபுவும், ஆனந்ததீர்த்தனும்.

எதிரே இருந்த டி.வி.யில் செய்தி போய்க் கொண் டிருந்தது.

''சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் பயணிகள் தங்கும் ஹாலில் இன்று ஒரு முதிய தம்பதிகள் மர்ம மான முறையில் இறந்து கிடந்தனர். இட்லியில் விஷத்தைக் கலந்து சாப்பிட்டு இருப்பது தெரிந்தது. முதியவரின் சட்டைப் பையில் ஒரு கடிதம் இருந்தது. அந்தக் கடிதத்தில் தாங்கள் தற்கொலை செய்ய விரும்புவதாக எழுதி வைத்து இருந்தார்கள். கடிதத்தில் பெயர் முகவரி எதுவும் இல்லாததால் போலீஸாருக்கு இந்த சம்பவத்தில் சந்தேகம் ஏற்பட்டுள்ளது. இது உண்மையிலேயே தற்கொலையா, இல்லை கொலையா என்ற கோணத்தில் மேற்கொண்டு புலன்விசாரணை செய்து வருகிறார்கள்.''

ஒரு வாய் விஸ்கியை விழுங்கிய சங்கர் பிரபு தனக்கு எதிரில் உட்கார்ந்து இருந்த ஆனந்த தீர்த்தனை ஒரு நமட்டுச் சிரிப்போடு பார்த்தபடி சொன்னார்.

''பார்த்தீங்களா அங்கிள்! நம்மகிட்டே வேலை பார்த்த மல்லய்யாவுக்கும் அவனோட பெண்டாட்டி வடிவுக்கும் ஏற்பட்ட கதியை.''

''நமக்கு துரோகம் பண்ண யார் நினைச்சாலும், நம்ம கோர்ட்ல விதிக்கப்படற தண்டனை மரண தண்டனை தான்...!''

''நீங்க மட்டும் டாக்டர் வராகசாமியோட ஹாஸ்பிட்டலுக்கு அந்தக் காலை நேரத்துல போகாமே இருந்திருந்தா, மல்லையாவும் வடிவும் உங்க பார்வையில் பட்டு இருக்க மாட்டாங்க...''

ஆனந்த தீர்த்தன் சிரித்தார்.

''அது எப்படி நான் போகாமே இருப்பேன்... வாக்கிங் போய்ட்டு அப்படியே டாக்டர் வராகசாமியைப் பார்த்து பீ.ப்பி.யையும், சுகரையும் செக் பண்றது ரொம்பக் காலத்துப் பழக்கமாச்சே...''

''நல்லவேளையாய், உங்களுக்கும் எனக்கும் இருக்கிற இந்தத் தொடர்பு மல்லய்யாவுக்கும் வடிவுக்கும் தெரியலை. தெரிஞ்சிருந்தா பிரச்னை வேற மாதிரி போயிருக்கும்.''

''சங்கர்...!''

''சொல்லுங்க அங்கிள்!''

''நீ கொஞ்சம் அவசரப்பட்டுட்டே.''

''நீங்க எதைச் சொல்றீங்க...?''

''பௌர்ணிமாவை ஸ்மூத்தாய் ஹேண்டில் பண்ணி யிருக்கலாம்! அவளை அவசரப்பட்டு நீ தாக்கியிருக்கக் கூடாது.''

''இல்ல அங்கிள்...! இனிமே அவ உயிரோடு இருந்தா நமக்கு உபத்திரவம்தான். அவளோட காதலன் கதிரை நான், நம்ம கம்பெனி டாய்லட்ல வெச்சு சுட்டுக் கொன் னது அவளுக்கு எப்படியோ தெரிஞ்சிருக்கு... இது முதல் காரணம். ரெண்டாவது காரணம், நாம பண்ணிட்டு இருக்கிற காட் - மைன் போதை மருந்து பிஸினஸில் நிறைய ஸ்விண்டல் பண்ணியிருக்கா. மும்பையிலருந்து ஃப்ளைட்ல சென்னைக்கு வந்ததும் என்னை செல் போன்ல காண்டாக்ட் பண்ணினா. நான் அவளை வேளச்சேரியில் இருக்கிற 'ரெய்னி சீஸன் மல்டி குஷன் ரெஸ்டாரெண்ட்'டுக்கு வரச்சொன்னேன். உட்கார்ந்து பேசினோம். பத்து பர்ஸண்ட் கமிஷன் போதாதாம். 25 பர்சன்ட் வேணுமாம். இல்லேன்னா நம்ம க்ரூப்பி லிருந்து விலகிக்கிறாளாம். எனக்கு வந்த ஆத்திரத்தில் அங்கேயே அவளைப் போட்டுத் தள்ளலாம் போல் இருந்தது. ஆத்திரத்தை அடக்கிக்கிட்டு, ஃபார்ம் ஹவு ஸுக்கு வரச் சொன்னேன். நைச்சியமாப் பேசிகிட்டே பாலிமர் ராடை எடுத்து அவ பின் மண்டையில் ஒரு போடு போட்டேன். மூச்சு பேச்சு இல்லாமே விழுந்தா, செத்துட்டதாய் நினைச்சு மல்லய்யாவைக் கூப்பிட்டு பாடியை யார்க்கும் தெரியாமே எரிச்சு டிஸ்போஸ் பண் ணிடுன்னு சொன்னேன். அவனும், அவனோட பொண் டாட்டியும் பௌர்ணிமாவோட பாடியைப் பழைய அம்பாசிடர் கார்ல எடுத்துட்டுப் போனாங்க. விடியற நேரத்துல வந்து, பாடியை முட்டுக்காட்டுக்குப் பக்கத்துல சாம்பலாக்கி அந்த சாம்பல்மேல் மண்ணையும் போட்டு

பரப்பிட்டோம்ன்னு சொன்னாங்க. மல்லய்யா மேல இருக்கிற விசுவாசத்தின் காரணமாய் நானும் நம்பிட்டேன்.''

''ஆனா... நான் நம்பலைங்கய்யா!'' சொல்லிக் கொண்டே உள்ளறையிலிருந்து வெளிப்பட்டான் அந்த நூறு கிலோ தடியன். கையில் வைத்து இருந்த தட்டில், வறுத்த ஒரு முழுக்கோழி - வழியும் எண்ணெயோடு மினுமினுத்தது.

சங்கர் பிரபு சிரித்தான்.

''கொண்டய்யா எப்போதும் சந்தேகப் பேர்வழிதான். மல்லய்யா அவனோட ஊர்க்காரன்தான். இருந்தாலும் நம்பலை.''

கொண்டய்யா வறுத்த கோழியை டீபாயின் மேல் வைத்துக் கொண்டே சொன்னான்: ''டி.ஜி.பி. அய்யா...! மல்லய்யாவையும், அவனோட பொண்டாட்டியையும் ஊர்லயிருந்து கூட்டிட்டு வந்து அய்யாகிட்டே வேலைக் குச் சேர்த்ததே நான்தான். ஆரம்பத்துல ரெண்டு பேரும் விசுவாசமாய் ஒழுக்கமாய்த்தான் இருந்தாங்க. அப்புறம் பணத்தைப் பார்க்கப் பார்க்க அவங்கிட்டயிருந்த விசு வாசம் கொஞ்சம் கொஞ்சமாய்க் காணாமே போக ஆரம் பிச்சது. பௌர்ணிமாவை. அய்யா ஒரே அடிதான் அடிச் சார். அவ பேச்சு மூச்சு இல்லாமே விழுந்தா. அவளுக்கு உயிர் இருக்கா இல்லையான்னு மல்லய்யாதான் சோதிச்சுப் பார்த்தான். பார்த்துட்டு, செத்துட்டதாய்ச் சொன்னான். அதுக்கப்புறம் நான் சோதிச்சுப் பார்த்தேன். பௌர்ணி மாவுக்குள்ளே லேசாய் உயிர்த்துடிப்பு இருக்கிற மாதிரி என்னோட மனசுக்குப்பட்டது. அதையும் அய்யாகிட்டே சொன்னேன். 'மல்லய்யா, அவளைக் கொண்டு போய் எரிக்கிறதுக்குள்ள அவ உடம்புல உயிர் இருக்காது'ன்னு

அய்யா சொன்னார். ஆனா மல்லய்யாவோட நோக்கம் பௌர்ணிமாவை எப்படியாவது குணப்படுத்தி ஆந்திரா வுக்கு கூட்டிப் போய் பௌர்ணிமாவின் உதவியால போதை மருந்து தொழிலைப் பண்ணி பெரிய அளவில் பணக்காரன் ஆகணும்ங்கிறதுதான். பௌர்ணிமாவை ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணி குணப்படுத்தி ஊருக்குக் கூட்டிப் போக நினைச்சாங்க. அது நடக்கலை. பௌர்ணிமாவோட ரத்தத்துல 'காட் மைன்' போதை மருந்து கலந்து இருக்குன்னு டாக்டர் வராகசாமி கண்டு பிடிச்சதும் ரெண்டு பேரும் ஹாஸ்பிட்டலை விட்டு எஸ்கேப் ஆயிட்டாங்க... அவங்க அப்படி எஸ்கேப் ஆனாலும், அய்யா கையில மாட்டிக்குவோம்னு பயந்து போய் புருஷன் பொஞ்சாதி ரெண்டு பேரும் தற்கொலை பண்ணிகிட்டு செத்துப் போயிருக்காங்க. அய்யாவுக்கு உண்மையாய் இருந்திருந்தா இப்போ உயிரோடு இருந்து இருக்கலாம்.''

ஆனந்ததீர்த்தன் தட்டில் இருந்த கோழியின் தொடையைப் பிய்த்துக் கொண்டே கேட்டார்.

''ஹேமாவுக்கு மயக்கம் தெளிஞ்சிருச்சா?''

''இன்னும் கொஞ்ச நேரத்துல தெளிஞ்சுருங்கய்யா... நீங்க கோழியைச் சாப்பிட்டு முடிங்க. அதுக்குள்ளே மான்கறி பிரியாணியும் தயாராயிடும். அதை ஒரு கை பார்த்துட்டீங்கன்னா, ஹேமாவோடு ராத்திரி பூராவும் விளையாடலாம்.''

சங்கர் பிரபு சிரித்தான். ''அங்கிள்! எனக்கு இந்த லேடீஸ் விஷயத்தில் ஒரு இண்ட்ரஸ்ட்டே வர்றது இல்லை. நீங்க எப்படி இவ்வளவு வயசாகியும் இந்த விஷயத்தில்...?''

''இது மாதிரியான விஷயங்களுக்கு வயசு முக்கியம் இல்லை. மனசுதான்! மனசை இளமையாய் வெச்சு கிட்டா என்னிக்குமே சந்தோஷமாய் இருக்கலாம்.''

சங்கர் பிரபுவின் செல்போன் கூப்பிட்டது. எடுத்துப் பார்க்க - பி.ஏ. சந்திரன் பேசினார்.

''ஸார்... குமுதா உங்ககிட்டே பேசணுமாம்.''

''நீ என்ன சொன்னே?''

''நீங்க டைரக்டர்ஸோட போர்டு மீட்டிங்கில் இருக்கிற தாய்ச் சொன்னேன்.''

''அப்படியே ராத்திரி வரைக்கும் சொல்லிட்டிரு.''

''ஸார்... அவ ரொம்பவும் டென்ஷனாய் இருக்கா...''

''இருக்கட்டும்... என்னை இந்த ஒரு மாச காலமாய் எப்படியெல்லாம் பேசி டென்ஷன் படுத்தினா...''

''ஸார்... அவ போலீஸுக்குப் போயிடப் போறா...''

''போலீஸுக்கு அவ போகமாட்டா... அப்படியே போனாலும் டி.ஜி.பி. அங்கிள் மூலமாய்ப் பணத்தைக் கொட்டி எல்லா விஷயங்களையும் நமக்கு சாதகமாய் மாத்திக்கலாம். நீயும் எட்டு மணிக்கு மேல் புறப்பட்டு ஃபார்ம் ஹவுஸுக்கு வந்துடு.''

''சரி ஸார்...''

## 19

**மீன்களில் எத்தனை வகை இருக்கிறது?**

இன்றைய தேதிக்கு 17,000 வகை மீன்கள் இருப்பதாகக் கண்டறிந்து இருக்கிறார்கள்.

இருந்தாலும் இதை வகைப்படுத்த அவர்களால் முடியவில்லை. ஒரு வழியாக அமெரிக்கன் ஃபிஷ்ஷிங் சொஸைட்டி, மீன்களை மூன்று வகுப்புகளாகப் பிரித்து இருக்கிறது. இதில் ஒவ் வொரு வகுப்பிலும் பல கிளைகள், உப கிளைகள் என்று பிரிந்து எண்ணற்ற இனங்களாக இருக் கின்றன. மீனைப் பற்றிய ஒரு ரகசியம். உயிர் களின் பரிணாம வளர்ச்சியில், முதன் முதலில் உலகில் தோன்றிய முதுகெலும்புள்ள பிராணி மீன்தான்.

மாலை மணி ஐந்து முப்பது.

போதையின் தள்ளாட்டத்தில் இருந்த ஆனந்ததீர்த்த னுக்குப் பக்கத்தில் வந்து நின்றான் கொண்டய்யா.

''அய்யா!''

''ம்...''

''அந்தப் பொண்ணு ஹேமாவுக்கு மயக்கம் தெளிஞ் சுடுச்சு. கண்ணை முழிச்சு சுத்தும் முத்தும் பார்த்துட்டு இருக்கா.''

அவர்க்குப் பக்கத்தில் இருந்த சங்கர் பிரபு போதை யில் கோணலாய்ச் சிரித்தான். ''போங்க அங்கிள்... கல்யாணப் பொண்ணு மறுபடியும் தூங்கிடப் போறா.''

ஆனந்ததீர்த்தன் போதையில் இருந்தாலும் ஸ்டெடி யாய் எழுந்து நின்றார். ''இனி விடிகிற வரைக்கும் அவளுக்கும் தூக்கம் கிடையாது: எனக்கும் தூக்கம் கிடையாது.''

''அங்கிள்! ஒரு விஷயம்.''

''என்ன...?''

''விடியும் போது அவ உயிரோடு இருக்கக்கூடாது.''

கொண்டய்யா குறுக்கிட்டான். ''அந்த வேலையை நான் பார்த்துக்கிறேன்ய்யா...''

ஆனந்ததீர்த்தன் சற்றுத் தொலைவில் தெரிந்த அவுட் ஹவுஸை நோக்கிப் போனார். உடம்பில் ஒரு இளைஞ னின் துள்ளல்.

அடர்த்தியான அந்தக் காட்டுப் பகுதியில் சூரியனின் அஸ்தமனம் சீக்கிரமே நிகழ்ந்து விட்டதால் சுற்றுப்புறம் இருட்டியிருந்தது.

அவுட் ஹவுஸின் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனார். ஒரு ஜீரோ வாட்ஸ் விளக்கு அந்த அறையில் மங்கலான வெளிச்சத்தை நிரப்பி வைத்திருக்க -

கட்டிலில் ஹேமா மல்லாந்து படுத்து இருந்தாள். அவளுடைய கைகளும் கால்களும் கட்டிலோடு சேர்த் துக் கட்டப்பட்டு இருந்தன. அவள் சுய உணர்வோடு இருக்கிறாள் என்பதற்கு அறிகுறியாக, அவளுடைய விழிகள் பரபரவென்று சுழன்றன.

ஆனந்த தீர்த்தன் அவளுக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்தார். கன்னத்தை மெல்ல வருடிக் கொண்டே கேட்டார்.

''இதோ பார்...! நான் சொன்னபடியெல்லாம் நடந்து கிட்டா உனக்கு எந்தப் பிரச்னையும் இருக்காது. இல் லேன்னா இப்ப நீ இருக்கிற இடத்துக்கு உன்னோட அக்கா குமுதாவையோ, உன்னோட தங்கச்சி ஜமுனா வையோ கொண்டு வந்துடுவோம்.''

ஹேமாவின் விழிகள் பீதியில் சுழன்றன.

''வே... வேண்டாம்...''

''வேண்டாம்ன்னா நான் சொல்றபடி நடந்துக்கணும்.''

''ந... ந... நடந்துக்கிறேன்.''

''குட்.''

ஹேமா சோர்வாய், ''எனக்குப் பசிக்குது... நான் ஏதாவது சாப்பிடணும்...'' என்றாள்.

''இதோ...!'' சொன்ன ஆனந்ததீர்த்தன் கொண்டய்யாவுக்கு செல்போனில் தகவல் கொடுக்க - அவன் அடுத்த ஐந்து நிமிடத்திற்குள் சிக்கன் பிரியாணி வாசனையோடு உணவுத் தட்டைக் கொண்டு வந்தான்.

ஆனந்ததீர்த்தன் அவளுடைய கயிற்றுக் கட்டுகளை அவிழ்த்துவிட - எழுந்து உட்கார்ந்தாள். உணவுத் தட்டை பக்கத்தில் நகர்த்தி வைத்துக் கொண்டு வேகமாய் சாப்பிட ஆரம்பித்தாள்.

பத்தே நிமிடம்! ஹேமா சாப்பிட்டு முடித்தாள். வாஷ் பேசினில் போய் கையைக் கழுவி, வாயைத் துடைத்துக் கொண்டு வந்து உட்கார்ந்தாள்.

''இனி ஆரம்பிக்கலாமா?'' ஆனந்த தீர்த்தன் கண்ணைச் சிமிட்டினார்.

''நா... நான் என்ன செய்யணும்?''

''மொதல்ல என்னோட நெற்றியில் ஒரு முத்தம்.''

ஹேமா, ஆனந்ததீர்த்தனின் இரண்டு தோள்பட்டைகளின் மீதும் நடுக்கமாய் தன் இரண்டு கைகளையும் வைத்து அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

''என்ன பார்க்கிற? ஒரு முத்தம் வை. என்னோட ஸ்டார்ட்டிங் பாயிண்ட்டே இதுதான்.''

சில விநாடிகளின் தயக்கத்துக்குப் பிறகு, ஹேமா தன் முகத்தை அவருடைய முகத்துக்குப் பக்கத்தில் கொண்டு போய் - எதிர்பாராத ஒரு விநாடியில் -

தன் நெற்றியால் அவருடைய நெற்றியை 'ச்சட்டீர்' என்று பலமாய் இடித்தாள். ஒரு தேங்காயைத் தரையில் ஓங்கியடித்த மாதிரி சத்தம்.

ஆனந்ததீர்த்தனின் தலைக்குள் ஒரு பிரளயம் நிகழ்ந்த உணர்வு. கண்கள் இருட்டிக் கொண்டு போக நாக்கு சட்டென்று உலர்ந்தது. இருதயம் இருந்த பகுதியில் தீப்பிடித்து எரிவது போன்ற உணர்ச்சி.

பத்து விநாடிகள்தான் இந்த அவஸ்தை.

பிறகு - ஆனந்த தீர்த்தனின் உடம்பு பழைய நிலைமைக்கு மீண்டது.

திகிலும் பயமுமாய்ப் பார்த்தார் ஹேமாவை.

''எப்படியிருக்கு... என் காதல் மணாளா?''

''இது என்னான்னு தெரியலையா...? நான் கத்து வெச்சிருக்கிற வர்மக் கலைகளில் இது ஒண்ணு. 'திலகடி பந்தனம்'ன்னு பேர். 'திலகம்'ன்னா 'நெற்றி'. நான் என் நெற்றியால இன்னொருத்தர் நெற்றியின் மையப் புள்ளியைப் பார்த்து அடிச்சா உடம்புக்குள்ளே ஒரு பத்து செக்கண்டுக்கு பிரளயம் நடக்கும். இன்னொரு தடவை அந்தப் பிரளயத்தை நடத்திக் காட்டட்டுமா...?''

''நோ... நோ... ஓ... ஓ... ஓ... ஓ...'' என்று கத்திக் கொண்டே எழ முயன்றார் ஆனந்ததீர்த்தன்.

அவரால் முடியவில்லை. உடம்பை அசைக்க முயன் றால் சிறுநீர் வரும் போலிருந்தது.

'என்னாயிற்று?' கால் பெருவிரலில் ஏதோ அழுத்தம்.

குனிந்து பார்த்தார்.

அவருடைய இடது கால் பெருவிரலை, ஹேமாவின் வலது கால் பெருவிரல் அழுத்திப் பிடித்துக் கொண் டிருந்தது.

"விடு... விடு..." உடம்பில் தன் உதடுகளைத் தவிர வேறு எதையும் அவரால் அசைக்க முடியவில்லை.

ஹேமா உறுமினாள்.

"கிழவா! உன்னோட செல்போனை எடு!"

"எ... எ... எதுக்கு...?"

"எதிர்க் கேள்வி கேட்காமே எடு!"

"என்னால கையை அசைக்க முடியலை."

தன் பெருவிரலின் அழுத்தத்தை சற்றே குறைத்தாள் ஹேமா. ஆனந்த தீர்த்தனின் இடது கை அசைந்தது.

"இப்ப... எடு செல்போனை..."

எடுத்தார்.

"வெளியே இருக்கிற சங்கர் பிரபுவுக்கு போன் பண்ணி, அவனை உள்ளே வரச் சொல்லு."

"எ... எ.. எதுக்கு?"

"எதுக்கா? மூணு பேரும் விளையாடத்தான்... ம்... பண்ணு சீக்கிரம்... ரொம்ப நேரம் நான் இப்படி உன்னோட பெருவிரலை அழுத்திட்டிருந்தா உன்னோட மூக்கி லிருந்து ரத்தம் வடிய ஆரம்பிக்கும். பரவாயில்லையா?"

''போ... போன்... பண்றேன்.''

செல்போனில் எண்களை அழுத்திவிட்டு பேசினார்.

''ச... ச... சங்கர்... ஒரு நிமிஷம் உள்ளே வந்துட்டு போ...''

''என்ன அங்கிள்... ஏதாவது பிரச்னையா?''

''அ... அதெல்லாம் ஒண்ணுமில்லை... வா... சொல்றேன்...''

''நான் கொண்டய்யாவை அனுப்பட்டும்மா...?''

ஹேமா பெருவிரலை அழுத்தினாள்.

''வேண்டாம்... நீயே... வா... ப்ளீஸ்...''

''சரி... சரி... நானே வர்றேன்...!''

பல்லியின் வாயில் சிக்கிய பூச்சியாய் ஆனந்த தீர்த்தன் செயலற்றுப் போய் உட்கார்ந்து இருக்க. ஹேமா தன் தலையில் போட்டிருந்த அடர்த்தியான கொண்டை முடியை அவிழ்த்து அதற்குள் ஒளித்து வைத்து இருந்த பாம் சைஸ் பிஸ்டலை எடுத்துக் கொண்டாள். அதை சற்றே மறைவாய் வைத்துக் கொண்டு சங்கர் பிரபுவுக்காகக் காத்திருந்தாள்.

சங்கர் பிரபு வேக நடையில் உள்ளே வந்தான்.

''என்ன அங்கிள்...! மான் குட்டி மக்கர் பண்ணுதா?'' கேட்டவனின் முகம் சட்டென்று மாறியது.

'ஏதோ விபரீதம்!'

'அங்கிள் ஏன் இப்படி ஒரு திசையைப் பார்த்துக் கொண்டு வியர்த்து வழிந்தபடி உட்கார்ந்து இருக்கிறார்?'

'ஹேமாவின் பார்வையில் பயம் இல்லை!'

''ஏய்... அவரை என்ன பண்ணினே?'' சங்கர் பிரபு கேட்டபடி வேகமாய் முன்னால் வர, ஹேமா உறுமினாள். கையில் 'பாம் சைஸ்' பிஸ்டல் உற்பத்தியாகி உயர்ந்தது.

சங்கர் பிரபு அரண்டு போய் அப்படியே நின்றான்.

''நீ இன்னும் ஒரு அடி எடுத்து முன்னாடி வெச்சாலும் இந்த பாம் பிஸ்டலில் இருக்கிற 'நீடில் புல்லட்' உன்னோட இருதயத்துக்குள்ளே பாய்ஞ்சுடும். இந்த பாம் பிஸ்டலை 20 அடி தூர சுற்றளவுக்குள்ளேதான் உப யோகப்படுத்த முடியும்ங்கிற காரணத்தினாலதான் உன்னை உள்ளே கூப்பிட வேண்டியதாயிடுச்சு...''

சங்கர் பிரபு அதிர்ந்து ''கொண்டய்யா... ஆ... ஆ.. ஆ...!'' என்று வீறிட்டுக் கத்த - அவன் ''அய்யா!'' என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடி வந்தான்.

அறைக்குள் இருந்த நிலைமையைப் பார்த்தாலும் முதலில் திடுக்கிட்டு - பிறகு ஆவேசமானான். ''என் னடி...! பொம்மைத் துப்பாக்கியைக் கையில் வெச்சு கிட்டு எல்லாரையும் மிரட்டறியா...? இந்த மிரட்டலுக் கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். எங்கே சுட்றி... பார்க்கலாம்...''

கொண்டய்யா தன் நெஞ்சைக் காட்டிக் கொண்டே முன்னால் வந்தான்.

''டேய்... பக்கத்துல வராதே...! சுட்டுடுவேன்...''

அவன் நிற்காமல் வந்தான்.

பதினைந்து அடி...

பத்து அடி...

ஐந்து அடி...

''வராதே!''

வந்தான்.

பிஸ்டலின் ட்ரிக்கரை சுண்டினாள் ஹேமா.

நீடில் தோட்டா பாய்ந்தது.

விநாடி நேரத்தில் மார்பு முழுவதும் சிவப்பாகிச் சரிந்தான் கொண்டய்யா.

அறைக்குள் இப்போது அசாத்திய நிசப்தம்.

கொண்டய்யா மல்லாந்து விழுந்து - ரத்த சகதியில் உயிரை விட்டிருக்க... ஹேமாவின் கையில் இருந்த பாம் பிஸ்டல் சங்கர் பிரபுவைக் குறி பார்த்துக் கொண் டிருந்தது.

ஹேமா சிரித்தாள்.

''என்ன சங்கர்... நீயும் வர்றியா...? வா... வந்து, இது பொம்மை பிஸ்டலா இல்லையான்னு செக் பண்ணு...!''

சங்கர் பிரபு என்ன செய்வது என்று நின்ற இடத்தில் நின்றபடியே தவிப்பாய் யோசிக்க, ஹேமா ஒரு புன் னகையோடு பேச ஆரம்பித்தாள்:

''சங்கர்...! 'ஒரு சாதாரணப் பெண்ணுக்கு எப்படி இவ்வளவு தைரியம்?'ன்னு நீ யோசிக்கலாம். மொதல்ல நீ ஒரு உண்மையைப் புரிஞ்சுக்க. நான் சாதாரண ஒரு குடும்பப் பெண் கிடையாது. டெல்லி சி.பி.ஐ.யில் ட்ரெய்னியா ஜாய்ன் பண்ணியிருக்கேன். நீ நினைக்கிற மாதிரி - குமுதா என்னுடைய அக்கா கிடையாது. அதே மாதிரி ஜமுனாவும் என்னுடைய தங்கை கிடையாது. ரெண்டு பேருமே என்னோட கோ ட்ரெய்னீஸ்.

''அதே மாதிரி, ரங்கநாதன் எங்களுக்கு அப்பா கிடையாது. அவர் சிங்கப்பூர் போலீஸ் துறையில் அதிகாரியாய் இருந்து ரிடையரானவர். டெல்லி ஜனக்புரியில் அவர்க்கு வீடு.

இரண்டு மாதங்களுக்கு முன்பு உன் கம்பெனியில் வேலை பார்க்கும் ஒரு நபர் டெல்லி சி.பி.ஐ. அலுவலகத்துக்கு வந்து மேலதிகாரியிடம் ஒரு செல்போன் வீடியோ ஆதாரத்தைக் காண்பித்தார். அந்த செல்போன் வீடியோ காட்சியில் கதிர் என்ற ஒரு இளைஞனை சுட்டுக் கொன்று இருப்பது தெரிந்தது. வீடியோவை எடுத்தது அந்த இளைஞர்தான். அவர் யார் என்பதை நாங்க வெளியுலகத்துக்குச் சொல்ல மாட்டோம்.

''வீடியோ ஆதாரத்தை மட்டும் வெச்சுகிட்டு ஒருத்தரைக் கைது பண்ண முடியாது என்கிற காரணத்தினால் உன்னைக் கையும் களவுமாய்ப் பிடிக்கத் திட்டம் போட்டோம். அந்தத் திட்டப்படி ரங்கநாதன் அப்பாவாகவும், அவர்க்கு, குமுதா, ஹேமா, ஜமுனா என்று நாங்கள் மூவரும் மகள்களாகவும் மாறி சென்னையில் நடுத்தரக் குடும்பங்கள் வசிக்கும் ஒரு பகுதியில் குடியேறினோம். அக்கம் பக்கத்தில் இருக்கிற யார்க்கும் எந்தவிதமான சந்தேகமும் வந்துவிடக் கூடாது என்பதற்காக அந்தப் பாத்திரங்களாகவே மாறி நடித்தோம்.

''ஐ.டி. படிப்பு படித்திருந்த குமுதா உன் கம்பெனிக்கு வேலை கேட்டு அப்ளை பண்ணினாள். இண்ட்டர்வ்யூ கார்டும் வந்தது. குமுதா அந்த வீடியோ ஆதாரத்தைக் காட்டி ப்ளாக் மெயில் பண்ணி வலுக்கட்டாயமாய் வேலை வாங்கினாள். குமுதா மேல் உனக்கு இருக்கிற

கோபம் காரணமாய் எடுக்கிற நடவடிக்கைகள் கண்டிப்பாய் உன்னைச் சட்டத்தின் முன் குற்றவாளியாய் நிறுத்தும் என்று நம்பி செயல்பட்டோம். நான் கடத்தப்படுவேன்னு கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. இருந்தாலும் எச்சரிக்கையாகவே இருந்தேன். எப்பவுமே என்னோட அடர்த்தியான தலைமுடிக் கொண்டைக் குள்ளே ஒரு பாம் சைஸ் பிஸ்டல் இருக்கும்.

''அதே போல் சி.பி.ஐ. ட்ரெய்னிங்கில் எங்களுக்கு சொல்லித் தர்ற முதல் பாடமே வர்மாஸ் தான். வர்மக் கலை ஒரு பாதுகாப்புக் கலை. ஒரு பலசாலியான ஆளைக்கூட ஒரு பெண்ணால் வீழ்த்த முடியும். அதைத் தான் நான் பண்ணிக் காட்டினேன். அப்புறம்... எல்லாத் துக்கும் மேலாய் இன்னொரு விஷயம்... முகிலன் எங் களுடைய மேலதிகாரி. குமுதாவோட காதலன் கிடை யாது. இன்னும் கொஞ்ச நேரத்துல போலீஸ் ஸ்டேஷன்ல அவரையும் நீங்க பார்க்கப் போறீங்க...'' சொன்ன ஹேமா, தன் பிடியில் சிக்கியிருந்த ஆனந்த தீர்த்தனை சுவ ரோரமாய்ப் பிடித்துத்தள்ள அவர் தடுமாற்றமாய்ப் போய் விழுந்தார்.

''ரிடையர்ட் டி.ஜி.பி. ஸார்! உங்க செல்போனி லிருந்து நீங்களே போலீஸ் கமிஷனர்க்கு போன் பண்ணி இது எந்த ஏரியா, எப்படி வரணும்னு சொல்லிடுங்க...! சொல்லாட்டி என்ன நடக்கும் தெரியுமா? கொண்டய்யா வுக்குத் துணையாய் நீங்களும் போக வேண்டியது தான்...!''

''போ... போன் பண்ணிடறேன்...''

''இன்னிக்குத்தான் ஒரு நல்ல காரியம் பண்றீங்க...''

சங்கர் பிரபு தலைகுனிந்து உட்கார்ந்திருக்க, ஹேமா பிஸ்டலால் அவனை அளவெடுத்துக் கொண்டே அவனிடம் இருந்த செல்போனைப் பறித்தாள்.

குமுதாவுக்கு டயல் செய்தாள்.

''ஹலோ...''

''அக்கா...! நான் ஹேமா...''

''என்னாச்சு...?''



''நாம ஜெயிச்சுட்டோம்.''

''எனக்குத் தெரியும் உன்னைப் பத்தி... அதான் நான் கவலைப்படலை.''

''உனக்கு என்ன தெரியும் என்னைப் பத்தி...?''

''நீ பத்து ஆம்பிளைக்குச் சமம்.''

''போக்கா...! எனக்கு வெட்கமாயிருக்கு!''

நிஜமாகவே வெட்கப்பட்டாள் ஹேமா.

